### மந்திரம்

களிப்பு முகத்தில்[1] "ஓம் விடுவீர்" என்று சொல்லி விடவும்.

### இதற்கு யந்திரம்



இந்தப்படி யந்திரம் எழுதிக் கட்டத் தீரும்[2].

## பிள்ளை பிறந்த இரண்டாம் நாள் இரண்டாம் மாதம்.

(இரண்டாம் நாள், இரண்டாம் மாதம்) இரண்டாம் வருஷம் நூடரி என்னும் பேய் அணுகும்.

### இதன் குணம்

தலை நடுங்கும். பாகா(?)முழிக்கும். குடித்த பால் எடுக்கும்[3]. உடல் வெதுப்(ம்)பும். வயிறு மஞ்சள் போல் கழியும். உடம்பு துணுக்கிடும்[4]. சற்றே முழிக்கும். முலை உண்ணாது. பூனை சத்தமாய் இருக்கும்[5].

### இதற்கு பலி

மாவினால் பாவை பண்ணி, (அதற்கு) எருக்கம் பூச்சூட்டி, பாலின் (பால் கூட்டிய) சோறு, அகத்திக்கீரை, பொரி கரி(றி) பொரி(?), ஓட்டப்பம் (இவற்றை) கலசத்தில் இட்டு, மாவிளக்கு ஏற்றி வைத்து, எருக்கிலை கொண்டு மூடி, உச்சி நேரத்தில் நாற்சந்தியில் வைக்கவும். உ(ஞ)(நு)(ண)இலை துவைத்து, காடி

---

1. களிப்பு முகத்தில் = களிகூர்ந்த முகத்துடன்.
2. தீரும் = பேய் தோஷம் நீங்கும்.
3. பால் எடுக்கும் = பாலைக் கக்கும்.
4. துணுக்கு = அச்சக்குறி.
5. பூனைபோல் சத்தமிட்டு அழும் எனக் கருத்து.

விட்டுப் பிசைந்து, பிள்ளைக்குத் துவாலை இட்டுக் குளு(ளி)ப் பாட்டவும். பன்றி விட்டையும், புழுங்கலரிசித் தவிடும் கூட்டி புகை காட்டவும்.

### மந்திரம்

" ஹூ்ம பச(ஸ)வாய நம:". காலென்று சொல்லிவிடவும்.

### இதற்கு யந்திரம்



இந்தப்படி சுற்றிக் கா(க)ட்டவும். தீரும்[1].

மூன்றும் நாள், மூன்றும் மாதம், மூன்றும் வருஷம் பேனுகாடி என்னும் பேய் அணையும் (அணுகும்).

### இதன் குணம்

உடம்பு வெதுப்(ம்)பும். துணுக்கிடும். மயங்கி முழிக்கும். வய(யி)று கழியும். கைவிடாத வேதனைப்படும்[2].

### இதற்கு பலி

உளுந்து சோறும்[3], எள்ளுப்பொரியும், கீரைச்சாறும், மாவாலே பாவை செய்து, மாவிளக்கு ஏற்றி, செவ்வற(ர)ளிப் பூச்சூடி, புதுக்கலசத்தில் இட்டு[4], தீபம் தூபம் கொடுத்து, மாலை நேரம் நாற்சந்தியிலாவது சுடலையிலாவது (அவற்றை)

---

1. தீரும் = துடரிப்பேய் தோஷம் நீங்கும்.
2. கைவிடாத வேதனை = ஓயாத சங்கடம்.
3. உளுந்து கலந்த அன்னம்.
4. இட்டு = பாவையை வைத்து.

வைக்கவும். பிள்ளைக்குச் சிறுகிளா இலையைத் துவைத்து, துவாலை இட்டு, குளிப்பாட்டவும். கழுதை விட்டேயு(டையும்) தவிடும் புகை பிடிக்கவும்.

## இதற்கு மந்திரம்

"ஓம் ஹ்ஸ்ம் ஈ சு பரா" (ஈச்வரா)வென்று சொல்லிவிடவும்.

## இதற்கு யந்திரம்



இந்தப்படி எழுது காட்ட(எழுதிக்கட்ட)வும்.

நான்காம் நாள், நான்காம் மாதம், நான்காம் வருஷம் மாமுனி என்னும் பேய் அணையும்.

## இதன் குணம்

வய(யி)று கழியும். முலை யுண்ணாது. உச்சி குளி(ழி)யும். துணுக்கிடும். வய(யி)று பொருமும். குரு வேர்வை காணும். உள்ளறும்[1].

## இதற்கு பலி

மாவாலே பாவை செய்து, செவ்வற(ர)ளிப் பூச்சூடி(ட்டி), உளுந்த(து)ஞ் சோறும் நெய் வார்த்துப் பிசைந்து, நறுகேய(?) மாவிளக்கு ஏத்தி(ற்றி), தீபம் தூபம் கொடுத்து, புதுக் கலசத்

---

1. உளறும் என்று இருத்தல் மேல். 'உள்ளறும்' என்றே இருக்குமாஞல் மூர்ச்சையுறும் என்று அதன் பொருள்.

தில் புள்ளிக்(கள்) குத்தி, அதில் (அவற்றை) வைத்து, மாலை நேரம் நாற்சந்தியில் காளிகோட்டத்தை நோக்கி வைக்கவும். மாவிலை, புங்கிலை இடித்துத் தூவாலை இட்டு, குளு(ளி)ப்பாட்டவும். பசுவின் கொம்பும் பாம்புச் சட்டையும் புகை பிடிக்கவும்.

## இதற்கு மந்திரம்

" ஓம் ஸ்ரீ ஹ்ரு கேசவாய நம: " என்று சொல்லவும்.

## யந்திரம்



என்று எழுதிக் கட்டவும்.

ஐந்தாம் நாள், ஐந்தாம் மாதம், ஐந்தாம் வருஷம் **மா(சா)முண்டி** என்னும் பேய் அணுகும்.

## இதன் குணம்

உடம்பு வெதும்பும். கொட்டாவி கொள்ளும். சீரி(றி) அழும். துணுக்கிடும். வய(யி)று மாப்போலே கழியும். கால் கை சுருங்கி வலிக்கும். மற்றும் பல விகாரம் செய்யும்.

## இதற்கு பலி

மாவிலே பாவை செய்து, சந்தனம் கரைத்துத் தெளித்து, மஞ்சள் சீலை சாத்தி, குங்குமப்பூ, அற(ர)ளிப்பூச்சூடி(ட்டி), வெண் சோறு, பொரி கரி(றி)யும், பொரி நீரும், புதுக் கலசத்திற்குப் புள்ளி குத்தி அதில் இட்டு, மாவிளக்கு வைத்து, தூபம் தீபம் கொடுத்து, மாலை நேர(த்தில்)ம் " சுடலை நாயகா " என்று மாத்திரம் (மந்திரம்) சொல்லி வைக்கவும்.[1]

---

1. நாற்சந்தியில் அல்லது சுடலையில் வைக்கவும் என்று கருத்து.

" ஓம் கேசவாய நமஃ " என்று சொல்லி விடவும். தலைமாயாப்(?)* புகை பிள்ளைக்குக் காட்டவும்.

### யந்திரம்

" க்ஷ ஓ அ அ ஷ்ப " என்று எழுதிக் கட்டவும்.

ஆறும் நாள், ஆறும் மாதம், ஆறும் வருஷம் கொடி என்னும் பேய் அணுகும்.

### இதன் குணம்

உடல் குளு(ளி)ர்ந்திருக்கும். வய(யி)று தண்ணீர்போலக் கழியும். திடுக்கிடும். இளைப்பு வாங்கும்[1]. திக்கல்[2] எடுக்கும். சீறி குரல் விட்டு அழும். முலை யுண்ணாது. உடல் பிலிரில்(?) நாறும். (வேறு) விகாரம் பண்ணும்.

### இதற்கு பலி

பச்சரிசி மாவிலே இளநீர் விட்டுப் பிசைந்து பாவை செய்து, பஞ்சவற்(ர்)ணச் சோறு, கொளி மாங்கிஷம் (கோழி மாமிசம் இவற்றில்) செஞ்சந்தணம் தெளித்து, சிவத்து (சிவந்தி)ப்பூச் சூடி(ட்டி), புதுக் கலசத்திற்கு புள்ளி குத்தி, (அவற்றை) அதிலிட்டுவைத்து, நெய் விளக்கு ஏற்றி வைத்து, தீபம் தூபம் கொடுத்து, புளகாதாய் (பிள்ளை தாய் இவர் களின்) தலையைச் சுற்றி, மாலை நேரம் முச்சந்தியில் " ஓம் ஓம் ஓம் நமஃ " என்று (சொல்லி) வைக்கவும். நொச்சி இலை, அகத்தி இலை, (இவற்றை) இடித்து, பிள்ளைக்குத் துவாலை இட்டு விடவும். மயிர் மாணிக்கமும் தவிடும் புகை பிடிக்க வும். " கோவிந்தா " என்று சொல்லிவிடவும்.

---

* தலைமயிர் என்று இருக்கலாம். (எழாம் நாள் தோஷத்தின் முடிவில் புகையிடுவதையும் பார்க்கவும். தலைமயிர்ப்புகை என்று அங்கும் குறிக்கப் படுகிறது.)

1. இளைப்பு வாங்கும் = உடலிளைப்பு அல்லது களைப்புத் தோன்றும்.

2. மூச்சுத்திணறல்; அல்லது விக்கல் என்று இருக்கக் கூடும்.

## இதற்கு யந்திரம்

"ஓம் அங கிஷங் ழ ழ ழ ழ ழ ழ ஷெி ஓம் ஸ்ரீ" என்று எழுதிக் கட்டவும்.

ஏழாம் நாள், ஏழாம் மாதம், ஏழாம் வருஷம் எரிண்டி என்னும் பேய் அணுகும்.

## இதன் குணம்

உடல் வெதும்பும். வய(யி)று மாவுபோலக் கழியும். தலை பெரட்டிக்(புரட்டி) கொள்ளும். கொட்டாவி கொள்ளும். பழச்சாறும்(?) கண்ணைப் பிசைந்து அழுகும் (அழும்). துணுக்கிடும். இளைப்புக் காணும். மற்றும் பல விகாரம் செய்யும்.

## இதற்கு பலி

மாவால் பாவை செய்து, சாந்து சந்தனம், செவ்வரளிப்பூச் சூடி(ட்டி), வெண் சோறு—ஆச்சியம்[1]—பொரி நீர்[2]—எள்ளு—அப்பமும் வைத்து, புதுக் கலசத்திலிட்டு புள்ளி குத்தி, மாவிலே நெய் விளக்கு இட்டு, தீபம் தூபம் கொடுத்து, பிள்ளை தலையைச் சுத்தி(ற்றி), மாலை நேரம் பிரங்(புறங்)காடு[3] நோக்கி, "அரிஃ ஓம்" என்று தியானம் செய்து வைக்கவும். வில்லை (வில்வ) இலை, விளா இலை (இவற்றை) இடித்துப் பிள்ளைக்குத் துவாலை இட்டு, குளு(ளி)ப்பாட்டவும். பசு மாட்டுக் கொம்பும் தலை மயிரும் புகை பிடிக்கவும். "நாராயணய நமஃ" என்று மந்திரம் சொல்லி, பிள்ளை உடம்பைத் தடவி விடவும்.

### யந்திரம்



என்று எழுதிக் கட்டவும்.

எட்டாம் நாள், எட்டாம் மாதம், எட்டாம் வருஷம் பிரங்காள முனி என்னும் பேய் அணுகும்.

---

1. ஆச்சியம் = நெய்.
2. பொரி நீர் = நீரில் ஊறவைத்த நெற்பொரி.
3. புறங்காடு = மயானம்.

## இதன் குணம்

பிள்ளை உடல் வெதும்பும்[1]. பெருமூச்செறியும். வய(யி)று கடுத்துக் கழியும். சீறி அழும். முலை உண்ணாது. எதிர் எடுக்கும்[2]. (மேலும்) பல விகாரம் செய்யும்.

## இதற்கு பலி

மாவினாலே பாவை செய்து, கோத பொடி(?)[3] சாத்தி, வெள்ளற(ர)ளிப் பூச்சூடி(ட்டி), எளு......சோறும் எட்டு அப்பம், பொரி கரி(றி) பொரி நீர் வைத்து, மாவிளக்கு ஏற்றி, புதுக் கலசத்தில் புள்ளி குத்தி, அதில் (அவற்றை) வைத்து, தூபம் தீபம் கொடுத்து, ஊருக்கு வடக்கே முற்சந்தியில் மாலை நேரம்(த்தில்) வைக்கவும். குன்றி இலை, விளா இலை (இவற்றை) இடித்து, துவாலை இட்டுக் குளிப்பாட்டவும். நண்டொ(டோ)டுந்தவிடும்[4] புகை காட்டவும். " விஷ்ணவே நமஃ" என்று பிள்ளை முதுகைத் தடவி விடவும்.

### யந்திரம்



என்று எழுதிக் கட்டவும்.

ஒன்பதாம் நாள், ஒன்பதாம் மாதம், ஒன்பதாம் வருஷம் மாகாளி என்னும் பேய் அணுகும்.

## இதன் குணம்

உடம்பு வெதுப்(ம்)பும். கால் கை அசந்து (அயர்ந்து) வரும்[5]. வேற்றுக் குரலாய் பூனைபோல் சீறி அழும். வய(யி)று

---

1. வெதும்பும் = வெப்பங்கொள்ளும்.

2. எதிர் எடுக்கும் = கக்கும்.

3. கந்தப் பொடி என்று இருத்தல் வேண்டும். ஒன்பதாம் நாள் தோஷத்திற்கான பலியைப் பார்க்க.

4. நண்டின் மேல் ஓடும் அரிசித்தவிடும்.

5. அசதி அடைதல் அல்லது அயர்ந்து போதல்.

சிதங் கழியும். கண் விழிக்க மாட்டாது. முலை உண்ணுது. (வேறு) பல விகாரம் செய்யும். கொட்டாவி கொள்ளும். உடம்பு வெளுக்கும்.

## இதற்கு பலி

மாவினுல் பாவை செய்து, புனுகு, கெந்தப் பொடி, மல்லி கைப் பூச்சூடி(ட்டி), ஏழு அப்பம், வாழைப்பழம், நறு நெய்[1] மாவிளக்கு ஏற்றி, புதுக்கலசத்தில் புள்ளி குத்தி, அதில் வைத்து, பிள்ளையைச் சுற்றி, ஊருக்குக் கிழக்கே காளி கோட்டம்[2] நோக்கி, "ஸ்ரீயு கிலியு அய்யு" மென்று மந்திரம் சொல்லி வைக்கவும். துளசி இலை, கற்பூரவள்ளி இலை (இவற்றை) இடித்து, துவாலை இட்டு, பிள்ளைக்குக் (பிள்ளையைக்) குளு(ளி)ப்பாட்டவும். "நாராயண" வென்று தியானம் செய்து, பிள்ளை நெஞ்சை தடவவும்.

## இதற்கு யந்திரம்

பி ஸ ஹ ௵



ஞ ஞ ஒ ர ०

இந்தப்படி எழுதிக் கட்டவும்.

---

1. நறு நெய் = மணமுள்ள புத்துருக்கு நெய்.
2. கோட்டம் = கோயில்.

பத்தாம் நாள், பத்தாம் மாதம், பத்தாம் வருஷம் அர்த்த நாரி என்னும் பேய் அணுகும்.

## இதன் குணம்

உடல் வெதும்பும். வயிறு மாவுபோல் கழியும். சீறி அழும். முலை உண்ணாது. பால் எதிர் எடுக்கும்[1]. இளைக்கும், இருமல் எடுக்கும். சோகை மயக்கமாம்.

## இதற்கு பலி

மாவினால் பாவை செய்து, உளுந்த(து)ஞ் சோறும், இறைச்சிச் சாறும், எள்ளுப் பொரி, முட்டை பொரிச்சு துவைத்து, நெய் விளக்கு ஏற்றி, புது கலசத்திற்குப் புள்ளி குத்தி, அதில் (அவற்றை) வைத்து, தூப தீபம் கொடுத்து, மாலை நேரம் சுடலையில் "தெய்வ சிகாமணி" என்று சொல்லி வைக்கவும். மாவிலை, குளிதாமரை இலை (இவற்றைத்) துவைத்து, துவாலை இட்டு, குளிப்பாட்டவும். கரடி விட்டையும், காராம்பசு யீனுக் (ஈன்ற) கிடாரி பெறு(ருவுங்) கூட்டி, புகை பிடிக்கவும். ஜா(யா)ம நேரம்வரை வயிரவான்(?) என்று மந்திரம் சொல்லி, சிரஸிலிருந்து கீழ் நோக்கித் தடவி விடவும்.

## இதற்கு யந்திரம்

ஓம் ஹூ ட ஹூவ ஓம் என்று எழுதிக் கட்டவும்.

பதினொன்றும் நாள், பதினொன்றும் மாதம், பதினொன்றும் வருஷம் கண்டி என்னும் பேய் அணுகும்.

## அதன் குணம்

உடம்பு வெதுப்(ம்)பும்: கண் பூனை காட்டும்[2]. வாய் குளரி(றி) அழும். பி(பு)றங் கையினால் கண்ணைப் பிசைந்து அழும். சீறி துணுக்கிடும். வயிறு மாவுபோலக் கழியும்.

---

1. எதிர் எடுக்கும் = கக்கும்.
2. கண்ணில் பீளை கட்டும் என்று இருத்தல் வேண்டும்.

குடித்தப்பால் எதிர் எடுக்கும். முலை உண்ணாது. நரிக்குளிர்[1] வரும்.

## இதற்கு பலி

மாவில் கரும்புபால்[2] விட்டுப் பிசைந்து பாவை செய்து, மஞ்சள் சீலை உடுத்தி, வில்வபத்திரியையும், சந்தனமும் சாத்தி, பஞ்சவர்ணச் சோறும் மா(ன்) கறியும் பளம்பமானம்(?) இது(?) புது கலசத்திற்குப் புள்ளி குத்தி அதில் வைத்து, மாலைநேரம் நாற்சந்தியில் "மகா கணபதயே நம:" என்று மந்திரம் சொல்லி வைக்கவும்.

## இதற்கு யந்திரம்

ஓம் நமோ ஜ்வ ர பம ஓ ஓ ஓ பு பு பு

ஷ்ரு லு உ ரெ ஹ



இந்தப்படி எழுதிக் கட்டவும்.

பருத்தி இலையும் வெள்ளைக் காகா(க)ணத்தி இலையும் இடித்து, துவாலை இட்டு குளிப்பாட்டவும், நாயின் மயிர்(ரும்) கோரோசனையும் புகை பிடிக்கவும்.

"ஓம் அகோர பயி(பை)ரவா" என்று (சொல்லி) பிள்ளை முதுகைத் தடவி விடவும்.

---

1. நரிக்குளிர் = நளிர் குளிர், நடுக்கங்கூடிய குளிர்.

2. கரும்புபால் = கருப்பஞ்சாறு.

பன்னிரண்டாம் நாள், பன்னிரண்டாம் மாதம், பன்னிரண்டாம் வருஷம் அக்கினி என்னும் பேய் அணுகும்.

## இதன் குணம்

உடல் வெதுப்(ம்)பும். எரி..........கைவிடாது அழும். நுரையாய் கழியும். கைகால் குத்தும். சிறுக விழித்துப் பார்க்கும்.

## இதற்கு பலி

மாவில் வெல்லப்பாகு விட்டுப் பிசைந்து, பாவை செய்து, பஞ்சவர்ணச் சோறும், பாமானு(?) சுட்டப்பம்(மும்), செஞ் சந்தனம் கற்பூரம் தெளித்து, நெய் மாவிளக்கு இட்டு, கலசத் திற்குப் புள்ளி குத்தி, அதில் வைத்து விநாயகனுக்கு அவல், பொரி, தேங்காய், பழம், வெல்லம் (இவற்றை) நைவேத்தியம் செய்து, தூபம் தீபம் கொடுத்து, மாலை நேரம் நாற்சந்தியில் "ஓம் சிவதேவாய நமஃ" என்று தியானம் செய்து வைக்கவும். வேலிப்பருத்தி இலை துவைத்துத் துவாலை இட்டு குளிப் பாட்டவும்.

## இதற்கு யந்திரம்



என்று எழுதிக் கட்டவும.

"ஓம் அகோராம் பட்டு சுவாஹா"[1] என்று சொல்லி பிள்ளை முதுகைத் தடவி விடவும்.

---

1. ஓம் அகோர, ஓம் பட் ஸ்வாஹா என்றிருத்தல் மேல்.

## பிள்ளை பிணிக்கு பாவை தோஷத்திற்கு (பரிகாரம்)

(இனி செய்யுட்கள்)

1. குடித்தபாலும் தங்காது குரி(றி)யும்
உடம்பும் மிக நொந்தும்
இடித்து நெஞ்சும் உகந்திருக்கும்
மிகவே கொக்குச் செடிநாறும்
படிக்கும் கைகால் அழுக்கேறிப்
பதைத்து வருத்தப் படுமாகில்
துடிக்கும் சமநேரிடையாளே
சொல்லும் பாவை தோஷமிதே.

2. பச்சப்பனையின் ஓலையில் பக்ஷிராஜன் என்று எ(ெற)ழுதி
கொச்சைக் கொளி பெ.........ட்டு(?) குடம்நீர்
[சொரிந்து தான்கட்ட
அச்சமில்லைக் குளிமீடான ஆனநிலத்தின் விளாஇலையும்
மெச்ச சுடவை(த்)து நீருடனே விரவிக்
[குளிப்பாட்டிட நன்றே.

## (பக்ஷி தோஷங்களும் பரிகாரமும்)

### 1. வாய்ப்புள் தோஷத்தின் குணம்

3. வேப்பம் பூப்போல.........ன்றேடி
விடாதே வெப்பும் தலைவலியும்
பூப்போல மாந்திப் பிர(புற)ங்கையால்
பொருந்து மூக்கையே துடைத்து
கோப்பாய் நாவு வறண்டு தண்ணீர்
குடிக்கக் கண்டு பாதமிக்கும்
சேப்புங் கயமாமுகமா.........ச்செப்பும்
வா(ய்)ப்புள் தோஷமிதே.

4. செப்புத் தகடுதனில் சீரு(ரா)யமுரத பட்சியமுரத யென
தப்பாதுளழுதி மந்திரித்த தண்ணீர் சொரிந்து
[தான்கட்டி
சுப்பக்கோழி பலிஇட்டு அதன் ரத்தம் திலகமிட்டு
துப்பாமேனியன் உமைக்கு சொன்னு ரானுர்
[சொன்னுர்.

## 2. நீர்ப்புள் தோஷத்திற்கு

5. நெஞ்சு வறண்டு கண்குளிர்ந்து
நீடுமேல் மூச்சு(மு) உண்டாகி
பஞ்சுபோல கண் வெளிரி(றி)
பாலும் குடியாதே உள்ளறும்
துஞ்சாது இரவும் பகலுந்தான்
சுருங்க பண்டி மிகவேற்கிற
செஞ்சொற் கிள்ளை மொழிமாதே
செப்பும் நீர்ப்புள் தோஷமிதே.

6. பச்சை ஓலைதனில்வந்து ரீங்காரம் வரைந்து
பாங்குபெற பஞ்சுநூலாலே சுற்றி
அச்சமாப் பிரமடைநீர்.........ஞுதாஞ் சொரிந்து
அழகான செஞ்சேவல் பலிகொடுத்து
நிச்சயமா மெந்திரமும் தானேகட்டி நிகரில்லா
மருந்துதனை நிகழ்த்துங் காலை
வெச்செனவே விஷ்ணுக்கிரு(ரா)நதி குடியிநி நீர்
குடித்துவர வியாதி போமே.

## 3. தூங்கின புள்ளின் தோஷம்

7. வாங்கி உதகந்தனைக் குடித்து வயிறும்
கழிந்தே வாந்தியுமாய்ப்
பாங்கித்திரும்பி மிகப்பார்க்கும் பயமாய்
அழுகு(து)ம் வீசாணனும்
தாங்கித்துஞ்சம் புயலுமிசை சாய்ந்தால்
வீறிட்டு எழுந்திருக்கும்
தூங்கினப் புள்ளுத்தோஷமிது தோகா
உனக்குச் சொன்னேமே.

8. (வெள)வவ்வால் சிறகில் அருகம் வேர்
வைத்துச்சுருட்டி(?) குளிசமிட்டு
செவ்வெயதாகும் பலிகோழி செய்தே
கொடுத்துப் பின்மருந்து
நவ்விளியாய் கூவளேவேர் நாரிமுலைப்
பால்தனில் கொடுக்கத்
துவ்வின பவி(வ)ழ நகையாளே தூங்கின
புள்ளின் தோஷம் போம்.

## 4. காணுப்புள் தோஷத்திற்கு

9. உச்சியுடனே கண்குழியும் உண்ணும்
பாலும் தொ(த)ங்காது
பச்சைநிறமாய் வயிறு எடுக்கும் பறவைக்
குரலாய் சீறிஅழும்
வெச்சென்றிருக்கும் மேல்மாரும் எடுத்து
குடிக்கும் தண்ணீரை
கச்சை அடர்ந்த தனத்தாளே காணுப்
புள்ளின் குணந்தானே.

## இதற்கு (மருந்து)

10. ஆலவிழுது விடத்தலேவேர் ஆனகிழ்க்காய்
நெல்லியின் வேர்
கோலக்கன்னி அழியாப் பெண்ணூத்த(ற்ற)
நூலால் குளிசமிட்டு
சீலமஞ்சள் தான்தடவி சிர.........ன
கோழி பலிகொடுத்து
நீலவிழியாய் நீர்சொரிய நிற்குங்
காணுப்புளத் தோஷமே.

## குளிர் தோஷத்திற்கு

11. உச்சி குளிர்ந்து கண்குளிர்ந்து உயர்கழிச்சல் மிகவுண்டாய்
வெச்சென்றுடலும் மிக்ககாய்ஞ்சு வெளிரி(றி)க்
[குஞ்சி முடனுகும்
அச்சமுர(ற)வே மிகமாறி ஆபதாபப்பட்டு அலரி(றி)
நச்சைபோர் வேல்விழியாளே நவிலும் குளிர்
[தோஷமிதே.

## இதற்கு (மருந்து)

12. ஈமந்தன்னில் காட்டாத்தி எழுந்த பருத்தி பயத்தன்வேர்
ஆமை குளிசமதுகட்டி அணிநீர் சொரிய பாமடைநீர்
பேகமெ(மே)கோழி பலிகொடுத்து பிரமாய்ச் சுத்தி[1]
[போட்டக்கால்
தாமெ(மே)குழவி பிழைக்குமென்று தையல்காரனுர்
[சாத்தி(ற்றி)னரே.

---

1. புறமாய்ச் சுற்றி என்றிருத்தல் நலம்.

## எச்சில் தோஷத்திற்கு

13. உதிரமுங் கழிவதன்றியும் வாந்தியும் மிகவுண்டாகி
இதமோடு தலை எடாமலிருவிளி பீளை காட்டி
விதவிதமாக மேனி வெதும்பியே வருமேயானுல் நிச
மதுபே(எ)ச்சில் தோஷம.........னவே செப்பலாமே.

14. வேலா(ல)மரத்தின் புழுகூட்டை விரைந்து எ(தெ)டுத்து
[நூல்சுத்தி(ற்றி)
சீலமஞ்சளது து(த)டவி சிறக்க தூபந்தான் கொடுத்து
சாலமூன்று பிரமடைநீர் தங்காது எடுத்து மந்திரித்துக்
கோலச்சிரசில் தான்சொரிந்து குளிசங்கட்டி
[பலியிடுமே.

15. பலிதான் கோழிதலை சுத்தி(ற்றி)ப்
பின்பு துவாலைந்து கேளீர்
நலியாதொடி பரிக்கும்இலை நாட்டும்
நிலத்தில் விளாவாதல்
சலியாவில்லை இலையாதல் தானே
நீரில்இட்டு அதனை
மெலியாக்குழந்தை நீராட்டில் மி(மீ)ளும்
எச்சில் தோஷமிதே.

## தேரை தோஷம்

16. காலும் கரமும் மிகவளரி(வெளிறி) கட்டிப்
போட்டாப்போல் பின்னி
மேலும் வற்றி வெளுப்பாகி வேறுவிதமாய்
குரல் தொனியும்
சாலமுலையா(பா)ல் குடித்தாலும் சற்றும்
தேறுது இக்குழவி
நீலவட்ட விழிமாதே நிசமாந்
தேரைத் தோஷமிதே.

17. விகதாளி தலைசுருளி நல்ல
வேரைக் குளிசமிட்டு
தோகாய் குளத்தின் மடைநீரும்
தொகுத்த தேங்கனடி நீரும்

வாகாய்ச் சொரிந்து கோழிபலி வளமாய்
சுத்தி(ற்றி) வாழையடிப்
பாகாத்தேரை அய்ந்தனைப் பதமாய்
நெய்யி லெரித்துருட்டே. (?)

### முட்டுத் தோஷத்திற்கு

18. தொட்ட உடனே துணுக்கென்னும்
துஞ்சா தழுது துடிதுடித்து
நட்டுவிழியும் பஞ்சடஞ்சு நாவும்
வறண்டு நீர்தேடும்
தட்டுப்......... துட.........துங் குந்தருகா
வயிறு கழியுமெனில்
முட்டுத் தோஷமாகுமென முன்னோர்
உரைத்த முறையிதுவே.

19. வெற்றிலைப்பாகல் வேர் குளிசம் சேவல் பலியுந்தான் சுற்றி
வற்றாக்குளத்தின் பிரமடையிற்(ல்) வாரிநிறை
[மந்திரித்து
பெற்ற(ற)தாயின் மடியில் மைந்தன் பேணிவைத்து
[நீர்சொரிந்து
முற்றுமுந் தானியினால் மூன்றுதரமும் மந்திரியே.

### மாந்தமெட்டும்[1] வருமாறு

20. பெருகுமன்னை வய(யி)ற்று மந்தபெற்ற
பிள்ளை தனக்கு உண்டாய்
மருவும் வாலைமாந்தம் நீர்மாந்தம்
கணையால் வருமாந்தம்
வருமே அன்னஞ்சொ......மல(?)
வாந்திசெய்யும் பொரமாந்தம்
தருமேகட்டு மாந்தமுடன்
தன்னையுண்ணும் பாலமாந்தம்.

1. எண்வகை மாந்தங்கள்—வால மாந்தம், நீர் மாந்தம், கணை மாந்தம், செரியா மாந்தம், பொர மாந்தம், கட்டு மாந்தம், பால மாந்தம், உதிர மாந்தம் என்பனவாம். வால மாந்தம் என்பதற்குப் பதில் துட்டு மாந்தம் என்று பிறகு குறிப்பிடப்பட்டுள்ளது. வால மாந்தம் என்பதற்கே துட்டு மாந்தமென்று மற்றொரு பெயர் போலும்.

21. மாதவுதிர மந்தமதால் மருவி
முலைப்பால் உண்டதனுல்
சூதஅற(ர)ம்பைச்சனி......த்துவரை
அவரை கடலையுடன்
போத உண்ணுந் தென்னங்க(?)ப் பொருந்ாது
உளுந்து புசித்தக்காலாக
இதமாய் வருமே மாந்தமெட்டு மெனவே
முனியுந் தாமுரைத்தார்.

## 1. துட்டு மாந்தம்

22. பாலும் கழியும் பால் எடுக்கும்
பலித்திடும் வேறுவேருய்
சாலக்கணைக்கால் வெதும்பி இடுந்தலை
எடுத்திராமல் மாந்தும்
சிலந்தாயாரல......(?)ணமாய்கிகள்(?)
பொடுதலையின் காயும்
கோலமார் வசம்பு சுட்டுக்கட்டி
அரைத்துக் கொடுத்திடுமே.

## 2. நீர் மாந்தம்

23. தலையது நோவாய் முகமதுமினுக்குந்
தருகியே மலஞ்சிறுத்திட்டு
முலையது முகவாது உடலெல்லாம் புண்போல
மூத்திரம் கடுகடுத்து இறங்கும்
மலமது திரவுள்ளி கரிச்சாலை
வயங்குஞ் சாரு(று)மூக்கு
இலகுமாமணக் கெண்ணை(ணெய்) எரிக்கில்
நீர்மாந்த மேகும்.

## 3. கனை(ணை) மாந்தம்

24. இருமும் மூக்கால் நீர் வடியும் இடையு
மிடையும் சுரம்தோன்றும்
பொருமும் வய(யி)றும் இறைச்சல் உண்டாய்
போதக்கழியும் பலவீண(ன)ம்

செருமும்[1] உடலுமே மெலிந்து தலை
சோர்வே இருக்கவொட்டாது
தருமந் தனக்கு(க்) கண்மாந்தம் காணே
இதனை முத்தானரியே(?).

25. புங்குவெம்பு புளிநொச்சி பொடுதலை
வேலிப் பருத்தியுடன்
சங்கு கறுவேப்பிலை அவுரிச்சாறும்
பொன்னுங்கணி வேர்
அங்கு நார்தை யிர்க்கிலையும் துகும(?)
வகைக்குப் படி கூட்டி
பொங்கும் சட்டிதன்னில்(லி) இட்டு போத்த
தண்ணீர் நாழிவிடே.

26. விடுமே கடுகுரோகணியும் விரு(வரா)கனிந்
துப்பது கூட்டி
தொடுமே சிலைமுடிந்திட்டு துவளக்
கா(ய்)ச்சி எட்டொன்றும்
எடுமேசிலை மருந்தரைத்து இதமாய்க்
கரைத்துக் கொடுத்திடுகில்
ஓடுமே கணையின் மாந்தமும்தான்
ஒழிந்தே போகும் கண்டாயே.

## 4. செரியா மாந்தம்

27. மிக்கவெதுப்பும் தலைவலியும் மிகவே
வய(று)தான் ஊதி
தக்க வலமும் மாப்போல சாலக்
கழிந்தே அரைக்கணிட்டு
துக்கப்படுத்தும் தலைசோர்ந்து துவளுங்
கீரைத்தண்டு அது;போல
சிக்கென்றழ தங்களப முலைதேனே
செரியா மாந்தமிதே.

1. செருமும் = இருமும். (செருமல் = இருமல்).

28. வேலிப் பருத்திஇலை ஆட்டிப்பிழிந்து மிளகுவசம்பு சுட்டு
சாலஉள்ளி ஓர்சமனாய் தளர் வரைத்து நெய்யிலிடு
மேலும்எருமை வெண்ணை(ணெ)யினில் மிகவும் ஓமம்
[பெருந்தும்பை
சிலம்பிரவே எரித்து நக்கச்(?) செரியாமாந்தம்
[ஒழிந்திடுமே.

## 5. பொர மாந்தம்

29. ஏற்றே வ(யி)று மிக்க கழியும்
இடையிடையும் சுரம் தோன்றும்
தோற்றுதுடலும் மிகவற்றி தெரிந்தே
பலமும் குறைந்து வரும்
கூற்றே மலத்தோடுருள வீருகும் கொல்லும்
பொரமாந்தம் பொல்லாதே.[1]

## இதற்கு[2] (மருந்து)

30. புளியாரை நொச்சித் தும்பை
போற்றாங் கருக்குவா இலையும்
ஒளிசேர வெள்ளையு வாயிலைம்(?)
ஓங்கும் பெரிய தும்பைஇலை
சளியப் பிடித்தசாறு உழக்குந்தானும்
சமனாய் அடுப்பேற்றி
எளிதாய்க் குழம்புபோலக் காய்ச்சி
எடுத்து இதனிடும் மருந்தே.

31. இடுமேகாயம் இந்துப்பும் இணங்கும்
சீரகம் இருவகையும்
தொடுமே ஓமம் திரிகடுகு தோற்று(மூ)ம்
ஊசிக் காந்தமுடன்
எடும் சமனாய்த்தான் கூட்டி நெகுளாது[3]
அரைத்து தூதுவிளங்காய்
கொடுமே உருண்டை முலையாலி(ளி)ன
கொண்டால் தீரும் பொரமாந்தம்.

---

1. இச்செய்யுளில் ஓர் அடி குறைவாயிருக்கிறது.
2. இதற்கு—என்றால் முற்கூறிய பிணிக்குப் பரிகாரம் எனக் கருத்து.
3. நெகுளாது = நெகிழாது, தளராது.

## 6. பால மாந்தம்

32. அகடது பெருக ஊதி அதிகமாய் சுரமும் தோன்றும்
முகடது தனையே பார்க்கும் மூரியே[1] கொட்டாவி
[உண்டாம்
விகடமாய் வலிப்புள(பெ)டுக்கும் பிரை விரைந்திருக்கும்(?)
வொகுமது கடிடை(?) மின்னேகேழா(ளா)ய்
[துலங்கும் பாலமாந்தமாமே.

### இதற்கு (பரிகாரம்)

33. வெள்ளைக் காக்கணத்தின் வேரைவிரைந்து
முலைப்பால்தனில் அரைத்து
கள்ளமான் வ(ய)யிறு கழியக்கண்டே
கொடுத்துப் பின்பிணிக்கேள்
விள்ளுமே எண்ணை(ணெய்) வேளை
வேருந் திரிகடுகுந்
துள்ளும் கிரு(ரா)ம்பும் திரிபலையும்
தோன்றும் கோல.........றரையே.

[2].........ப்போட்டு சன்னி இலை நிலைவிளா இலை வகைக்கு சாறு உழக்கு, ஆமணக்கெண்ணை(ணெய்) உழக்கு விட்டு எரித்து காசிடை[3] உள்ளுக்குக் கொடுத்து, உச்சியிலும் தடவத் தீரும்.

### மசரிப்புழுவிற்கு

1. சொருஞ் சீதமலந்தண்ணீர் துலையா
விடாமலே கழிந்து
செருமமலத்தில் புழுவிழுந்து
செய்ய அபானம் புண்ணுகும்

---

1. மூரியே = மிகுதியாக.

2. இங்கு மூலச்சுவடியான ஓலைப்புஸ்தகத்தில் ஓர் எடு (22–வது தாள்) காணவில்லை. ஆகவே 7-வது, 8-வது மாந்த நோய்கள் முதலியனவும் இங்கு தொடர்பாக இல்லை.

3. காசிடை = ஒரு தம்பிடியில் பாதி ஒரு காசு; அதாவது பழைய செப்புக்காலணாவில் 6-இல் ஒரு பாகம் எடை.

காரிநிறம்போலக் கத்திரி(க்)காய்
சீங்குபோலக்[1] கழிந்திடினும்
ஆரமணியும் தனத்தாளே
(ம)அசரிப் புழுவின் குணமிதுவே.

## இதற்கு (பரிகாரம்)

2. சிறுசெருப்படி (படை)யின் சாறு
சிறக்கும் ஆமணக்கெண்ணை (ணெய்)
குருகளவ சமனுய்க்கூட்டி
கொடுத்திட மசரிவிழும்
நறுநெய்யும் ஆடுதிண்டாப்
பாலையின்தனின் சாறும்
தருகு வெப்பாலைச்சாறும்
சமன்கலந்து ஈயநன்றே.

3. நன்றே செம்மனுத்திஇலை நயர்ந்தே கஷாயமது விருகத்து[2]
குன்றுவசம்பு சுட்டு வெள்ளுள்ளிகூட்டி அரைத்துக்
[கொடுத்திடுகில்
அன்றே தீரும் சிறு புழுக்கள் அகன்று தீரும்
[மெய்யென்றும்
குன்றில் பெரியகுரு முனியுங் கேட்டார் பெரியோரே.

## வாலகுமா கண்டன்(?)

4. கண்ணும்வாயும் மிகக்கோணிக்காலும்
கையும் ஒரு பக்கம்
துண்ணும்[3] வலிப்பு விட்டுவிட்டு
துடற்சியதுவே உண்டாகும்
நண்ணும் சுரமும் தலைநோவும்
நமனுல் கொட்டியது போல
பண்ணும் மூர்ச்சைப் படுத்திவி(வை)க்கும்
வாலகுமா கண்டனுக்கே.

---

1. கத்திரிக்காய் சீங்குபோல் = கத்திரிக்காயின் உள்ளிருக்கும் வித்துகள் போல்.

2. விருகத்து (ப்ருஹத்) = ஈசுரமூலி அல்லது பெருமருந்து.

3. துண்ணும் = திடுக்கிடச் செய்யும்.

## இதற்கு மாத்திரை

5. மலைதாங்கி வேருடன் வாளபற்பம் அதுகூட்டி
சிலைதாங்கி மிரசாகந்தி செருஞ்சமனுங்
[கூவ(வி)ளைச்சாறு
நிலையே தவறுதுஅரைத்து உண்டை நிசமாருள்குபோல
[உலர்த்தி
அலையா மிளகு தக்காளிச்சாற்றில் அருந்ததான்
நன்றே.

## வாலகுமான் குணம்

6. தலையும்காலும் மிகநடுங்கும்தானே
கழுத்துச் சேர்ந்து விழும்
நிலையும் கண்கள் பெருவிழியாம்
நெருங்காது உறக்கம் வரு(ரா)து
மலையும் உண்ணுது இருமலுமா
தொப்புள்த்தான் நோகும்
மலமும் ஒருக்கால்தான் போகும்
வாலகுமான் குணமிதுவே.

## இதற்கு (மருந்து)

7. தோகை மயிலுனிற் குள்ளிதொகுத்த வசம்பு கரும்சீரம்
பாகஞ்சமனுய் வேப்பெண்ணை(ணெய்) மிதமாய்
[இருத்து ஒரு கூற(கர)ண்டி
மோகத்துடன் தான்கொடுத்து மொழிகள்தோறும்
[பிடித்திட்டால்
வேகமிது ஞலத்தான் பயந்துவிடுகும் வாலகுமானுமே.

## சகல வலிப்பிற்கும் மருந்து

(வசனம்)

விளா இலை, சின்னி இலை, கிளா வேர், மஞ்சள், உள்ளி, வசம்பு, மிளகு இது(வை) சமனுக்கி, மஞ்சள் சீலையில் வைத்து, கன்னி நூல் கொண்டு கட்டி, அந்தச்சாற்றை மூக்கிலும் வாயிலும் தடவி, வாய் பேசாமல் மார்(?)காலிலும் மார்(?)கையிலும் கட்ட, சகல வலிப்பும் தீரும் ; கை கண்டது.

(செய்யுள்)

### காக்கை வலிப்பிற்கு மருந்து (குணம்)

8. நாக்கும் மூக்கும் நயன வாயும்
நாறும் புருவ மிதுவெல்லாம்
காக்கை வலிப்பாம் அப்போது
கடுக உடம்பை அலமலைக்கும்
ஏக்கமது பேசாமல் இருக்கும்
கருத்துத்தான் மயங்கும்
காக்கை வலிப்பென்று எல்லோரும்
காணப்புவியில் அறிந்தாரே.

### இதற்கு மாத்திரை

9. முந்தும் வாளமுந்திரிகை மொசுக்கை
பொன் முசுட்டை சுரஞ்
சந்து பேரீச்சுக் கெந்தி(கருஞ்)சீரகம்
இலுப்பைப்பூப் ப(பு)டலும்
தந்தது எலுமிச்சஞ்சாற்றில் சமனுய்
அரைத்து(ப்) பயரு(று) அளவு
இந்தகாக்கை வலிப்பிற்கு இடுமே
இஞ்சிச்சாறு அதனில்.

### வால காமாலைக்கு (மருந்து)

10. கண்ணும்வெளுத்து மஞ்சனித்துகாலும்
கரமுந்தான் தைக்கும்
உண்ணும் மருந்து திரிகடுகு ஒற்ற
நிலத்தின் வாகையின் வேர்
மண்ணிக் கருணைதிரிபலையும் வாங்கித்
தெச்சீச்சாறு[1] நனைத்து
பண்ணும் கொடிக்காய் வெண்ணை(ணெ)யினில்
பருகக் குழைத்துக் கொடுத்திடுமே.

---

1. தேசிச்சாறு = எலுமிச்சம் பழரசம்.

## வால கிறுகை[1]

(வசனம்)

மாந்த வலிப்புக்குத் துவாகம்(?) நல்ல வசம்பு எடுத்து, கோழி முட்டை வெள்ளைக் கரு விட்டு அரைத்து, உச்சந் தலையில் பிசறு வாங்க மூந்(?)துவாலை இடவும். மறுநாள்(?) ஞு காட்டிப் போடவும். வலிப்பு தீரும்.

## முலை உண்ணாத பிள்ளைக்கு

அதிமதுரம் பசுவின் பாலில் அரைத்துக் கரைத்துப் பழஞ் சீலையில் துவைத்து, வாயில் பிழியவும். பின்பு பிள்ளை முலை உண்ணும்.

## பிள்ளை இருமலுக்கு

சிறு தேக்கும், கடுகுரோகணியும் சமன் பொடி செய்து, தேனில் அல்லது நெய்யிலாவது முலைப்பாலிலாவது பொடி இட்டுத் தீச்சு புகட்டவும். இருமல் நிற்கும்.

## பிள்ளை வய(யிற்)று(ப்) பொருமலுக்கு

அதிமதுரம் காடி வார்த்து அரைத்துக் கொடுக்க வயறு (யிற்றுப்) பொருமல் தீரும்.

## பிள்ளை பலகாலமும் அழுகிறதற்கு (பரிகாரம்)

ஓமம், கடுகு, வெள்ளுள்ளி, இது(வை) கூட்டி(ச்) சமனாகக் குளிர்ந்த தண்ணீரில் அரைத்துப் போட்டவும். (அழுகை) தீரும்.

(செய்யுள்)

## கணை எட்டின் வரலாறு

1. அய்யது குடித்தாளுனல் அறிவை மனது அற்றதானல்
செய்யமூவனல் தாட்டசெரி[2] ஜலதோஷமானல்
பையற அலகுவாளே பசிகள் நோவால் வந்த
துய்யனே குழவி எட்டு கணைகளும் தோன்றும்
[அ(ம)ன்றே.

---

1. பாலக்கிரஹ தோஷம் எனக் கருத்து.

2. மூவனல் தாட்ட செரி = மந்தாக்கினி, தீவ்ராக்கினி, விஷமாக்கினி என்னும் மூவகை ஜாடராக்னிக் கோளாறலான செரியாமை (அஜீர்ணம்) எனப்பொருள்.

## எட்டிற்கும் பெயர்

2. இந்நிலத்தில் பரந்திடும் குழவிக்கெல்லாம் எட்டுவிதக்
கணையின் பெயர் இயம்பக்கேளாய்
துன்னரிய[1] நீர்கணமாம் மூலகணம்
சொல்லிய சீதகணம் பீதையகணம்[2]
வன்னி ஏழும் மலக்கணத்தின் மகாகணமாம்
வற்(ர்)ணக்கு(க)ணமும் கு(க)ணசாலியாம்
[கண்(ணங்)களெட்டும்[3]
பின்னுசடைக் கிறை(ற)யனுரு[4]ரைத்தார் இந்தப்பெரு
நிலத்தில் விஷத்தானங்கள்(?) பேசினரே.

## நீர் கணையின் குணம்

3. இருமும் மேல்மூச்சு உண்டாகும்
இரு கடக்கடையும் நீர் சொரியும்
பொருமும் முலையும் உண்ணுது
பொருந்துஞ் சுரமுந் தலைநோவும்
வருமேவிலாவில் குழந்தச் சது(தி)வாங்கும்[5]
நாயரு முள்ளென அபி(றி)ந்து(?)
செருமமும்[6] தொண்டைமால்[7] செலுத்திச்
செய்யுமிது நீர்க்கந் தானே.

---

1. துன்னரிய = மிக்க அபூர்வமான.

2. இதய கணம் என்றிருத்தல் வேண்டும்.

3. 'வறக்கணையும் குண்டலியாம்' என்று திருத்திப் படித்தல் நன்று. பிறகு இவ்விரு நோய்களின் பெயர்கள் வருவதைக் கவனிக்க. இவ்விதம் இல்லையேல் எண்வகை கணங்கள் குறிக்கப்பட்டதாகாது.

4. பின்னு சடைக்கிறையனுர் = ஜடா சூடனை பரமசிவன்.

5. குழைந்தச்சுதி = சோழை மிகுந்த குழகுழப்புச் சத்தம்.

6. செருமும் = இருமும்.

7. தொண்டைமால் = தொண்டை அழற்சி.

## இதற்கு மருந்து

4. நெய்யும் நாயுருவி அரிசியுடன் நெருஞ்சிக்காயும்
நல் சேரும் நேக(?)கோட்டான்(டம்) ஈருள்ளி
செயினுக்கு[1] முலைப்பாலில் அரைத்துப் போட்ட
செல்கோனை(ழை)கட்டை...கும்(?) தீரும் பகரக் கேளும்
ஆதொரு பசுவின் நெய்தனிலிரண்டு அதனுடனே
தூதுவிளாங் கனியும் கூட்டி
தூய திரிபலை கண்டங்கத்திரி சேர்த்துத் தொகுத்
தெரித்து புகட்டுவது கூற(ர)ண்டிதானே.

## [2]வறக் கணையின் குணம்

5. நெஞ்சுமுசர்ந்து புகைந்திருமும் நித்தம்விடாமல் சுரம் [தோன்றும்
மஞ்சள் நிறமுமாகுகிற வெளுப்பும் நாக்கில்உண்டாம்
இஞ்சுங் காத்தில(ர)த்தின் ஒடுக்கும் மிகவும் [(வ)வெலிது விரைவிரைக்கும்
நெஞ்சமிலாத மூர்ச்சைவரும் வறக்கணத்தின் குணமிதுவே.

## இதற்கு(ப்பரிகாரம்)

6. முள்ளிவேரும் செம்முள்ளி
முசுக்கை தூதுவளைவேரும்
தெள்ளுந் தண்ணீர்(வி)மீட்டனிஞ்
செருங்கண்டங் கத்திரியும்
வெள்ளுள்ளி கருஞ்சீரகம்
வேண்டும் வசம்பு கம்(?)பிசினும்
விள்ளுமிளகு தக்காளி வேண்டுந்
திருகுகள்ளியின் வேர்.

7. வேறு(ர்)வகைக்கு வறு(ரா)கனென்றும்,
விளக்கெண்ணை(ணெய்) படிதானென்றும்
சீறு(ரு)முலைப்பால் ஆவின்பால்
சேரும் வெள்ளாட்டின் பால்

---

1. செயினுக்கு=நோய் கொண்ட குழந்தைக்கு.

2. வறக்கணை என்பது எண்வகை கணை கூறிய செய்யுளில் இருக்க வேண்டும்; அவ்விதம் திருத்தியுள்ள பாடத்தைக் கவனிக்கவும்.

நேராய் வகை.........(?) அரையும்
நொந்தே காய்ச்சி
இருத்திணைவாரி, சுருள்ளிக்கோர் கற(ர)ண்டி
வளமாய் உடம்பில் தடவியிடே.

## மூல கணத்திற்கு

8. சீதமிரத்தம் மிகக் கழியும் தினம்
ஆசனத்திற்கடுத்து முக்கும்
ஈதுகாச்சல் வெகுபிறைச்சல்
விடாது தலைநோய் அதிகமதாய்
போதப்படவே முகம் வெளுக்கும்
பொருமும் மூலம் வெளியில் தள்ளும்
ஓதும் இந்த குணங்கண்டால்
உமையே மூலக்கணமாமே.

## இதற்கு (ப் பரிகாரம்)

9. பழம்பாசி சமூலம் வெள்ளாட்டுப்பாலில் பாங்குடனே
போட்டு அ(ட)தனை துளாவிக் காய்ச்சி
குழைந்து ஒன்றாய் வெந்தபின்பு இர(ற)க்கி ஆற்றிக்
கொண்டு ஒரு(ஓர்) எலுமிச்சம் பழம் பிழிந்து
குழம்பான இளந்தயிரைக் கொள்ளும் போதுகுண
மாகுங் கோதாம் பின்னும்
வழங்குக்கு வேலம்பட்டை சிரசெமலம் வளார்(?)
துரந்(?)தயிரி லரைத்ததுவுங் கொள்ளே.

10. கொள்ளே பெருமாபட்டை தனை[1] கூட்டும்
வெள்ளாட்டில்(ன்) தயிர்தனில்
விள்ளும் செம்பருத்திப்பிஞ்சு வேண்டு
மாப்போல அரைத்து அருந்த
எள்ளும் பச்சரிசி(சோ)சாறுதனில் சீரகம்
அரைத்து நெய் கூட்டு(டி)
உள்ளமாதுளம் பிஞ்சினுடன் உதியம்
பட்டை தயிர் அருந்தே.

1. பெருமரப்பட்டைதனை என்றிருத்தல் பொருந்தும்.

## குண்டலிய குணம்

11. உந்தியிரடிவும் புண்ணுய்
உயர்ந்திருக்கும் சுவாசகாசம்
வந்தே அஸ்திசுரம் காயும் வளரும்
மூச்சுத் திட்டு முட்டாய்
இந்த வகைப்பின்(ணி) குணம் மரி(றி)யா(தா)ரீ
தனைக் குண்டலியா கணமென்பர்
சிந்தை தெளிந்தோர் இக்குணத்தைத்
திருந்தக் குண்டலிக்கண மென்பர்.

## இதற்கு (ப் பரிகாரம்)

12. சுண்டைவேர் சிறுக்கீரை வெறு(ரு)ம் நல்லதுய்ய
பொன்னுங்கனி(ணி) அதின்வேர் தானும்
கண்டதோர் கரிசால(சிலா)ங் கண்ணிவேரும் கணிசமுடன்
அரைக்கழவு[1] தேசிக்காய்[2]போல
விண்டபடி தணித்தனியே ஆவின் வெண்ணை(ணெய்)விட்ட
விஷச்சாறு[3] அருந்தவே
குண்டுபோகுங் குண்டலியாங் கணைகள் அதுதானும்
இல்லைக் கொள்ளுவது பச்சரிசி பாலும்சோறும்.

## இதய கணத்திற்கு

13. நெஞ்சும் விலாவும் மிகக்கொதிக்கும் நீரு(ரா)ய்க்
[குளிரும் ஒருபோது
வஞ்சகம்போலே ஒருவேளைவந்தே தேகமது வெறுப்பு
மிஞ்சும் இருமல்வய(யி)று இரைந்து மிகவும் பேதிதான்
[எடுக்கும்
பஞ்சில் மெல்லடிமடமானே பாலன் இதய கணமாமே.

---

1. அரைக் கழவு = அரைக் கழஞ்சு ; கழஞ்சு என்ற 12-பணவெடை கொண்ட நிறை.

2. தேசிக்காய் = எலுமிச்சங்காய்.

3. விஷச்சாறு = அதிவிடயச்சாறு அல்லது கஷாயம்.

## இதற்கு (ப் பரிகாரம்)

## எட்டுவகை கணத்திற்கும் எண்ணை(ணெய்)

14. நாயுர்(ரு)வி கருசலா(சிலா)ங்கண்ணி நொச்சி நல்லதொரு
வல்லாரைக் கண்ட காரி
தூய்கவு(ம்) தும்பைஇலை வகைக்குச் சாறுத் துலங்கும்படி
காலாகத்தேள்[1] குத்து(தி)க் கூட்டி
நேயமுடனே பாண்டம் படி தான் ஒன்று நேர் வசம்பு
திரிகடுகு திரிபலையும் கூட்டி
தூயதணல்(ல)தனில் காய்ச்சி இருத்துக் கொண்டால்
[தோற்று
ஓடும் எட்டுவகை கணங்கள் தானே.

## [2]அந்தக சிரத்தின் கணம்

15. உச்சிமூளை தனைபற்றி உடல்கள் எங்கும் வெதுப்பேரி(றி)
கச்சமாகத்தான் நாக்கு கருத்து கண்கள் சூடு உண்டாம்
பச்சைமஞ்சள் முறித்தாப்போலே பத்மமுகம் கண் அது
[விருக்கும்
அச்சமாகும் அந்தகன் தான் சிரத்தின் கு(க)ணமிதுவே.

## இதற்கு (ப் பரிகாரம்)

16. பொன்னுங்கண்ணி சிறுகீரை
பூலாஅவுரி வேருடனே
மண்ணுங்[3] கடுக்காய் சிரகமுமாகும்
தேத்தா(ற்று)ங் கொட்டையுடன்
நுண்ணி அரைத்துஆவின் வெண்ணை(ணெ)
யுடனே முலைப்பால் சமனாக(ப்)
பின்னுங் குளச்சிச்[4] சிரசிலிட்டுப்
பிறகு உலர்ந்தால் தண்ணியிடே[5].

---

1. தேன் கொடுக்கிலை எனக் கருத்து.
2. இவ்விஷயம் ஸம்பந்தமின்றி சேர்க்கப்பட்டிருக்கிறது.
3. மண்ணும் = கத்தமான, சிறந்த.
4. குழைத்து என்றிருத்தல் வேண்டும்.
5. தண்ணியிடே = குளிப்பாட்டுக.

## கெந்ததாளியானால்[1] இதற்கு மருந்து.

17. கொடுமே பின்னும் தளமெட்டு
மிசைந்த பத்துநாள் தின்ன
கொடுமே மூன்றுநாள் தன்னில் குணமாய்த்
திரும்பும் ரோகமதில்
தொடுமெமதென்ன கறுப்பு வெல்லும்
தொடுக்கும் வெயின்கொ...ள(?)
விடுமே அந்தகச்சிரத்தின் கணம்
விரைந்து சொன்னார் பெரியோரே.

(வசனம்.)

கனே(ணை) முத்தி(ற்றி), நாபி கமலம் முதல் நாக்கு வரைக்கும் வெந்து புண்ணாய் (இருப்பது) கெந்த தாளியம். அதற்கு :—நெய் :—பசுவின் நெய் படி இ.[2] சாதிக்காய், சாதி பத்திரி, சீரகம், அதிமதுரம், ஏலம், கிரு(ரா)ம்பு, நெல்லிப் பருப்பு, திப்பிலி, எலுமிச்சம் வேர், தாளிவேர், பருத்திப் பிஞ்சு, ஆவாரைப் பூ மொட்டு, இவ்(வை) வகைக்கு விரு(ரா)கனிடை இ. (வீதம்) கூட்டி அரைத்துக் கரைத்துவிட்டு, நீர் வி(வ)ள்ளிக் கிழங்கு சாறு படி ச. வல்லாரைச் சாறு படி ச. கூட விட்டு காய்ச்சி இறக்கி வைத்து, இதில் கோரோ(ரோ)சனை ஷி[3]எடை உ. பொடித்துப போட்டுக் கிண்டி வைத்துக் கொண்டு, உதயத்தில் தினம் ஒரு கரண்டி நெய் கொண்டு வா(?) கொ(கெ)ந்ததாளி வாய்ப்புண்ணுக்கு நாக்கிலும் தடவி, தொண்டை நெஞ்சில்(லும) தடவி வரவும். பதினொரு நாள் தடவி வரவும். இச்சா பத்தியம்.

சீரக(மு)ம், சிறு பயரும், சமன் வெதுப்பிப் பொடித்து, சருள்ளியும் வெல்லமும் சேர்த்து நெய்யில் குழப்பி, நான்கைந்து நாள் தின்ன, வாய்ப்புண் ஆறும்.

---

1. "கெந்தாளி" என்னும் நோயும் முன் செய்யுளில் குறிக்கப்படவில்லை.

2. இ = இரண்டு, இ என்பது அரை என்பதைக் குறிக்க உபயோகிப்பது பழைய வழக்கம்.

3. ஷி = வராகனெடை.

சிறு கிளா வேர், எலுமிச்சங்காய் அளவு அரைத்து உதயத்தில் பாதியும், அந்தியில் பாதியும் பசுவின் பாலில் கரைத்துக் குடிக்க, வாய்ப்புண் தீறு(ரு)ம். இந்தப்படி மூன்று நாள் குடிக்கவும்.

### நாக்குச் சிலந்தி-நாக்குப் புக்ணுணுகு

சினக்காரம் நல்ல எண்ணே(ணெ)யில் மற்றி(ர்த்தி)ச்சு நாக்கில் மூன்று நாள் தடவ புண்ணுறும்.

### கெந்ததாளி வாய்ப் புண்ணுக்கு கிஷாயம்

(செய்யுள்)

1. பொன்னுங்க(ண்)ணி சிறுகீரை போற்றுஞ்
சிற்ருமுட்டி வில்வம்,
பன்னுரதகரை, பழம்பாசி, பருகு,
மிளகு, தக்காளி,
நன்னுரி, நெருஞ்சியின் வேரும், நாட்டின்
வளருங் குளி மீட்டான்[1]
சொன்னுர், இந்தவேர்களுடன் சொல்லும்
வல்லாரை கலம் கொம்பே.

2. கொம்பே ஆவாரம்பூத்தானும்
ெ(கே)காட்டஞ்சுக்கு சீர் மதுரம்
வம்பே வளக்கும்(?) காஞ்சிதன்னில்[2]
வார்க்கும் தண்ணீர்படி இரண்டு
முன்பே காய்ச்சிப் படிகால்
மூள விறு(ரு)த்து வாரியதில்
அம்பே லவங்கங் கள(ழ)ஞ் சரைக்கால்
அதையும் வெதுப்பிப் பொடியாக்கே

3. பொடியும்[3] ஆவின் கோரோ(ரோ)சனையும்(யின்)
பொடியும் அந்த நிரை(றை) கூட்டி
கூடியே இந்தப் பிரகாரமாகக்
கூட்டி அருந்து நாள் மூன்றில்

---

1. குளி மீட்டான் = தண்ணீர் விட்டாங் கிழங்கு.
2. காஞ்சிதனில் = காடியில்.
3. பொடியும் = முன் கூறிய பொடியும் எனக் கருத்து.

ஓடியே போகும் கெந்ததாளி
ஓதும் வாயில் புண்ஆறும்
பாடியே சொன்னார் அகத்தியமுனி
பண்பாய் கணையும் தீர்ந்திடவே.

## இதற்கு தளம்.

4. இடுமே நாவில் மஞ்சள்புண்
இதுவும் மாற்றத்தளம் கேளாய்
சுடுமே சந்தனச் சிறுயதனை
சுட்ட கரியுங் கொட்டை முத்து
தொடுமே கோவைஇலை சமனாய்
தொண(?) வரைத்து எண்ணை(ணெ)யுடன்
பொடுமே[1] நெஞ்சு நாவி வரை
போட்ட கள(ண)த்தில்[2] புண்ணாறும்.

## இதற்கு (ப் பரிகாரம்).

(வசனம்)

உள்ளே புண் இருந்தால் தளம்[3] போட்டவுடனே உலரும். புண் இல்லாவிடில் தளம் உலரா(ரா)து. இந்த தளத்தில் புண்ணும் மாறி கணையும் தீரும். கை கண்டது.

இந்தக் கணைக்கு வல்லாரை நெய், பசுவின் நெய் படி உ, பசுவின் பால் படி வ.[4] வல்லாரைச் சாறு படி வ. கூட்டிச் சட்டியில் விட்டு சாதிக்காய், கிரு(ரா)ம்பு, சாதிபத்திரி, வால் மிளகு, தாளிசபத்திரி, ஏலம், அதிமதுரம், கூகைநீர் கோரோ(ரா)சனை, கோட்டம், குரு(ரா)சாணி ஓமம், கருட(ப்) பச்சை, இலவங்கப்பட்டை, நன்னாரி, கடுக்காய், சிற்றரத்தை, கொத்தமல்லி, சிறுநாகப்பூ, சீரகம்: இது(வை) வகைக்கு கால் கள(ழ)ஞ்சி கூட்டி, அரைத்துக் கரைத்து காய்ச்சி, பதத்தில் சீனி பலம் இ. போட்டு கலந்து வைத்துக்கொண்டு, தினம் ஒரு கரண்டி கொண்டு வர[5] பித்த கணை வறக்கணை தீரும்.

---

1. பொடுமே = துரிதமாய்.
2. போட்ட கணத்தில் = போட்ட நிமிஷத்தில்.
3. தளம் = லேபம் ; பூச்சு.
4. வ = கால் (நான்கிலொரு பங்கு) என்பதைக் குறிக்கும் எண்.
5. கொண்டு வர = உட்கொண்டு வந்தால்.

## எட்டுவகை கணைக்கும் கோரோசனை எண்ணை(நெய்)

(செய்யுள்)

1. தென்னங் குரும்பு பழம்பாசி சீராந்தகரை கத்தா(ற்ற)ழை
துன்னு மிளகு தக்காளி துளசி கொடுப்பை[1] ஈருள்ளி
இ(எ)ன்னு மிவைச்சாறு ஒன்றுஉழக்கு அதனில் ஏலம்
[மதுரம் இலவங்கம்
[2]மின்னே குரும்பு[3]சீரகமும் மிக்கவரு(று)த்துக்
[கோரே(ரோ)சனை கள(ழ)ஞ்சி.

2 கள(ழ)ஞ்சே கோட்டஞ் சந்தனமும்
கருதி அரைத்து விளக்கெண்ணை(ணெய்)
வளம் சேருரி(றி)யிற்றுள் கட்டி
மதித்தித காய்ச்சி வடித்திதனை
இளையோர் தனக்கும் முதியோர்க்கு
மெழுந்த கணநோய் எட்டி நிற்கும்
வளஞ்சே கொடுக்கத் தீருமென்று
வருந்தி உரைத்தார் முன்னோரே.

## சரீரம் வற்றி உலர்ந்து போகிற(கும்) பிள்ளைகளுக்கு திரவ்விய நெய்[4]

3. ஆலவிழுது இளந்துளிரும்
அரிய தென்னம்பூ மதுரம்
கோல[5] மிளகு சீரகம்......(கூ)ட்டி(?)
அரைப்பா யில்(ல)தனில்

---

1. கொடுப்பை = பொன்னாங்கண்ணி.

2. மின்னே = (விளிவேற்றுமை). மின்கொடி போன்ற பார்வதியே.

3. கிராம்பு என்றிருத்தல் வேண்டும்.

4. திரவ்விய நெய் என்னும் பெயர் வைத்ததேன் என்று தெரியவில்லை. அதிமதுரம், ஏலம், கோஷ்டம், செண்பகம், லவங்கம் இவ்வைந்துக்கும் சேர்ந்து பஞ்சத்திரவ்யம் எனச் சில தமிழ் வைத்திய நூலில் பெயர் வழங்கப்படுகிறது. ஆனால் அந்தத் திரவ்யங்களையும் இங்கு காணக்கூடவில்லை. (ஆலவிழுது நெய் யென்று கூறுவது பொருந்தும்.)

5. கோலம் = தக்கோலம்.

சிலமுடனே நெய்யில் வெந்து
திர(ற)மாய் வடித்து தினம் கொடுக்கில்
பாலனுடம்பு மிகவே தான்
பருக்கும் சொன்னோம் பயந்தோடியே.

## பிரளிக்குத் தேங்காய் எண்ணை(ணெய்).

(வசனம்)

நெத்து(ற்று)த் தேங்காய் ஐந்தாறு உடைத்துத் துருவி, வெண்ணீர் (வெந்நீர்) விட்டு(ப்) பிசைந்து பிழிந்து வடிக்கட்டி இறுத்து, இதில் முருக்கிலைச்சாறு, தும்ப இலைச் சாறு, சின்னி இலைச்சாறு, பொடுதலை(டுதலை)ச்சாறு, வேலிப் பருத்திச்சாறு, இலவங்கக்காய்ச்சாறு, இது(வை) வகைக்குப் படி க, கூட்டி விட்டு, இதில் ஊசிக் காந்தம், இந்துப்பூ(பு) வெள்ளுள்ளி, பெருங்காயம், சீரகம், கருஞ்சீரகம், சுக்கு, கடுகுரோ(ரோ)கணி, இது(வை) வகைக்கு வரு(ரா)கனிடை க. கூட்டி பொடி செய்து போட்டு, காய்ச்சி பதத்தில் எண்ணை(ணெ)யை வடித்துக் கொண்டு, இரண்டு காசிடை நக்கவும். புளித் தவிரவும்.[1] அகத்தி இலைச்சாறு கூட்டவும்.[2] பிற(ர)ளி நோய் தீரும். கை கண்டது.

## எளு நாயறு படு நாயறு[3].

எட்டிப் பழம், நெய்க் கோட்டான் பழம், குமிழம் பழம், தேற்றும் பழம் இந்த(ப்) பழங்களில்(ளைத்) தனித் தனியே வெவ்வேறு சீலையில் ஊட்டி வைத்து உலர்த்தி, எளு நாயறு வந்து தொண்டையில் கட்டின உடனே சற்றுச் சீலை கிழித்து இள வெண்ணீ(ந்நீ)ரில் போட்டுப் பிசைந்து, இரண்டு சங்கு கொடுக்கத் தீரும்.

---

1. புளியை பத்தியத்தில் விலக்கவும் (இவ்விஷயம் ஔஷத முறையின் இறுதியில் இருக்கவேண்டும்.)

2. அகத்தியிலைச்சாறு எண்ணெயில் எப்பொழுது கூட்ட வேணுமென்பது அறியக்கூடாதவாறு இவ்வாக்கியம் இங்கு குறிக்கப்பட்டுள்ளது.

3. நாயறு என்பது ஒரு தொண்டை நோய் எனத் தெரிகிறது. முக்கிய தமிழ் வைத்திய நூல்களில் இதைக் காணவில்லை.

## இதற்கு(க்) கிஷாயம்.

வெற்(ட்)பாலரிசி, கொத்தமல்லி, முத்தக்காசு, நன்னாரி வேர், கோட்டம், அதிவிடயம், விளாவரிசி, வில்வவேர், முந்திரிகை(ப்) பழம், பேரீச்சம் பழம், அமு(ழி)ஞ்சில் வேர், துளசிவேர், நவ்(ா)வல்பட்டை, கண்டங்கத்திரி இவை வகைக்கு வி[1]. எடை தட்டிப்போட்டு, ஒரு படி தண்ணீர் விட்டு உழக்காய் காய்ச்சி இரு(று)த்து, இரண்டு உழக்கு[2] குடிக்கவும். எளுநாயறு[3] தீரும்.

எளுநாயறு தொண்டையில் கட்டிய உடனே, குப்பமேனி இலை கசக்கிப் பிழிந்து, இதில் இரண்டு காசிடை அளவு இலுப்பைப் பு(பி)ண்ணாக்கும், ஒரு நெய்க்கோட்டான் பழமும் அரைத்துக் குழப்பி(க்) கொடுக்க, அரைநாழிகையில் எளுநாயறு தீரும். குணமாம் கண்டது.

## மா(வா)லை செங்கிரந்தி
## பிள்ளை மிடறுகட்டு[4]கிறதற்கும்
### (செய்யுள்)

1. பிள்ளை பிறந்தவுடன் அழுது பின்னே மிடறுதனைக் கட்டி
மெள்ளப் பூனைக் குரல்போன்று மிக்க மலமும்
[வய(யி)று ஊதித்
துள்ளிக்காலும் அசைவற்று சும்மா கிடக்குமேயாகில்
கள்ளமான செங்கிரந்தி காணுமெனவே கண்டு
[கொள்ளே.

---

1. வி = இது வராகனெடையைக் குறிக்கும் எழுத்து.

2. உழக்கு என்பது இக்காலத்துப் பட்டணம் படியில் கால் படி. (உழக்காய் இறுத்து இரண்டு உழக்குக் குடிப்பது முடியாது. மேலும் இளம் பிள்ளை நோயில், அக்குழந்தைக்கு இரண்டு உழக்குக் கஷாயம் புகட்டுவதும் முடியாது. ஆகவே இங்கு அளவு பிழைபடக் குறிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.)

3. எளுநாயறு = இது இவ்வித நோயென்று விளக்கப்படவில்லை.

4. மிடறுகட்டு = நெஞ்சுக்கட்டு.

## இதற்கு (மருந்து).

2. கோரோசனையும் சந்தனமும் கூட்டி
முலைப்பா லருந்திய பின்
சேரகுண மேனி[1] இலைச்சாறு சேர்ந்த
முருங்கை இலைச்சாறும்
வாரே கற்பூரவள்ளிச்சாறும் வகையாய்
தனித்தனி சாறு அருதி
நேரே நீரில் செம்முள்ளிநொந்தை(?)
போட்டு நீரோட்டே.

## வாலை கருங்கிரந்தியின் குணம்.

3. முள(ழ)ங்க அமுது முலை உண்ணு மூரி[2]
நிமிர்ந்திட்டு உடல் வெதுப்பும்
கொளு(ழு)ங் கண[3]யர்ந்து தளர்ச்சி
உ(யு)ண்டாய் குணம்போல
விழித்து முலைஉண்ணும் அழுகு(து)ம்
வய(யி)று மிகவூதி அதிக மலமும் மிகக்(?)
கழியும் சேருங்கண்ணுடைய(?) மதிமுகத்தாய்
சிரக்கும்[4] கரியகிரந்தி இதே.

## இதற்கு எண்ணை(ணெய்).

4. ஆவின்நெய்யும் விளக்கெண்ணை(ணெய்) ஆகும்
நல்ல எண்ணை(ணெய்) சமன்
மேவுஞ் சங்கிலைச்சாறு விட்டு மிக்க
பதமாய்த் தாநெரித்து
தாவுங் காசிடைதான் புகட்டித்தாலே
உடம்பில் மிகத்தடவி
காவின்(?)கிரந்தி நாயகமும் கடிய
செம்முள்ளி நீராட்டே.

---

1. மேனி = குப்பைமேனி.
2. மூரி = புறங்கழுத்து.
3. கொழுங்கண் = கடைக்கண்.
4. சிரக்கும் = கேடு விளைவிக்கும்.

### வாலைக்காப்பன் (கரப்பான்)[1] குணம்.

5. கால்கரம் இடுப்பு சந்து கண்டமும் வெடிக்கும் புண்ணும்
மேல் ஏவிசம்(?)போலக் கட்டி விரிந்து பன்னீரே [பாயும்
கோலமே வெதும்பி நாலும் குழவியுமோடுங் குமரவே
மாலேனுங்குழலாய் கேளாய் வாலையாங் [கரப்ப(ா)னமே.

### இதற்கு எண்ணை(ணெய்).

6. நன்று நிம்பப்பட்டையுடன் நாடும்
வெம்பாடல் செம்முள்ளி
குன்றுக்கோடக சா(சபா)லையுடன் குருஞ்
சாமூ.........சீலை மின்னியதாம்
இன்றே சிற்றுமணக்கெண்ணை(ணெய்)
யெரித்தே தடவப்புண் ஆறும்
என்றே சொன்னார் அகத்தியரும் இயல்பாய்க்
கேட்பார் பெரியோரே.

### பிள்ளைக் காட்டு வாதம்.

7. கண்ணைக் காக்கைப்(?) புருவத்தை காலை
கையை நெறித்து விழி
விண்ணைப் பார்க்கும் மூ(ர்)ச்சை யுரு(று)ம்
விட்டுவிட்டே வலிப்பெடுக்கும்
உண்ணுமுலையும் முகவாது உறங்காது
உடலும் மார்சளிக்கும்
நண்ணுங்காட்டு வாதமிது கா(நா)டிக்
காண்பார் பெரியோரே.

### இதற்கு எண்ணை(ணெய்).

8. மூக்காச்சாரணை முடக்கொடுத்தான் (கற்றான்)
முத்திருக்கஞ் செவி(டி) ஈருள்ளி
ஆக்கமோர் இதழ்த்தாமரையும் ஆமணக்
கெண்ணை(ணெய்) தனிலெரித்து

---

1. வாலைக்கரப்பான் = பாலக்கரப்பான்.

சிக்கா[1] யெண்ணே(ணெய்)தான் கொடுத்து
சேறுமுடம்பில்தான் தடவில்(ன்)
தாக்கும் வலிப்புந் தீர்த்திடுமே தாயார்
பத்தியமாய் கொள்ளே.

(வசனம்)

நாகப்பூச்[2]சிலின்(?) ஒரு பிடி சுண்டை கருணையும் உழக்குக் காணமு[3]ம் ருல(ம)டுப்பில் வேகவைத்து உதயத்திற்கு முன்னே காணங்கின்று தண்ணீர் படியில் அதில் ஒரு கரண்டி ஆமணக் கெண்ணே(ணெய்) வெதுப்பி விட்டு குடிக்கவும்[4].

இந்தப்படி மூன்றுநாள் குடிக்க, வய(யி)ற்றிலுள்ள புழுக் களெல்லாம் கூட்டுடனே...........ப்போம்.

மலைவேப்பம்பட்டையை மோர்விட்டு அரைத்து எழுகிள .........(?) அளவு உருட்டி விழுங்க, வய(யி)ற்றுப் புழுக்கள் எல்லாம் பந்து பந்தாய் கூட்டோடே விழுந்துபோம். மோருஞ் சோறும் கொடுக்கவும்.

## குழந்தைகள் குடல் ஏற்றதற்கு (ஏற்றத்திற்கு).

(செய்யுள்)

1. நத்த(தை)ச் சூரிவு(உ)தும்பை[5] நல்ல
கீள(ழ்க்கா)வாய் நெல்லி இவை
ஒத்ததே தான்றின்வேர் ஓங்கிஉயர்ந்த
வரைகை யகாதிநொறிற்ருற்றி(?)
கற்ற குடலோர(லேற்ற)ந் துலையு
மெண்ணே(ணெய்) தாமிஇலை(?)
கித்தஞ் சீறுகால் கொடுக்க வகைசெய்வீர்
நல்லவகை இதுவே.

---

1. சிக்காய் = சிக்காச்சா ; நாய்ப்புடோல் என்னும் மூலிகை.
2. நாகப்பூஇலை என்றிருக்கலாம்,
3. காணம் = கொள்.
4. இச்செய்யுளில் ஓரடி குறைவாயுள்ளது. இச்செய்யுளின் விஷயத் தொடர்பு வசனத்தில் முடிகிறது ; ஏன் இவ்விதமெனத் தெரியவில்லை.
5. உதும்பை = அத்தி.

## கணத்திற்கு எண்ணை(ணெய்).

(வசனம்)

விளக்கெண்ணை(ணெய்) படி இ; குண்டங்கொழுந்து[1], கருவேலங்கொழுந்து, கிரந்திநாயகம், தகரைஇலை, கையாந்தகரை, பழம்பாசி இது(வை) வகைக்கு ஒரு பிடி கொழுந்து கூட்டி இடித்துப் போட்டு, உள்ளி, வசம்பு, கடுக்காய் இது(வை) வகைக்கு வராகனெடை இரண்டு, பொடித்துப் போட்டு, ஒருநாள் சூரியபுடம் வைத்து, மறு நாள் கால்படி ஈரவெங்காயம் நறுக்கிப் போட்டு கிண்டி(க்) காய்ச்சி, ஈரவெங்காயம் நீர் வற்றி, பொன் நிறமானால் இறக்கி வடித்து, ஒரு கரண்டி எண்ணை(ணெய்) புகட்டவும். மூன்று நாள் புகட்டவும். நன்றாய் வய(யி)று கழிந்தே.........கஞ்சி கொடுக்கவும். கணசுரும்(ர)ம் தீரும்.

## நசி மிதைக்கு[2] நெய்.

......கிழங்கு......கோவைக்கிழங்கு, சிறுகுறட்டைக்கிழங்கு, சித்த(ற்ற)வரைக் கிழங்கு, தூதுவளை வேர், சங்கிலை, கிளாச்சி இலை, வற்பூலாவிலை(?), நரிப்பயற்றிலை, சாதிக்காய், சாதிபத்திரி, திப்பிலி மூலம், கடுக்காய் இது(வை) வகைக்கு வராகனெடை இரண்டு, பச்சிலைச்சாறு படி வகைக்கு ௩ கூடவிட்டு, பசுவின் நெய் படி க-விட்டுக் கிண்டி எரித்துவைத்துக் கொண்டு, மூன்று நாள் கொடுக்க சுழிகணை தீரும்.

## மேல்மூச்சு சுழிகணைக்கு எண்ணை(ணெய்).

வேப்பெண்ணை(ணெய்) படி ௳-திப்பிலி, கடுகுரோகணி, துருசு, (மி)முளகு, தலை(ச்)சுருளிவேர், கோழிக்காரம், சீந்தித(ல்)தண்டு வகைக்கு விராகன் க-கூட்டி எரித்து ஒரு கரண்டி கொடுக்கவும் ; நோய் தீரும்.

---

1. குண்டங்கொழுந்து = பெருமருந்துத்தளிர் ; ஈச்வரமூலி.

2. நசி மிகுதை என்கிற நோய் விளக்கப்படவில்லை. ஆனால் கீழே விவரித்துள்ள நெய்முறை சுழிகணை என்பதற்கென்று குறிக்கப் பட்டிருக்கிறது.

சீந்திச்(ற்)சாறு உழக்கு, கடுக்காய் ரு-உள்ளிப்பூ(ண்)டு உ-கண்டங்கத்திரிவேர், முள்ளிவேர், தூதுவளை, சிதர(சிற்று)முட்டி, முருங்கைப்பட்டை, சுக்கு, ஆடாதொடைவேர், இண்டம்வேர்[1], சமன் கூட்டி, கிஷாயம் போட்டு வைத்து, எட்டொன்றாய் இறுத்து, திப்பிலி வெதுப்பு மெக்க(?)பொடி போட்டு, தேனும் கூட்டிக் கொடுக்கவும். மூச்சுக்கணை தீரும்.

## சகல தோஷத்திற்கும்

பசுவின் நெய்யில் நாங்குளுப்புழு[2]போட்டுக் காய்ச்சி, புழுவெடித்த உடனே இறு(று)த்து, ஒரு சங்கு புகட்டவும். சகல தோஷஞ்சாத்தி(?) சைத்தியமும், கழிச்சலும் தீரும்.

பிள்ளை புதைத்த குழியில் இருக்கிற வேர் பிடிங்கி, குளிச மாடி கட்டத் தீரும். கைகண்டது.

## பிள்ளைகள்(ளின்) சகல கழிச்சலுக்கு

சுக்குயிற்கு(?), மாவீற்கு, அகத்தியீற்கு, உதியனீற்கு, வெதுப்படைக்கித்தண்டு[3], வேலிப்பருத்தி, ஓட்டாங்கிச்சி, இது(வை) சமன் கருக்கி, ஒரு படி நீர் விட்டு இரவில் வற்றக் காய்ச்சி, இரு(று)த்து, இதில் ஒரு சங்கு புகட்டவும். வசம்பு தணல் பார்க்க (பரக்க)[4] சுட்டு, மேல் பொடிபோட்டு[5] மூன்று நேரங்கொடுக்கவும்.

நவ்வல்[6]கொழுந்து, உதியங்கொழுந்து, பேயப்பச்சோந்தி பொடிதழையும்[7], ஓமம், இது(வை) சமன் கருக்கி, ஒரு படி

---

1. இண்டம்வேர் = ஈசைச்செடிவேர்; அல்லது முல்லைவேர்.

2. நாங்குளுப்புழு = நாக்குப்பூச்சி.

3 வெதுப்படக்கித்தண்டு = பனங்கிழங்கு.

4. தணல் பரக்க = தழல்போல் ஆகுமளவும்.

5. மேல் பொடிபோட்டு = தழலைப்போல் சுட்டெடுத்த வசம்பைப் பொடிசெய்து முற்கூறிய கஷாயத்தில் தூவி, மூன்றுமுறை உட்கொள்ளக் கொடுக்க வேண்டுமெனக் கருத்து.

6. நவ்வல் = நாவல்.

7. பசுமையான ஓணங்கொடித்தழையும் எனப் பொருள்.

நீர்விட்டு உழக்காய்(க்) காய்ச்சி, மூன்று நேரம் ஒவ்வொரு சங்கு புகட்டவும். இதற்கு(தனால்) முதல்(?) கழிச்சலும் தீரும்.

## பலவிதமாகக் கழிகிறதற்கு (பரிகாரம்)

வேலிப்பருத்திஇலை, அவரைஇலை, ஈரவெங்காயம் சமன் கூட்டி, எருமை வெண்ணை(ணெ)யில் எரித்து, முலைப்பால் சற்றேறு[1] ஊற்றி, ஒரு சங்கு புகட்டவும். தீரும்[2].

## ஊது மாந்தந்திற்கு[3] (பரிகாரம்)

பேய்ப்பீற்(ர்க்)கு, பொடிதழை[4], புளியீற்கு, ஒவ்வா யீற்கு(?), மாவீற்கு, வேலிப்பருத்தி, மிளகு, வசம்பு, ஓமம் சமன் கருக்கி, ஒரு சுக்கு தட்டிப்போட்டு, ஒரு படி தண்ணீர் விட்டு உழக்காய்(க்) காய்ச்சி, நேரத்திற்கு ஒரு சங்கு புகட்டவும்.

மிளகு, வசம்பு, ஓமம், இது(வை) சமன் கருக்கி, ஒரு படி தண்ணீர் விட்டு, இதில் ஒரு உள்ளிப்பூ(ண்)டும், அவுரிவேர், வேலிப்பருத்தி, ஒரு சுக்கு(ம்) தட்டிப்போட்டு, உழக்காய்(க்) காய்ச்சி, மூன்று நேரம் ஒவ்வொரு சங்கு புகட்டவும். ஊது மாந்தம் தீரும்.

## எட்டுவகை மாந்தத்திற்கும் (பரிகாரம்)

வேலிப்பருத்திவேர், பருத்திப்பிஞ்சி(சு), ஓமம், கடுகு, சாதிக்காய், வசுவாசி[5], சமன் கூட்டி, காயவைத்துக் கருசு(?) பண்ணிக் கொடுக்கத் தீரும்.

---

1. சற்றே என்றால் சிறிது எனக் கருத்து போலும்.

2. பலவித கழிச்சலும் தீருமென்றபடி.

3. ஊதுமாந்தம் ஊதுகணை என்றும் வழங்கப்படும், ஆனால் இங்கு இந்நோய்க்குக் குணங்கள் கூறப்படக் காணோம்.

4. பொடுதலை,

5. வசுவாசி = சாதிபத்திரி.

## மாந்த வலிப்பிற்கு

வேலிப்பருத்திஇலை, முடக்கொத்தானிலை, வெதுப் படக்கி[1], சாணு(க்கி)ப்பூண்(டு)[2], இது சமன் எடுத்துப் பிழிந்து, உள்ளி, வசம்பு, காயம் கூட்டி அரைத்துக் குழப்பி(க்) கொதிப்பித்து, இடது காதிலும் கையிலும் தடவி, உள்ளுக்கும் கொடுக்கவும்.

இதற்கு(னல்) மாந்தவலிப்பு(ம்), வெள்ளுடைப்பதும்[3], சோர்ந்துடைப்பதும்[4] தீரும்.

## மாந்தக் குளிகை

வசம்பு, தேவதாரம், விளாவரிசி, வேலிப்பருத்திவேர், சக்கு, ஓமம், கிரு(ரா)ம்பு, திப்பிலி, நருக்குமூலம்[5], முத்தக்காசு, (அ)ரேணுகம், கடுக்காய்த்தோல், பூணு(நா)கம், ஆமைஓடு (இவற்றைச்) சுட்டு, அது சமன் கூட்டி, ஆடாதோடை, வில்லை(வ)வேர், சமன் காயம் வைத்து, இரு(று)த்து, மருந்து அரைத்து வரு(று)த்து குண்டுமணி அளவு உண்டைசெய்து, நிழல் உலர்த்தி, ஆடாதொடை கிஷாயத்தில் ஒரு உண்டையிட, சகல தோஷமும், நெஞ்சுகட்டும், சகல கழிச்சலும் தீரும்.

[[6]தேவி சகாயம்.]

[குருசாமி துணை.]

## அக்கா ஏழு வகைக்குப் பெற (பெயர்)

அக்கா சூ(ஆ)ரி, அக்கா காந்தி, அக்கா சோதி, அக்கா விம்மி, அக்கா குண்டுடி, அக்கா பாலி, அக்கா குயிலி. இப்படி

---

1. வேதுப்படக்கி—பனங்கிழங்கு.

2. சாணுக்கிப்பூண்டு = மயிர்மாணிக்கம்; ஸ்ரீதேவிப்பூண்டென்றும் கூறுவர்.

3. வெள்ளுடைப்பது = வெள்ளோக்காளம்; கக்குதல்.

4. சோர்ந்துடைப்பது = மயங்கி வீழ்தல்.

5. நருக்குமூலம் = தேசாவாரம் என்கிற சரக்கு.

6. "தேவி சகாயம்" "குருசாமி துணை" என்பது நூலுக்குச் சம்பந்தப்பட்டதன்று; எனினும் ஒருவித விஷயம் இங்கு முடிவு பெற்று, மற்றொருவித விஷயம் துவக்கமாகிறதென்பதைக் குறிப்பதற்கே இச் சொற்கள் இங்கே போடப்பட்டுள்ளன என்று தோன்றுகிறது.

ஏழு பெயர்கள் உண்டு. இவர்களுக்குப்[1] பிறப்பு அக்கி......... லென்பது. இவர்கள் குணம் அறியும்படி[2].

## 1. அக்கா (ஆ)சூரியின் குணம்

இடுப்பு கடுக்கும், தலை நோகும். உதிரம் தோன்றும்[3]. வாய் வெள்ளாவி நாறும். நாக்கு வெளுத்து இருக்கும். தொண்டை தித்திக்கும். வாந்தியாம். வெள்ளோக்காளம் எடுக்கும். உடும்பு கருக்கும்.

## இதற்கு மருந்து

கோரைக்கொழுந்தும்[4], பசுவின் நெய்யும் கூட்டி அரைத்துக் கொடுக்கத் தீரும்.

## 2. அக்கா காந்தியின் குணம்

தலை கனக்கும். உடம்பு குளிரும். சுரம் தோன்றும். வாய் கசக்கும். நாக்கில் வெள்ளையும் சிவப்புமாகத் தூவிணுப் போல் இருக்கும். நெஞ்சு எரியும். நாவு வறண்டு தாக்கிடும்[5].

## இதற்கு மருந்து

கோவைஇலைச்சாறும், சந்தண(ன)மும், நீர்ப்பு(பூ)லாங் கொழுந்தும், ஓரே தளர்த்தாமரையும்[6], செண்பகப்பூவும், சீரக(மு)ம், ஏல(மு)ம், இது(வை) வகைக்கு ௵ (வராக

---

1. 'இவர்களுக்கு' என்கிற குறிப்பிலிருந்து, இவ்வேழு பிணிகளுக்கும் தைவாம்சத்தைக் கற்பிப்பதாய் அறிய வேண்டும். அம்மைகள் என்பவை போல் "அக்கா" என்கிற சில க்ஷுத்ர தேவதைகளும் உண்டென்று கருதினர் போலும்.

2. இங்கே வாக்கியம் முற்று பெறவில்லையெனத் தெரிகிறது.

3. உதிரம் எங்கிருந்து தோன்றும் என்பது ஊகிக்க வேண்டிய விஷயம்.

4. கோரைக்கிழங்கு என்று இருத்தல் மேல்.

5. தாக்கிடும் = பேசத்தடுமாறும்.

6. ஒரே தளர்த்தாமரை = ஓரிலைத்தாமரை.

னை்டை) இ-கூட்டி, எலுமிச்சம்பழத்தில்[1] அரைத்து, பசுவின் வெண்ணெ(ணை)யில் குழப்பி, விழுங்க (நோய்) தீருமாம்.

## 3. அக்கா சோதியின் குணம்

இடுப்பும், தலையும், கண்ணும், காலும் நொந்து, சுரம் தோன்றும். நாக்குப் புல்லமுக்காக[2] இருக்கும். நடுவே[3] விரல் நீளத்திற்கு வெந்து தாகம் எடுக்கும். வய(யி)று எரியும்.

### இதற்கு மருந்து

அதிமதுரம், இலவங்கப்பட்டை, ஏலம், வில்லைவேர்[4], சிறுக்கீரைவேர், செண்பகப்பூ, கோஷ்டம் இவை சமன்கூட்டி, காடிவார்த்து அரைத்து நெய்யில் குழப்பி விழுங்கவும். (அக்கா சோதி) தீரும்.

## 4. அக்கா விம்மியின் குணம்

தலை நொந்து, உடல் குளு(ளிர்)ந்து, கூசி தாகம் தோன்றும். நீர் குடிக்கலும் தாளங்குகுத்தும்(?), தின்ருப்போல இருக்கும். உதடு கரு(று)த்திருக்கும். தொண்டை ஈரல்[5], நெஞ்சு (இவை) கரு(று)த்து நோகும்.

### இதற்கு மருந்து

பொன்னுங்கணிவேர், சிறுகீரைவேர், தக்காளிச்சாறு, கோவைஇலைச்சாறு, நற்சந்தண(ன)ம், அதிமதுரம், கூகைநீர்,

---

1. எலுமிச்சம்பழச்சாற்றுல் என்பது கருத்து போலும்.

2. புல்லழுக்கு = சொற்பம் அழுக்குப் படிந்து.

3. நடுவே = நாக்கின் மத்தியில்.

4. வில்லைவேர் = கூவிளைவேர் ; வில்வவேர்.

5. ஈரல் என்று எந்த அவயவம் இங்கு குறிக்கப்படுகிறதென்று நாம் குறிப்பாய் அறியவியலவில்லை. (கல்லீரல், மண்ணீரல், நுரையீரல் என்பவற்றில் எது என்று பகுத்தறிய வேண்டியிருக்கிறது. இதன் பிறகுகூட சில விடங்களில் இச்சொல் வழங்கப்படுகிறது. அவ்விடங்களிலும் இச் சந்தேகமே).

ஏலம், நற்சீரகம், கோரோ(ரா)சனை, இவைகள் கூட்டி முலைப் பால் விட்டு அரைத்துப் பனை வெல்லங்கூட்டி குழப்பி விழுங்கத் தீரும்.

## 5. அக்கா குண்(டு)டியின் குணம்

உடம்பு கடுக்கும். நாக்குச் சிவந்து இருக்கும். தாகிக்கும். வய(யி)றும் நெஞ்சும் எரியும். ஈரல் வலிக்கும்.

### இதற்கு மருந்து

பி(பு)ளி இலைச்சாறு(ம்), பனைவெல்ல(மு)ம், நெய்யும் கூட்டி(க்) குழப்பிக் கொடுக்கத் தீரும்.

## 6. அக்கா பாலியின் குணம்

உடம்பு கனக்கும். நெஞ்சு ஒடிஞ்சாப்போல் இருக்கும். கண்ணில் அமாஞ்சுரமாகத் தோன்றும்(?). தலை விண்ணேற்றி[1] இருக்கும். சுரம் அதிகமாகத் தோன்றும். நாக்கு வெளுக்கும். நடுவே கட்டியாக ஈரல் சுருண்டு இருக்கும்[2].

### இதற்கு மருந்து

புளி இலைச்சாறும், முந்திரிப்பழமும், ஏலமும் கூட்டி அரைத்து, எலுமிச்சம்பழச்சாறுவது காடியாவது கூட்டி மதிச்சுக்[3] கொடுக்கத் தீரும். இதில் வயிற்றில் (வயிறு) கழிச்சலானால் பருத்திக்காயும், அத்திப்பிஞ்சும், அகில்கட்டையும் துவைத்து, காடி வார்த்துப் பிசைந்து பிழிந்து வடித்துக் கொண்டு, நற்சீரக(மு)ம், நெல்லிமுள்ளி(யும்), ஏலமும் கூட்டி வெதுப்பிப் பொடிசெய்து, போட்டுக் கொடுக்கத் தீரும்.

---

1. தலை விண்ணேறுதல் = தலையிடித்தல்; கடுமையான தலைவலி எனப் பொருள்.

2. நாக்கின் மத்திய பாகம் தடித்துக் கெட்டியாகவும், ஈரல் சுருண்டும் இருக்கும் என்று கருத்து. இங்கேயும் ஈரல் என்பது இன்னதென்று அறியக்கூடாததாயிருக்கிறது; வாயில் ஈரல் இருப்பதென்பது பொருந்தாது.

3. மதிச்சு = மசித்து ; மர்தநம் செய்து.

## 7. அக்கா குயிலின் குணம்

சரீரம் பிணம்போல நொந்து, தடி கொண்டு அடித்தாப் போல் இருக்கும். கண(ன்ன)ங்கள் நொந்து, சுரம் அதிக மாகத் தோன்றும். வாய் கசந்து வாந்தி எடுக்கும். நாக்கும் பல்லிகறுங்கிறும்,[1] கண்ணும், பச்சாகிளாச்சிபோல (?) இருக்கும். மூக்கால் ரத்தம் விழும். இது கபாலம் வெடித்து ஒரு நாளொன்றுக்கு அறுபது நாழிகைக்குள்ளாகத் தம் விழுந்து (?) குளி என்று சொல்லப்படும். இப்படி மூன்று நாள் விழுந்தால் ஐந்தாம் நாள் (அல்லது) ஆறும் நாள் கொல்லும்.

அக்கா ஏழு வகைப் பெயர் குணம் முற்றும்.

### அக்கரத்திற்கு நெய்[2]

அதிமதுரம், சீரகம், ஏலம், சாத்திரபேதி,[3] கல்நாறு(ர்) செஞ்சந்தண(ன)ம், பூதக்காயன்(?) கிரு(ர)ம்பு, திப்பிலி, வெள்ளைச்சாரணை வேர் விலா(ள)......சதை, இவை சமன் கொண்டு அரைத்துப் பசுவின் நெய்யில் குழப்பிக்கொண்டு, ஒரு கரண்டி நெய் கொடுக்க அக்கரம் தீரும்.

### கணைக்கு கிஷாயம்

செஞ்சந்தண(னமு)ம், பூலாவீற்கும்,[4] சமன் கூட்டிப் பசுவின் வெண்ணை(ணெ)யில் மத்திச்சுக் கொடுக்க ஈரல் வலி, நெஞ்செரிப்பு, சோத்தியம்,[5] இவை எல்லாம் தீரும்.

---

1. பல்லீறுகளும் என்றிருத்தல் சரியாகும்.

2. அக்கரம் என்னும் நோய் தமிழ் வைத்திய நூல்களில் வெகு தாராள மாய் வழங்கப்படுவது. அக்கா என்று முற்கூறிய ஏழுவகை நோய்களும் 'அக்கரம்' என்பதற்குப்பதிலாய் தவறுதலாய் எழுதப்பட்டிருக்கலாமென்றும் இத்தொடர்பிலிருந்து ஊகிக்கவேண்டியிருக்கிறது. இந்நூலில் அநேக இடங்களில் விஷயங்கள் இவ்விதமே குழப்பமாகத்தான் காணப்படுகின்றன.

3. சதத்திரபதி = தண்ணீர் விட்டான்.

4. பூலாவீற்கு = புல்லாந்தி ஈர்க்கு.

5. சோத்தியம் = எதிர்பாராத ஏவல் முதலியதாலான தீங்கு.

## பிணிக்கு[1] மந்திரிக்கு(ம்) மந்திரம்

ஓராங்கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
தலைய(த்)து வீள் வதனையும்
இரண்டாம் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்
மூன்றும் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்
நான்காம் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்
ஐந்தாம் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்
ஆறும் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்
ஏழாம் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்
எட்டாங் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்
ஒன்பதாம் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்
பத்தாங் கடல் மேய்ந்து வார்பிள்ளைச் சிறகத்து
வீள் தலையத்து வீள் வதனையும்.

(வசனம்)

பத்தாம் கடலும் வற்றி, பால் கடலும் வற்றி, தீய்க் கடலும் வற்றித், திருப்பாற்கடலும் வற்றி, பால மாந்தம், பசு மாந்தம், ஓடு மாந்தம், ஊது மாந்தம், நடை மாந்தம், கொக்குப் பாவை, குருவிப் பாவை, நாட்டுப் பாவை, நகரிப் பாவை எல்லாம்; ஓம் காளி, பரமேச்வரி, நின் ஆணை நில்லாதேப் போகச் சிவா.

---

1. பிணிக்கு = பேய், ஏவல், சூன்யம் முதலியவற்றால் தோன்றும் உடற் கோளாறுகள் உள்ளக் கோளாறுகளுக்கு.

| | | | | |
|---|---|---|---|---|
| ந சா | ம<br>ய உ | சி<br>ய சா | வ<br>ய | ய<br>ள |
| ம<br>ய உ | சி<br>ய சா | வ<br>ய | ய<br>ள | ந சா |
| சி<br>ய சா | வ<br>ய | ய<br>ள | ந<br>சா | ம<br>ய உ |
| வ<br>ய | ய<br>ள | ந சா | ம<br>ய உ | சி<br>ய சா |
| ய<br>ள | ந சா | ம<br>ய உ | சி<br>ய சா | வ<br>ய |

நகாரமென்ற அக்ஷரத்தில் ஆறே ஆகும்,
நலமான மகாரத்தில் ஈரு(ரா)றுகும்
சிகார மென்ற அக்ஷரத்தில் ஈரெட்டாகும்[1]
சிறந்த நின்ற வகாரத்தில் பத்தெட்டாகும்
சிகார மென்ற சொல்லுக்குள் ஏழேயாகும்.
ஆதியானந்த குரு அருள் செய்தாரே.

ஓம், ரீம், வம், சிம். சிவாய நமஃ.

| | | | | |
|---|---|---|---|---|
| ந<br>ய | ம<br>ய அ | சி<br>சா | வ<br>ய ந | ய<br>சா |
| சி<br>சு | வ<br>ய ந | ய<br>சா | ந<br>ய | ம<br>ய அ |
| ய<br>சா | ந<br>ய | ம<br>ய அ | சி<br>சு | வ<br>ய ந |
| ம<br>ய அ | சி<br>சு | வ<br>ய ந | ய<br>சா | ந<br>ய |
| வ<br>ய ந | ய<br>சா | ந<br>ய | ம<br>ய அ | சி<br>சு |

| | | | | |
|---|---|---|---|---|
| ந<br>ய க | ம<br>ய | சி<br>அ | வ<br>ய கை | ய<br>ந |
| வ<br>ய கை | ய<br>ந | ந<br>ய க | ம<br>ய | சி<br>அ |
| ம<br>ய | சி<br>அ | வ<br>ய கை | ய<br>ந | ந<br>ய க |
| ய<br>ந | ந<br>ய க | ம<br>ய | சி<br>அ | வ<br>ய கை |
| சி<br>அ | வ<br>ய கை | ய<br>ந | ந<br>ய க | ம<br>ய |

## பே(ய்) நாய்க் கடிக்கு

(வசனம்)

கோளிச்சாறு[1] கொடுக்கவும்.

## எலிக் கடிக்கு

மோரில் அரைத்துக் கொடுக்கவும்.[2]

## இதற்குப் பத்தியம்[3].

## மருத்(ந்) தீட்டுக்கு

அந்த மருந்தின்[4] வேர்(ப்) பட்டை எடுத்து ஆட்டுப் பாலில் அரைத்துக் கொடுக்கவும்.

இதற்கு(ப்) பத்தியம் கோழிச்சாறு.

அதற்கெல்லாம் மருந்து முக்காரது இலையின்[5] வேர்.

## பார்வைக்கு மருந்து[6]

குண்டு முத்துத் தழை,[7] மு(மி)ளகாய்த் தழை, சின்ன கெப்பித்தழை (?), சடை மூங்கில் தழை. வேலிப்பருத்தித்

---

1. கோளி என்பது அத்தி, அரசு, ஆல், கொழிஞ்சி ஆகிய பூவாது காய்க்கும் மரங்களைக் குறிக்கும் சொல்.

2. முன் கூறிய கோளியை (இலையை) மோரில் அரைத்துக் கொடுக்க வேணுமென்பது கருத்துபோலும்.

3. இன்னது பத்தியமென்று விவரிக்காமல் விடப்பட்டிருக்கிறது.

4. எந்த நஞ்சு குணமுள்ள மருந்தீட்டால் பிணியுண்டாயிருக்கிறதோ அதே மூலிகை என்று பொருளாகிறது; இதுவும் தெளிவுபடாத விஷயமாயுள்ளது.

5. முக்காரது என்பது ஒரு மூலிகையின் பெயர் போலும்; ஒருக்கால் முக்கா வேளையா இருக்கலாம்.

6. பார்வைக்கு என்றால் பார்க்கும் சக்தி விருத்தியாவதற்கென்று பொருள் படுகிறது. இங்கு "பிள்ளைப் பிணி" என்னும் விஷயத்திலிருந்து திடீரென்று மாட்டின் கண்ணோய் விஷயத்திற்கு மாறியதற்குக் காரணம் தெரிய வில்லை.

7. குண்டு முதத்தழை என்பது குன்றித்தழையாயிருக்கலாமென்று தோன்றுகிறது.

தழை, குழலாதண்டை, நெல்லீற்கு, சோப்(ம்)புத் தழை, கணு மூங்கில்.

## முசல் முட்டு[1] வந்த மாட்டிற்கும் கண்ணில் வெள்ளை விழுந்த மாட்டிற்கும் மருந்து[2]

சுள்ளி முள்ளி[3]த் தழையும், ஏழு மு(மி)ளகும் அரைத்துப் பிழியவும்.

(செய்யுள்)

1. பத்துப் பெரும்புலி, ஆனை பதினெட்டு,
வித்தகர் நால்வர், வினையகர் ஐவர்,
அத்துடன் மூவர், அரு(று)வரை கூட்டி ஏழு
இதை அறிந்தவர் என் குரு ஆவார்.

2. உண்ணி ஒருவன் உரைத்த முதலெழுத்தைப்
பண்ணிப் பாவையாய் பாவித்து மின்னே கேள்
சி(ச)கத்தினில் பார்த்து மிகுத்துரைக்க நன்றும் நாளும்
ஒருவனை ஒருவன்வெல்ல உபாயங்கள் அறியவேண்டி
இருவர்போறு றெ(ர)ழுத்தை உயிரெழுத் ததுவேவாங்கிப்
பெருக்கிய பத்தில் தாக்கி(ப்) பெருங்கடல் ஏழுக்கு
[ஈய்ந்தால்த்
தெருவினில் உயர்ந்தோன் வேலனுவோன்
சிறுத்தவன் தோர்வை தானே(?).
எட்டுக்குத் துளை போடவும். தவுருகும்பை போடவும்(?).
மாலுக்கும் மயனுக்கும் மதி பூணரனுக்கும்;
நூலுக்கும் கயறு(ரு)க்கும் நுண்ணீளங் கண்டு

---

1. முசல் முட்டு என்பது ஒருவகை மாட்டு நோய் போலும்.

2. குண்டு முத்துத்தழை முதலியவற்றை இவ்வித மருந்தாகச் செய்து உபயோகிக்க வேண்டுமென்று கூறி யிருத்தல் நலம்.

3. சுள்ளி முள்ளி = மயிர்க் கொன்றை.

நாலுக்கும் மூணு(னு)க்கும் நடுவிற்கும் நடுவே
காலுக்கும் கதவிற்கும் கம்பைக்கு மிதுவே(?)
.........ெநதகோ.........மானே.........பெண்.........ணு.(?)
கார்குழல் கன்னிகோலம் கருத்தினுல் அறியவேண்டில்
பேர்தனைச் சொல்லச்சொல்லி பேரெழுத்ததனை எண்ணி
ஓர் எழுத்தொறு(ரு) மூன்ருக்கி உற்றதோர் பக்கம்கூட்டி[1]
ஈர்எ(ரெ)ழுத்ததனை ஈய்ரெ(இர)ட்டைப் பெண்
[ஒத்தை(ற்றை) ஆணே.(?)

1. "ஓராங்கடல் மேய்ந்து" என்கிற பாட்டு முதல் "தெருவினில்" என்று இறுதியிலுள்ள பாட்டு ஈருக, இடையே யுள்ள புதிர்போன்ற விஷயங்களும், மந்திரம் முதலியனவும் பிள்ளைப்பிணி விஷயத்துக்கு எங்ஙனம் பொருந்துமென்று உற்றுப் பரிசீலனை செய்யப்பட வேண்டிய விஷயங்கள்.

# பிள்ளைப் பிணி வாகடம்

## (இரண்டாம் பாகம்)

### கட்டு மாந்தத்திற்கு[1]

### வயறூதியே இருக்கும் இதற்கு கிஷாயம்

(வசனம்.)

நுணாமரத்து இலை, ஓமம், நற்சீரகம் இவை மூன்றும் வருத்துப் பாதி கருகிப் பாதி கருகாமல் இருக்கும்போது தண்ணீர் விட்டுக் கிஷாயம் வைத்துக் கொடுக்கவும்.

### மாந்தத்தின்மேல் ரத்தம் சீதம் விழுந்தால்

ஆவாறற்பூ[2] அரும்பும், சாதிக்காயும் அறை(ரை)த்துக் கொடுக்கவும். மாதளங்காயும், கிரு(ரா)ம்பும் அறை(ரை)துக் கொடுக்கவும்.

### குழந்தைகளுக்கு இருமல் ஜல தோஷத்து(ங்களு)க்கு

கண்டங்கத்திரி, தூதுவளை இலை, துளசி இலை, ஆடா தொடை இலை, முருக்கிலை, இது வெ(இவை எ)ல்லாம் சமனு கப் பிடுங்கி (இடித்து)ப் பிட்டு வைத்துப் பிழிஞ்சு கொடுக்க வும். கணைசுரம், சீத சுரம், இருமல், (இவை) தீரும்.

பருசாய்(?) வெய்யிலில் உலர்த்தி வைத்துக் கொண்டு, சிறு குழந்தைகளுக்கு முலைப்பாலிலும், பெரியவர்களுக்கு சும்மா(வும்) தின்னவும். (இது) எந்த மாந்தத்துக்குமாகும்.

---

1. கட்டு மாந்தம் என்பது குழந்தைகளின் குடற்கோளாறு என்று இங்கு பொருள் கொள்ள வேண்டும். தொண்டைக்குள் கோழைக் கட்டு இருமல் இவற்றாலான கோளாறும் கட்டு மாந்தம் என்று சிலர்.

2. ஆவாரம்பூ என்று இருப்பது தகும்,

## பொ(போ)ர மாந்தம்[1]

துடுப்புப் பாலைக்(?) கொண்டு வந்து, கஞ்சி காய்ச்சிக் கொடுக்கவும். [2]கள்ள பிணிக்குக(?) கண் சொருகும். வட்டமிடும்[3]. மயிர் நாட்டமாய்[4] நிற்கும். வாந்திப் பிரு(ரா)ந்தி[5] காறு(ணு)ம்.

### (இதற்கு)துக்கு(த்) துவளை

சின்னி இலை, களிச்சி இலை,[6] பெரும் பட்டை,[7] பீஞரி குட்டி, விளா, குளி மு(மி)ட்டான்[8], கஞ்சாங் கோரை, உளரு சுத்தி,(?), மஞ்சள், வெள்ளைப் பூண்டு, வேப்பிலை, இவை [9]யெல்லாம் நறுக்கி துவளை[10] (செய்து), மூன்று வேளை போடவும். தாய்க்கு மார்பில் தடவி அலம்பிப் போடவும[11].

---

1. போர் மாந்தக் குறிகள் :—"பொருமுங் கழியும் புரண்டு வலியுண்டாம் மருவி முலையுண்ணு மயங்கும்—வெருவி மிகச் சத்தி செய்யுங் கட்குழிந் தாகமிக வெதும்பும் வற்றி யிடும் **போர் மாந்தமாகும்.**" (பாலவாகடம்.)

(இதைப்பற்றி 72-74 செய்யுட்களையும் பின்னால் காண்க.)

2. துடுப்புப்பால்(?) என்று மருந்து ஒன்று குறித்துவிட்டு, அதன்பின் சிறிது நோய்க்குறிகளைக் கூறுவது ஒழுங்கா என்று கேள்வி யுண்டாம்.

3. வட்ட மிடும்=கண்கள் வட்ட மிடும். (கண்கள் சுழலமிடும்.)

4. நீட்டமாய் அல்லது நெட்டையாய் என்று இருத்தல் பொருந்தும்.

5. பிராந்தி=மயக்கம்.

6. களிச்சி யிலை=கழற்சி (கெச்சக்காய்) இலை.

7. பெரும் பட்டை=பெருமரப்பட்டை.

8. குளிமிட்டான்=நத்தைச் சூரிப்பூண்டு. (அல்லது தண்ணீர் முட்டான்.)

9. யிதுவை=இவற்றை என்றிருத்தல் வேண்டும்.

10. துவளை=பற்றுப்போடும் கூழ்போன்ற மருந்து.

11. தாயின் மார்பை முதலில் அலம்பிவிட்டு, பிறகு மார்பின்மேல் இத் துவளையைத் தடவவும் எனப் பொருள்.

## சகல மாந்தத்துக்குக் குளிகை

ஏலம், வைங்கம், சாதிக்காய், சாதிபத்திரி, சுக்கு, திப்பிலி, ஓமம், மு(மி)ளகு, வெள் வெங்காயம், பெருங்காயம், அதி மதுரம், சித்த(ற்ற)ரத்தை, கல்லுப்பு, கடுக்காய், கோரே(ரோ) சனை, யிந்த வகை (இவை)[1] வகைக்கு ஷெ க[2]. வெள்ளாட்டு இறைச்சியில் சரக்கும செத்தி வெண்ணீரில்(?) அரைத்து, பருத்திக் கொட்டைப் பிரமாணம் உருண்டை பண்ணி, நிழ(லி)லுலர்த்தி அனுபானம் அறிந்து கொடுக்கவும்.

## மாந்த குளிகை

### கட்டு மாந்தத்துக்கு

1. சுக்கு, மு(மி)ளகு, ஓமம், நற்சீரகம், வெள்ளுள்ளி, சிலந்திக் கொடி வேர், இது வெ(இவற்றை எ)ல்லாம் ஒரு நிறையா யெடுத்து, வெண்ணீ(ன்னீர்)ரில் விட்டரைத்து, தூதுவிளங் காய்ப் பிரமாணம் குளிகை செய்து கொண்டு வெண்ணீ(ன்னீ) ரில் கொடுக்கவும். வருஷமான குழந்தைகளுக்கு(க்) குழந்தை கள் நிதானங் கண்டு[3] கொஞ்சமாய் உரைத்துக் கொடுக்கவும்.[4]

2. கோரோசனை, வெங்காயம், கடுகு ரே(ரா)கணி, யிது (இவை) மூன்றும் சரி நிறையாய் வைத்து, வெத்தி(ற்றி)லைச் சாறுகிலும், அகத்தி யிலைச்சாறுகிலும் விட்டரைத்து சிறு குளிகை செய்து, வெத்தி(ற்றி)லைச் சாற்றில், அல்லது அகத்தி யிலை(ச்) சாற்றில் கொடுக்கவும். உள் மாந்தம் கட்டு மாந்தம் இதுகள் (இவை) தீரும்[5].

---

1. இவை என்பதற்குப்பதில் யிந்த வகை என்று எழுதப்பட் டிருக்கிறது.

2 ஷெ க = வராகனெடை ஒன்று.

3. நிதானங்கண்டு = உடலின் பலாபலம், வியாதியின் நிலைமைகள் முதலியவற்றை உற்று நோக்கி.

4. கட்டு மாந்தத்திற்கு இது இரண்டாவது மருந்து. (பக்கம் 55-பார்க்கவும்.)

5. கட்டு மாந்தத்திற்கு இது மூன்றாவது மருந்து.

## குழந்தை மூலம் புறப்பட்டதற்கு

ஒரு வாழைக்காய் [1]முகிள றுங்(த்)து, அதற்குள்ளே ஒரு குன்றி பிரமாணம் அவ(பி)னி வைத்து, எருமை(ச்) சாணியில் பொதிந்து, தீயால் சுட்டு வெந்ததின் பிறகு, அந்த வாழைக்காயை எடுத்து அரைத்து, பி(பு)ளியங் கொட்டை மாதிரி[2] வெண்ணீ(ன்னீ)ரில் கொடுக்கவும்.

## எங்கல முட்டடை யாளுக்கு[3]

1. வெசுபி யணைஞ்சானிலே (?) கொண்டு வந்து, வசம்பு, வெள்ளைப்பூண்டு, மூன்றுந் தட்டி சாறு பிழிஞ்சு, வெள்ளைப் பூண்டு மூன்று தட்டி, முலைப்பாலில் லெகித்து(?) குழந்தைக்குக் கொரு சம(?) வார்க்கவும்.[4] அ(ஆ)தண்டை இலை பறித்து, பெருங்காயமும் ஒன்றில்[5] வைத்து, அதிலே இந்த(ச்)சாறு[6] பிழிஞ்சு, பெருங்காயமும், முலைப்பாலும சேர்த்து[7] வார்க்கவும்.

---

1. முகிள் = முகிழ், முகுளம் (வடமொழி), முதிராத வாழைக்காய் எனப் பொருள்.

2. புளியங்கொட்டை மாதிரி (அந்த அளவில் மாத்திரை) செய்து என்று கருத்துப்போலும்.

3. முட்டடைப்பான் என்று குழந்தை நோய் ஒன்று வழங்கப்படுகிறது. ஆனால் எங்கல முட்டையான் யாதோ ?

4. குழந்தைக்குக் கொடுக்கவும் என்பது பொருள். (இங்கு வாக்கியத்தில் பிழை இருக்கிறது.)

5. ஒன்றில் = ஒரு எனத்தில்.

6. இந்தச்சாறு = ஆதண்டை இலைச்சாறு என்று பொருள்.

7. ஆதண்டை இலைச்சாற்றில் கலந்த பெருங்காயத்துடன் முலைப் பாலையுங் கூட்டி என்பது பொருள்.

## குழந்தைகளுக்குக் குளிசங் கட்டுலக்கி தோஷத்திற்கு(?) குளிசங் கட்டவும் (கட்டல்)

1. ஆவாரை நிழலடி செ(ய)ண்டை ஞாய்(யி)ற்றுக் கிழமை நாள் காப்புக் கட்டி, பலி கொடுத்து, நுணி வேர் அருமல் குளிசமாடி[1] கட்டவும்.

2. கீழாநெல்லிக்கு ஞாய்(யி)ற்றுக்கிழமை காலமே (லேயில்) காப்புக் கட்டி தூபம் பலி கொடுத்து, நுணி வேர் அருமல் பிடிங்கி வந்து (குளிசம்) கட்டவும். அந்த வேரு(ரையு)ம் வசம்பு(பையு)ம் நெய்யில் கொதிக்க வைத்து, காசிடை உள்ளுக்கு(ப்) புகட்டி, மேலு(க்கு)ந் தலையிலும் துவளை யிடவும்.

### பிணிக்கும், பிசாசுக்கும், விஷதோஷத்திற்கும் மந்திரம்

“அங்குரங்கு இங்குரங்கு உங்குரங்கு எங்குரங்கு”. “ஓம் சிவாய நமஃ” குருவே துணை செய்யவும்.

### குழந்தைகளுக்கு தாகத்திற்கு—பிணிக்கு—பிசாசுக்கு மந்திரம்[2]

### குழந்தைகளுக்கு தாகத்திற்கு கட்டு மாந்த குளிகை[3]

1. அரசம்பட்டை, அதனுடைய கொழுந்து, ஈரமணலே வறுத்து தீ பறக்கவிட்டு, இதை வறுத்து கொட்டிப் போட்டு வறுத்து[4] கிஷாயமிட்டுக் கொடுக்கவும்.

---

1. ஆவாரஞ் செடியை நுணி வேர் அறுந்துவிடாமற் பெயர்த்தெடுத்து, அதன் ஒரு பாகத்தைக் குளிசமாகக் கட்டவேண்டும் எனக் கருத்து,

2. மந்திரம் என்று குறிப்பிட்டிருந்தும் இங்கு மந்திரமேதும் காணப் படவில்லே. ஆனல் மேலேயுள்ள “அங்குரங்கு” என்னும் மந்திரமாயிருக்கலாம்.

3. கட்டு மாந்தத்திற்கு இது 4-ம் மருந்து. (57-ம் பக்கம் பார்க்க).

4. அரசம்பட்டை முதலியதை இடித்து வெந்த மணலுடன் பேர்ட்டு கஷாயமிடவும் எனக் கருத்து.

2. சட்டியை(க்) காயவைத்து, கல்லபற்ப வறுத்து(?) பர(ற்)ப்பமாக்கிக் கொட்டிப் போட்டு கோணி பட்டு(டை்யை)ப் போட்டு, கருகி வருகிற பக்குவத்தில் பழையருய்(?) தீட்டிப் புடைத்துப் போட்டு, கோணி(ப)பட்டு(டை)மேல் போடவும்(?). ஓமம் இரண்டு(?) போடவும். கிஷாயம் வைத்துக் கொடுக்கவும். வாந்தி, பிரு(ரா)ந்தி, சலக்கழிச்சல், குடுகுடுப்பான தாகம் இது (இவையே) வெல்லாம் தீரும்.

## கட்டு மாந்த குளிகை[1]

சுக்கு, மு(மி)ளகு, ஓமம், நற்சீரகம், வெள்ளைப் பூண்டு, தலை சுருளி வேர், இதுவெ(இவற்றையெ)ல்லாம் சமன்நிறைபோட்டு வெண்ணீ(ன்னீ)ர் விட்டு அரைத்து, கடலைப் பிரமாணம் குளிகை செய்து வைத்துக்கொண்டு, வய(யி)று ஊதினுல் வெண்ணீ(ன்னீ)ரில் கொடுக்கவும். குழந்தை மூன்று வருஷமானுலும் கொடுக்கலாம். வயிறு ஓட்டமானுல் பொடுதலையும் ஓமமும் போட்டுக் கரு(க்)கி கிஷாயம் கொடுக்கவும்.

## பால மாந்தத்திற்கு (குளிகை)

கோரோசனை, வெங்காரம் இவை (இவற்றை) பொரித்து, அகத்தி இலைச்சாறு விட்டு அரைத்து, சிறு பயறு மருவாதி[2] உருண்டை செய்து வைத்துக்கொண்டு, ஒரு குளிகை முலைப் பாலில் கொடுக்கவும். இது பலவகை மாந்தமும் நீக்கும்.

## குழந்தைகளுக்கு மந்திரம்

“அம்மதின் கருணை பொங்கி அலையெரிதயன் வேலைக்கும்ம மல்லிக்கொரு மன்னதோரை மு ம ம மலங்காய முளகச்,”

“செம்மனின் சோகாயாறுதொரேவகை வகையமுணை மூன்று தன் வயற்ரேும் வந்துற்ற தன்மை இதெனபர மிசகோர்.”

---

1. கட்டு மாந்தத்திற்கு இது ஐந்தாம் மருந்து. (59-ம் பக்கம் பார்க்க.) இது பெரும்பாலும் இரண்டாம் மருந்து போன்றது.

2. சிறுபயறு மருவாதி = சிறுபயறளவு என்று பொருள் போலும்.

## இதுக்குத் துவளல்

ஆவ(க்) கொழுந்து[1], அப்பைக் கொழுந்து[2] குளிமுட்டான்[3], கல்லுப்பு, நரி விட்டை, வேப்பிலை, சின்னி இலை, உளறி சுத்தி(?), மஞ்சள், வசம்பு, ஒரு கட்டைப்பூடு[4], வெள் வெங்காயம், இதுவெல்லாம் (இவற்றை) இடித்து, குழந்தைக்குத் துவளைத் தாயி(ய்)க்கு(ம்) மார்பில் துவளை யிடவும். பிணி நிற்கும்.

## வாந்தி பிரு(ர)ந்திக்கு(ம்), குளிர் சுரம் மாந்தத்திற்கு(ம்)

சின்னி இலை, புங்கங் கொழுந்து, நாயுர்(ரு)விச் ச(க)லமும் கருக்கி, கிஷாயமிட்டு(க்) கொடுக்கவும். வாந்திக்கு குளிமிட்டானும், கோரைக் கிழங்கும் அரைத்து முலைப்பாலில் கொடுக்கவும்.

## விக்கலுக்கு

தாளிசபத்திரி அரைத்து பாலில் கொடுக்கவும்.

## அரோசிய(சக)த்திற்கு

ஏலம் ஷெ க. சிறு பலகரை(றை) உ, மயிலிறகு(த்) தண்டு உ[5], திரி பண்ணி, அக்னி பர்ப்பம் செய்து[6]. பொடித்து கடுத்தத்திலிட்டு(?), தேனில் முலைப்பாலில் நாவில் தள மிடவும்[7].

---

1. ஆவக்கொழுந்து என்பது ஆவட்டங் கொழுந்து என்று திருத்தப் பட வேண்டும்.

2. அப்பைக் கொழுந்து = கொன்றைக் கொழுந்து.

3. குளிமிட்டான் = தண்ணீர்முட்டான்.

4. உள்ளிப்பூண்டு ஒன்று என்று பொருள்.

5. பலகறை, மயிலிறகு ஒவ்வொன்றும் இரண்டு வாராகனெடை எனக் கருத்து.

6. திரிபோல் அரைத்து உருட்டி நெருப்பிலிட்டுச் சாம்பலாக்கு என்று பொருள்.

7. தேனில் அல்லது முலைப்பாலில் குழைத்து நாக்கில் தடவவும் என்று கருத்துபோலும்.

## வாந்திக்கு

கோரைக் கிழங்கு, குதியிரகும்(?) அரைத்து, முலைப்பாலில் அல்லது வெண்ணீ(ன்னீ)ரில் கொள்ளவும்.

## வால்கிரிக்கு[1] குளிசம் கட்ட(ல்)

ஞாயிற்றுக்கிழமைக்கு(மையன்று), சென்னுயுர்(ரு)விக்கு காப்பு கட்டி, தூபம் கொடுத்து, பலி கொடுத்து (அதைப்) பிடுங்கி வந்து விக்னேச்வரனுக்கு பூசை செயது குளிசமாட்டி கட்டவும்.

## கள்ள(ப்) பிணிக்கு (மருந்து)

விடத்திலாறுரை(?) ஞாயிற்றுக்கிழமைக்கு(மையன்று) இடம்புரி வலம்புரி சுற்றி சூர்ய நமஸ்காரம் செய்து, வாயாலே ஞரு[2] உரித்து வந்து, அதனுடன் கடுகு, வெள்ளை வெங்காயம், வசம்பு, (இவற்றால்) குளிசமாடி கணபதி பூசை செய்து பலி கொடுத்து கட்டவும்.

## மாந்த மெடுத்து உலைத்தியும்[3] தாகமும் சரமுமானுல் மருந்து குளிசம்

1. (கஷாயம்) சட்டி(யைக்) காயவைத்து, சட்டி(யில்) தீ பறந்த பின்பு, கல்லுப்பு போட்டு வறுத்து கொட்டிப் போடவும். பிறண்டை வறுத்து கொட்டிப் போடவும். மூன்றுவது ஓமம் வறுத்து கொட்டிப் போடவும். கோணி பட்டுப்(ப்பட்டை)ப் போட்டு வெந்ததின்மேல், ருயி(?) போட்டு, ஒருபடி தண்ணீர் விட்டு கிஷாயம் வைத்து, ஒரு சங்கு கொடுக்கவும். கொடை வேலாறுரை(?) ஞாயிற்றுக்கிழமை கொண்டு வந்து கணபதி பூசை செய்து பலி கொடுத்து, குளிசமாடி கட்டவும்.

---

1. பால கிரஹம் என்பது வால்கிரி என்று திரிபடைந்திருக்கலாம்.

2. வாயாலே ஞரு = இது வாழிலை நார் அல்லது வாழை நார் என்றிருத்தல் தகும்.

3. உலைத்தி = உலைத்தல், 'உள்ளக்கலக்கம்' ஸந்நிபாதாதி தோஷங்களில் ஏற்படும் மனோவிகாரம்.

## குளிச கட்டு (குளிசங் கட்டுதல்)

ஞாயிற்றுக்கிழமை நாள், ஆவரையடி இலை சிறுகன்று முளைத்த தாய்ப் பார்த்து(?) நுனி வேர் அறுமல் பிடுங்கி, பலி கொடுத்து குளிசமாடி கணபதி பூசை செய்து கட்டவும்.

ஆவாரைமேல் குளிசம்போலே தொங்காமல்(?) பூச்சிக் கூடு உயிரிருக்கிறதாய் பிடித்துக் கொண்டு வந்து(?) ஐந்து வகை நூல் சுத்தி(ற்றி), கணபதி பூசை செய்து பலி கொடுத்துக் கட்டவும்.

## பெரிய வாலைக்கு[1] (மருந்து)

துளி(ள)சி, ஞ(நா)ய்த் துளசி, நொச்சி இலை, நாயுருவி இலை, வேப்பிலை, கழுதைத்தும்பை இலை[2], பீமரத்து இலை(?), உத்தாமணி இலை, பிள்ளை(த்) தக்காளி இலை, கோழி ஆ(அ)வாரை இலை, அவரை இலை, அப்பை(க்) கோவை இலை, பி(பு)ளி இலை, பெருமு(மி)ட்டை[3], பீஞ்ரி இலை, விபூதி(ப்) பச்சை இலை, சின்னி இலை, குட்டி விளா இலை, எருக்கிலம்(லைப்) பழுப்பு, களச்சி இலை, உளரு சுத்தி(?), மஞ்சள், வசம்பு, வலம்புரிக்காய், வெள்ளைப் பூண்டு இவை யெல்லாம் தீட்டி[4] தாய்க்கு மார்பிலும், பிள்ளைக்கு(ச்) சரீரமெல்லா(மு)ம் துவளை யிடவும். சகல தோஷமும் தீரும.

## வாந்திக்கு மந்திரம்

“ஆரை யடைக்கயங்க மடைக்க மரகத்தின் பங்கு மடைக்க எங்கு மடைக்க சுவாகா, ஓம்”.

---

1. வாலை என்பது வால(பால) கரப்பான் என்னும் நோய்.

வாலகரப்பான் குணம் :—

“காலது கடுக்குஞ்சந்து கண்டமும் வெடித்துப் புண்ணாய்
ஏலவே கடிவிடம்போல் இருந்து பன்னீர்போல் பாய்ந்து
கோலமாய் வற்றி நாறும் குழவியு மொடுங்குமாகில்
மாலருங் குழலாய் வாலகரப்பான் செய்வாறுதானே.”

(பாலவாகடம்.)

2. கழுதைத் தும்பை என்பது நேர்.

3. பெருமிட்டை என்பதும் பீஞ்ரி என்பதும் ஒன்றே யாதலால் பெருமுசட்டை என்றிருத்தல் பொருந்தும்.

4. தீட்டி = அரைத்து.

## பிள்ளை(ப்) பிணிக்கு[1] மந்திரம்

1. "ஓம் குரு வாழ—குருநாதன் வாழ—எந்தன் ஆசாரி வாழ—எவ்வாணை மறக்கிலும் குருவாணை மறவேன். குரு இருந்த இடத்தில் கூட்டிய காலும் நீட்டறியேன். அரிறுகு (அவரருகு) இருந்து ஆசாரம் செய்வேன்[2]. குரு தொட்ட மிதி அடியும், பள்ளிக் குடையும், பாவாடையும், குரு கொடுத்த பிறம்பு மடியேன் ; உச்சிமேல் கொண்டேன் சிவா"[3].

2. "ஓம் அதுவும் ஸ்ரீரியும் ரகிலீயுங் கணபதயே நமஃ. ஓம் குரு வாழ நம(ச்)சிவாய. கடலிலே விழுந்து புள்ளு ஒண்ணுங் கல்லைப் புல்லைத் தார்ந்து வீழ்ந்து புள்ளுப் புத்தால் கடலிலே பாற்கடல் தோன்றி, பளிங்குமா மண்டபத்தில் செம்பிருந்து முட்டை இட்டு குஞ்சு பொறித்த தகமைபோலும். நூற்றெட்டு தோஷமும் பறந்துபோகச் சிவா."

3. "ஓம் காளி, ஓம் பிடாரி, ஓம் சிவாய".

## வால்கிரி தோஷத்திற்கு மந்திரம்

"ஓம் காளி, ஓம் பிடாரி, ஓம் சிவாய நமஃ வால்கிரி தோஷ முச்சாடய, குளி தோஷ முச்சாடய, பட்சி தோஷ முச்சாடய.[4] தோஷ மாத்த மாவகிம்பச்சினிச் சுவாகா, சிவாய நமஃ"[5].

---

1. இந்நூலில் கூறப்படுவதெல்லாம் பிள்ளைப் பிணியே. இங்கு எவ்வித பிள்ளைப் பிணி யென்பது குறிக்கப்பட்டிருத்தல் நலம்.

2. ஆசாரம் செய்வேன் = உபசாரம் செய்வேன்.

3. குரு பக்தியை விளக்கும் இம்மந்திர வாக்கியங்கள் பிள்ளைப் பிணிகள் அகற்ற எங்ஙனம் உதவுமென்பது ஆராய்ந்தறிய வேண்டிய விஷயம். (குழந்தைகளுக்கு மந்திரம் என்பது 59-ம் பக்கமும் இவ்விஷயத்தைப் பற்றியதே.)

4. "ஓம் சிவாய நம:, தோஷம் உச்சாடய" ஆகிய மந்திரங்கள் வடமொழிச் சொற்கள் ; தோஷத்தை அகற்று என்று அதன் பொருள்.

5. ஸ்வாஹா சிவாய நம: என்பது மந்திரத்தின் முடிவு.

## மாந்த குளிகை[1]

சுக்கு, மு(மி)ளகு, திப்பிலி, வெள்ளை வெங்காயம், கடுகு, வசம்பு, கடுக்காய், தேசாவாரம், கருவேப்பிலை, பெருங்காயம், கடுகுரோகிணி, சீனிக்காய், ஓமம், திருகடுகு, தாணி(ன்றி)க்காய், ஏலம், லவங்கம், லவங்கப்பட்டை, மஞ்சள், கோரோசனை, கொத்தமல்லி, சீரகம், மெ(வெ)ந்தியம், கார்போக அரிசி, வகைக்கு ஷ 1. வனமூலிகை, ஷ; வேப்பங்கொழுந்து, ஞெ(நொ)ச்சிக் கொழுந்து, சின்னி இலை, முள்ளி வேர், பெருத் தலாம் வேர்(?), பொருப்பி வேர்,[2] வகைக்கு ஷ 2. கல்லுப்பு ஷ 2. வெத்தி(ற்றி)லைச் சாறு படி த[3]. காட்டு மொச்சைச் சாறு படி த. தழையை வெதுப்பிச் சாறு வாங்கவும். இவை யெல்லாம் இந்தச் சாற்றில் அரைத்து[4] ரொட்டி செய்து, கல்லுப்பு பொடிமேல் பொடி தூவி, அருசுதிரம்(?) புடம் செய்து, ஐந்தும் அரைத்து(?), மெழுகு பதமானால், பின்பு சிறு கடலை(ப்) பிரமாணம் உருண்டை செய்து, நிழ(லி)ல் உலர்த்தி வைத்துக் கொண்டு, ஸகல வியாதிகளுக்கும் அனுபானம் அறிந்து கொடுக் கவும். ஒவ்வொரு மூலிகை யிடவும்(?).

## பிள்ளைப் பிணி மாந்த கணை செய்யுங் குணம்[5] லக்ஷணக்குறி[6]

வய(யி)று ஊதி இருக்கும், சோறு போல வயிறு கழியும். உச்சி தாழும். மயில் போல கண் துயிலும் மயக்க மாகும். வய(யி)றும் நெஞ்சும் புண்போலே வெந்திருக்கும்.

---

1. மாந்தத்திற்கு குளிகை ; (இது பால மாந்தத்திற்கு 2-வது மருந்து 60-ம் பக்கம்.)

2. பொரும்பி வேர் = சுழலாவாரை வேர்.

3. த = இது முக்காலை குறிக்கும் கீழ்வாய் எண்.

4. சுக்கு முதலிய முற்கூறிய சரக்குகளை வெற்றிலைச்சாறு முதலிய வற்றில் அரைத்து எனப் பொருள்.

5. மாந்த-கணை செய்யுங் குணம் = மாந்த-கணைகளுக்கு ஏற்படும் குறிகள்.

6. குணம், லக்ஷணம், குறி மூன்றுக்கும் ஒரே பொருள் ; இவற்றுள் ஏதேனும் ஒன்று குறிப்பிட்டால் போதுமானது. ஆனால் இங்கு எல்லாச் சொற்களும் குறிக்கப்பட்டுள்ளன ; ஏனென்று தெரியவில்லை.

## மந்திரம்

“ உய்வாக கருணை தென்கோதை மாதேபோலே கறக்கும். நிசூரியன் பரீக்ஷை பார்த்து, அயவாய் மாந்தக்கரையோன் கண்டறிந்து அகட்டீரே ”.

## இதற்கு[1] மருந்து

லவங்கம் 2. திப்பிலி 2· சீலையில் முடிஞ்(ச்)சு(ப்) போட்டு, அரை(ப்)படி தண்ணீரில் வேகவைத்து, ஒரு சேர் தண்ணீராக(க்) காயச்சி, அந்த (அதிலிருந்து) திப்பிலியை எடுத்துப் போட்டு, கிரு(ரா)ம்பு மாத்திரம் அரைத்து, கிஷாயத்தில் (கலந்து) வார்க்கவும்.

## பத்தியம்[2]

ஓமம் ரெ(இர)ண்டி(ட)ரை கொண்டது, நற்சீரகம் மூன்று நிறை கொண்டது, கருஞ்சீரகம் ஐந்தரை, கருங்குங்கிலியம் ஐந்து நிறை, சுக்கு மை(ஐ)ந்தரை, வசம்பும் ஐந்தரை, கடுக்காய், ஒரு உள்ளி(ப்)பூடு, சீய்க்காய்; இந்த மருந்தெல்லாம், ஐந்து ஆவாரை இலைகளில் வைத்து, வாழை நாறு(ர்) சுற்றிக் கட்டி, தீயில் போட்டு, தழை கருக வெந்ததின் பின்பு எடுத்து, அந்த மருந்தை அரைத்து, இரவில் வெண்ணீ(ன்னீ)ரில் கலக்கி உள்ளுக்கு வார்க்கவும். அதன் பின்பு கம்பரிசியை கேந(?) அரைத்து, தண்ணியில் கலக்கி, சுக்கு தட்டிப்போட்டு, சிவக்க(க்) காய்ச்சி ஆறவிட்டு, இரண்டு சங்கு போ(ட்)டவும். மறு நாள் நற்சீரகம் ஒரு உள்ளிப்பூடு வசம்பு அரைத்து, இள வெண்ணீ(ன்னீ)ரில் கொடுக்கவும். இந்த மருந்து மாந்தத்திற்கு மாகும்.[3]

---

1. இதற்கு = மாந்த-கணைக்கு.

2. பத்தியம் என்று தலையங்கம் இருப்பினும் இதன் கீழ் கூறப்படுவது மாந்தத்திற்கான மருந்தே; பத்தியம் என்று ஏன் குறிக்கப்பட்டதென்று விளங்கவில்லை.

3. மாந்தத்திற்குமாகும் என்றால் இம்மருந்தின் உபயோகம் வேறு எதற்கென்று கூறப்படவில்லை.

## குழந்தை தெளிவிற்கு மருந்து

ஊஞ்ச மரத்துப்(?) பட்டயை நேக(?) தட்டி, பசுவின் நெய் ஒருபி(ப)டி சட்டியில் வார்த்து, அதிலே வசம்பு(ம்), வெள் வெங்காயப்பூடு ஒன்று(ம்) தட்டிப் போட்டு, நெய்யை(க்) காய வைத்து இறக்கி, ஆற விட்டு இரண்டு வேளையும் முலைப் பாலில் கலக்கி உள்ளுக்கு வார்க்கவும்[1]. இது கர்ப்பிணிக்கெல் லாம் நல்லது[2]. இண்டங் கொழுந்து கூட போட்டுக் கொள்ளவும்.

### ஊது மாந்தத்தின் குணம்

மாவிற்கு அரைத்தாப்[3] போலே வய(யி)று போம். நாற்றக் கொள்ள[4] பானு முன்பனியெனப் போமே.

### மாந்த கணத்திற்கு (மருந்து)

### செத்தெரிக்கணமாந்தம்

(செய்யுள்)

1. புள்ளடி பொடுதலைச்சாறும் பொசிப்பதோர் தகரைச்சாறு
மெள்ளவே மு(மி)ளகு தாளி மிகு கருநொச்சி பாச்சி[5]
வெள்ளுள்ளி வசம்போடீர் வெங்காயச்சாறு தானுதோ
ரளிதான் சமன்கொண் டெண்ணெ(ணெய்).

[செத்தெரிக் கணமாந்தத்திற்கே. (271)

---

1. வார்க்கவும் = குழந்தைகளுக்குப் புகட்டவும்.

2. குழந்தைகள் மயக்கம் முதலியதிலிருந்து தெளிவு பெற இது உப யோகமாவதோடு கர்ப்பிணிகளுக்கும் நல்லது என்று பொருள் கொள்ள வேணும்.

3. மாவை அரைத்தாப்போல் என்றிருத்தல் தகும்.

4. ஊது மாந்த குணம் இங்கே முற்றிலும் காணவில்லை; நாற்றக் கொள்ள என்பது ஒரு செய்யுளின் பகுதி எனத் தெரிகிறது. இங்கு சில விஷயம் விட்டுப்போனதாகவும் தெரிகிறது.

5. கருநொச்சிபாச்சி = கருநொச்சியிலைச்சாறு.

## கி(க)ஷாயம்

2. கால்மேலுத்த எண்ணெ(ணெய்) கடுகிய சாயங்காலஞ்
சீலமாஞ்சுக் கோடேோமம் சேர்ந்துபோன
[முசுட்டைவேளை
ஓலமாந்தாட்டு மூலமுகந் திப்பிலியுங் கூட்டி
கோலநீர் காய்ச்சிக்கொள்ள கடுங்கணமாந்தம்
[போமே. (272)

தாதொட்டிவேர் கொம்[1].................வேரும் ஆலந்தாரில் குளிசங்கட்ட மாந்தந் தீரும்.

3. மாந்த.............................................
வெந்தயந்தான் கூட்டி மிகுந்த நிம்பச்சாறு விட்டு
சாந்தய மில...............................யெறித்து
இந்தாகு மெய்யாங் கிரு(ரா)ணி மிடுங் கடுப்புமேக
[முதல் பெ....................ணே புகில். (273)

4. நன்னாரி சிறுகிளா காட்டுமல்லிகை நாவல் ரெண்டும்
பொன்னுரு சங்குடனே பாவட்டை நீலி பொருந்து
[கொஞ்சி
எந்நாளும் காய்கின்ற வட்டத்திருப்பி இவை இத்தினைவேர்
மின்னார்தன் பு(பி)ள்ளைகள் மாந்தந்தனக்கு மிகவும்
[நன்றே. (274)

## மாந்தத்திற்கு(க்) குடிநீர்[2]

(வசனம்)

வேலிப்பருத்திவேர், கொன்றைவேர், கிளுவை, பொடுதலையும், பாலில் பொரிய சிவதைக்கள்ளி பச்சை வெளிச்சையோடு மச்சசீலக்காய் கடுகுரோகிணி சிறந்த பால் விட்டுக் கொள்ளவும்(?)

---

1. இங்கிருந்து எட்டுப்பிரதியில் சில பாகம் சிதைந்து விஷயம் சிதறிப் போயிருக்கிறது.

2. மாந்தத்திற்கு இது 5-வது மருந்து.

## பலவகை மாந்தத்திற்கு மருந்து

சொ(சு)ரைத்தழை 1, பொடிதழை (பொடுதலை) பிடி 1, அவரைத்தழை ஐந்து[1]. இவை மூன்றையும் வாட்டி(ப்) பிழிஞ்சு கொள்ளவும். அதன் பின்பு வசம்பு கொஞ்சம், உள்ளு(ளி)ப் பூ(ண்)டு க, ஆமையோடு கொஞ்சம், இவை மூன்றும்(றையும்) வெதுப்பிப் பிழிஞ்சு(ச) சாத்தை(ற்றை) விட்டு அரைத்து[2](க்) கலக்கி உள்ளுக்கு வார்க்கவும்.

## இந்த மூன்று நாளைக்கு[3] துவளை மருந்து

சின்னித்தழை, நிலவிளாந்தழை, கஞ்சாங்கொற்றை[4] மூட்டை(?) நாறி(?) அறுகு, ஒரு உள்ளி, வசம்பு, ஊருசுத்தி, சிறுநீரு(ர்) இவை எல்லாம் கொண்டு வந்து வாசல்படி நடையில் அம்மியை வைத்து, அதிலே இதுவெல்லாம் (இவற்றை யெல்லாம்) வைத்து அரைத்து, துவளை போடவும். துவளை யிடும் வகை உச்சி(யிலும்), நெற்றி(யிலும்), முகத்திலும், முதுகிலும், கீழ்நோக்கி முதுகு(த்)தண்டிலும், (மேலும்) கீழ் நோக்கிக் கொண்டு வந்து உள்ளங்காலிலே(யும்) தேய்த்து(த்) துவளை போட்டு, மடியில் பிள்ளையை வைத்துக்கொண்டு, துவளையிட்டத் தழையை பிள்ளை தலையை(ச்) சுத்தி(ற்றி) முச்சந்தியில் போட்டு திரும்பிப் பாராமல் வரவும்.

## முயல் கண்ணுக்கு[5] மருந்து(?)

## (அடியில் வரும் மருந்தால்) நசியம் செய்யவும்

எருக்கிலம்(லைப்)பழுப்பு, ஒரு உள்ளி(ப்)பூண்டு, வசம்பு, இவை மூன்றும் ந(நெ)ய்ய(த்)தட்டி, சிறுநீரில் (அரைத்துப்)

---

1. சுரைத்தழை 1-பங்கு, பொடுதலைத்தழை 1-பங்கு, அவரைத்தழை 5-பங்கு என்று கருத்து.

2. வசம்பு முதலிய மூன்றையும் சுரைத்தழை முதலியவற்றின் சாற்றை விட்டு அரைக்க வேணுமென்பது கருத்து.

3. "இந்த மூன்று நாட்களுக்கு" என்பதிலிருந்து முற்கூறிய மருந்தை மூன்று நாட்கள் கொடுக்க வேணுமென்று அறியவும்.

4. கஞ்சாங்கோரை என்றிருத்தல் பொருந்தும்.

5. முயல் கண் என்பது இன்னதென்று வைத்திய சாஸ்திரப்படி விளங்கவில்லை; அப்பெயருள்ள நோயும் எந்நூலிலும் காணப்படவில்லை.

பிழிஞ்சு(?), சீலையில் பொட்டணங்கட்டி, நாசியில் பிழியவும். துளசிஇலை கொண்டு வந்து ந(நெ)ய்ய(த்)தட்டி, இந்தப்படி பொட்டணஞ் செய்து நாசியில் பிழியவும்.

## மொர மாந்தத்திற்கு[1](க் குறிகள்)

மாவிற்கு அரைத்தாப் போலேயும்[2], சுண்டைக்காய் தண்ணீர் போலேயும் வய(யி)று போம்[3]. கடகடவென்று வய(யி)று இரையும். புழு கட்டியுமாம் வய(யி)று போம்[4]. பசேலென்று (வாந்தி) எடுக்கும். கண்ணீர் விழும். கவட்டம் போன்றி யறுக்கும்(?). மயங்கி வேற்(ர்க்)கும். தாகமெடுக்கும். ஒவ்வொரு நேரம் உடம்பு காயும். பலவிதமாகச் செய்யும்[5].

## இதற்கு மருந்து

கஞ்சாங்கோரை, மூட்டைநாறி, குழிமுட்டான்தழை, வசம்பு, ஒருபு(உ)ள்ளி(ப்)பூ(ண்)டு இவை எல்லாம் சாலடி தண்ணீரில் ந(நெ)ய்ய(த்)தட்டி, இரண்டு காசிடை[6] பிழிஞ்சு, உள்ளுக்கு வார்க்கவும். மேலுக்கு திமிரிடவும்[7]. குறைச்சல் ஒரு உள்ளி வசம்பு கூட்டிக் கொள்ளவும்[8]. இப்படி மூன்று நேரம் வார்க்கவும்.

---

1. போர் மாந்தத்திற்கு என்றிருத்தல் தகும்; இவ்விஷயம் இங்கு இரண்டாமுறை கூறப்படுகிறது. (56-ம் பக்கம்).

2. மா அரைத்தாற்போல் என்றிருக்க வேண்டும்.

3. வயிறு போம்=பேதியாகும்.

4. புழுக்கை புழுக்கையாய் கட்டிக்கட்டியாயும் மலம் தள்ளும் என்பது கருத்து.

5. இந்நோய் இன்னும் பலவகை விகாரங்களைச் செய்யும் என்று கருத்து போலும்.

6. காசு=அரைத்தம்பிடி எடை.

7. திமிரிடவும்=பூச்சிடவும். அதே மருந்தை மேலுக்கும் பூசவும் என்று கருத்து.

8. முற்கூறிய மருந்தில் குறைந்தது ஓர் உள்ளியையும் ஒரு வசம்புத் துண்டையும் கூட்டியரைத்து மூன்றுவேளை கொடுக்கவும் என்று கருத்து போலும்.

## பாவை தோஷத்தின்[1] குணம்

குடித்தபா லெதிர் எடுக்கும்[2] தலையும் கண்ணும் குழியும்
அடிக்கடி சீறிஆவி அறமேவி தணகு குன்றும்
எடுக்கிலும் கையிற் தொங்கலாக எதிரினைப் பிழைக்குப்
[பிள்ளைக்குத்
திட வயிறு போகுமானல் கறுத்தபாவை தோஷத்தின்
[குணம் இதுவே.

## இதற்கு மருந்து

(வசனம்)

கீழாநெல்லிவேர் வடக்கே போனதை[3] பலிஇட்டுப் பிடுங்கி வந்து, குளிசமாடி, விநாயகன் பூசைசெய்து, செவ்வாய்க் கிழமைக்குக்(மையன்று) கி(க)ட்டவும். அந்த வேர் கொஞ்சம் அரைத்து உள்ளுக்கு(ம்) வார்க்கவும். இதற்கு விநாயக பூசை (செய்து) பிராணப் பிரதிஷ்டை பண்ணவும்[4].

## குளி தோஷத்தின் குணம்

(செய்யுள்)

தலையின் மேனிவாடி வயிற்றினில்
பால் தங்காது
தலையினில் குளி(ழிய)வுண்டாகும்
சத்தியாய் திருகுந்தானும்

---

1. பாவைதோஷம் என்பது ஒருவகை பூததோஷம் என்று தோன்றுகிறது. இதற்குப் பிரமாணம் வேறு நூல்களில் தேடிப்பார்க்க வேணும்.

2. எதிர் எடுக்கும் = கக்கப்படும்.

3. வடக்கு நோக்கிப் படர்ந்துள்ள கீழாநெல்லிவேரை என்று பொருள்.

4. விநாயகர்போல் பதுமைசெய்து அதற்குப் பிராணப்பிரதிஷ்டை செய்யவும்.

இத்தமூடனிற சித்தையறிய நோக்கி
அரிவறு(அருவரு)த் தழகு தலைவாய்
கறுத்து தோன்றும் குளி தோஷத்தின்
குணம் இதுவே[1].

## இதற்கு மருந்து

(வசனம்)

1. முருக்கி(க்கஇ)லையும், சிவந்த பூக்கோழியும்[2], அவரைத் தலை(மை)யும், உள்ளி, வசம்பு கூட்டி எண்ணை(ணெ)யில் வேகவைத்து கொடுக்கவும். மேலுக்கும் துவளை இடவும். பின்னும் கஞ்சாவேர்(ரை) வெள்ளிக்கிழமை நாள் பலி இட்டு(ப்) பிடுங்கி, குளிசமாடி, விநாயக பூசைசெய்து, தூபங் கொடுத்து கையில் கட்டவும்.

வேறு :—2, வேலிப்பருத்தி இலையும், குப்புமேனி இலையும் (ஆக) இவை இரண்டும் தண்ணியி(ணீரி)ல் பிசைந்து தேய்க்கத் தீரும் ; (அதாவது) குளிதோஷம் தீரும்.

## ராடி கட்டு[3] வகை

பத்திரகாளி கோவிலிலே போய், கோவிலுக்குள்ளே தலை கீழாக இருக்கிற பல்லியை அடித்துக் கொண்டு வந்து, தூப தீபம் கொடுத்து, அந்த(ப்)பிள்ளைக் கழுத்தில்[4] கட்டவும்.

---

1. குளிதோஷமே குளிசதோஷமென்றும் வழங்கப்படுவதாய் தெரிகிறது. குளிசதோஷத்தைப்பற்றிய இலக்ஷணம் பின் வருமாறு :—

"உச்சியுங் குழிந்திருக்கும் உயர்விழி வளையமாகும்
மிச்சமாய் வாந்தி செய்யும் வேர்வையு மிகவே காணும்
பச்சுப்பச்சென்று தானும் பற்பல வண்ணமாக
எச்சமாய்க் கழிச்சலுண்டாம் இது குளிச தோஷந்தானே."

2. கோழி = கோழியவரை ; அல்லது பன்றிக்கிழங்கு.

3. பல வேறு தோஷங்களால் வருந்தும் இளம்பிள்ளைகளுக்கு உயிர் நீக்கிய ஜந்துக்களைக் குளிசம்போல் கட்டும் முறை ராடிகட்டுதல் என்று வழங்கப்படுகிறது.

4. அந்தப்பிள்ளை கழுத்தில் = தோஷக்கோளாறால் வருந்தும் அக் குழந்தையின் கழுத்தில்.

குதிரை சிரசும்[1], ஆமைஓடும் அரைத்து, பாலில் கொடுக்கவும். பிள்ளைகளுக்கு பக்ஷிதோஷம் போம். பின்னும் நாயுர்(ரு)வி வேர், ஆயவேர்[2] (இவற்றால்) குளிசமாடி, தூபதீபம் கொடுத்து கையில் கட்டவும். பின்னும் குப்பை(மேனி)இலை, துத்திவேர், நாயுர்(ரு)விவேர் (இவற்றை) குளிசமாடி கட்டவும்.

## செவ்வாப்புக்கு மருந்து[3]

மலைதாங்கிவேர் கொண்டு (வந்து) நெய்ய(த்)தட்டி, புழுக்கின ஆமணக்கெண்ணை(ணெ)யில் போட்டு, சூரியபுடம் வைத்து, பிள்ளைக்கு தலைக்கும், நெத்தி(ற்றி), புருவம், கால் இவைகளுக்கிடாமல், மற்ற விடத்திற்கு மேலுக்கெல்லாம் துவளை இடவும். இண்டங்[4]கொழுந்து கொண்டு வந்து, பசுவின் நெய்யில் வேகவைத்து ஒரு சங்கிடை உள்ளுக்கு வார்க்கவும்.

## ஊது மாந்தம்[5]

சுரைத்தழை 1. பீர்க்கிலை 1, அவரைஇலை 2, இவை மூன் றும்(றையும்) வாய் பேசாமல் கொண்டு வந்து வாட்டி(ப்) பிழிஞ்சு, ஒருஉள்ளி, வசம்பு, இவை இரண்டும்(டையும்) சற்றே வெதுப்பிக்கொண்டு, அரைத்து, அந்தச்சாற்றில் கலக்கி, இரண்டு

---

1. குதிரை சிரசு = குதிரையின் கபாலத்துக்குள் உள்ள மூளை.

2. ஆயவேர் = ஆயப்பாலை என்னும் (நாலுவகைப் பாலைகளுள்) ஒரு செடியின் வேர்.

3. செவ்வாப்பு என்பது ஒருவகை கரப்பான். இது செங்கரப்பான் என்றும் கூறப்படும்; குழந்தைகளின் தலையை முக்கியமாக பாதிக்கும் தோலைப்பற்றிய நோய். இதில் அநேக வகையுண்டு :—

" முத்தோடமரியூது சூலைமுன்னு வெடிமண்டை பொரிசட்டை
சற்றேடு கருமையொடு செம்மை தனிக்கொள்ளி தோடமொடுவாலை
முற்றேல் வரட்சியொடு வீங்கல் மூரிவரும் பதினெட்டுவகையாம்
கொத்தான் கரப்பான்களென்று கூறினர் பண்டையோராமால்."

4. இண்டஞ்செடியை ஈகைச்செடி யென்றும் கூறுவர்; இதில் செவ் விண்டை, வெள்இண்டை என்று இருவகையுண்டு.

5. ஊது மாந்தத்திற்கு இது 3-வது மருந்து. (67-ம் பக்கத்தில் 2 மருந்துகளைக் காண்க).

காசிடை வார்க்கவும். மருந்து குடித்தால் மயங்கும். பின்பு தெளியும். நாய்(க்)கடுகு வாய் பேசாமல் கொண்டு வந்து, ஒரு உள்ளி, வசம்பு கூட்டி சாலடி(?) தண்ணீரில் வார்க்கவும்.

## கடகரைக்கு(?) எண்ணே(ணெய்)

கழுதை(க்)குளம்பு[1] கொண்டு வந்து, ஒரு உள்ளி, வசம்பு கூட்டி சிறுநீர் விட்டு அரைத்து வார்க்கவும். மேலுக்குத் துவளே இடவும். குதிரைக்கால் சிக்கம், ஒருஉள்ளி, வசம்பு, சாலடி தண்ணீரில் வாய் பேசாமல் அரைத்து(க்) கலக்கி, மூன்று நாள் வார்க்கவும். நிலேவிளாவி(இ)லே, பின்னித்தழை, ஒரு உள்ளி, வசம்பு கூட்டி மேலுக்குத் திமிரிடவும்[2]. இதன் குணம் பிள்ளே வறண்டு உணர்(ந்)து போம்[3]. இதற்கு இந்த மருந்து செய்ய[4] குணமாம்.

## வறப்பிணிக்கு[5]

வயிறு போம் ; மேலே வெதும்பும் உடம்பு[6] ; மயங்கும். கண் குழிஞ்சு போம். உடம்பு நாற்றம் நாறும், பலவிதமும் செய்யும்[7].

---

1. கழுதைக்குளம்பு எந்த அளவுக்கென்று குறிப்பிட்டிருத்தல் நன்று.

2. திமிரிடவும் = பூசவும்.

3. பிள்ளே வரட்சியடைந்து உலர்ந்து (இளேத்துப்) போதல் அவ் வியாதியின் குணம் என்று கருத்து.

4. இந்த மருந்து செய்ய = இந்த மருந்தை உபயோகிக்க.

5. வரட்பிணி என்றிருத்தல் தகும். இதுவே வரட்புள் தோஷம் என்றும் கூறப்படும் ; அதன் குணம் வேறு நூலில் பின் வருமாறு கூறப் பட்டுள்ளது :—

“ வேப்பம்பூவேலே வயிறெழுகும் விடாதகண்ணீர் தலேவலியும்
பூப்புனல் மாந்திப்புறங்கையால் பொருந்த மூக்கையேதுடைக்கும்
கோப்பாய்த் தனக்கெதிரில் சலங்குடிக்கக் கண்டுபரிதவிக்கும்
கோப்பான குரலாம் விலாகுளிரும் கேளாய் வரட்புள்தோஷமிதே.”

6. உடலின் மேற்புறம் சூடாயிருக்கும் எனப் பொருள்.

7. பலவித கோளாறுகளுண்டுபண்ணும்.

## இதற்கு மருந்து

பிள்ளை புதைத்த[1] குழியில்(லிருந்து) ஓடாகிலும்[2], பல்லாகிலும், வாய் பேசாமல் கொண்டு வந்து, சின்னித்தழை, சிறு விளாத்தழை, கஞ்சாங்கோரை, கது(மு)தைலத்தி(?) இவை எல்லாம் சாலடி தண்ணீரில் தட்டி(ப்)பிழிஞ்ச வார்க்கவும். மேலுக்கும் துவளை யிடவும். தீரும்[3].

[4]சுத்தி(?) நோகும். சோறு உண்ணாது. முலை குடியாது.

## இதற்கு மருந்து

1. ஆவாரங்கொழுந்து ஒருபிடி கொண்டு வந்து, பிட்டாவியாய் வேகவைத்து(ப்) பிழிஞ்சு வார்க்கவும்.

2. ஆவாரம்விழுது கொண்டு வந்து தட்டி(ப்) பிழிஞ்சு, ஆவாரன்பருப்பு நேக(?) அரைத்து வார்க்கவும்.

3. விடத்தேரன்[5]கொழுந்து கொண்டு வந்து (அத்துடன்) சீரகமும் அரைத்து, சாலடி தண்ணீரில் வார்க்கவும்.

## சாமுட்டிக்கு மருந்து(?)

## முட்டைப்பானுக்கு(?)

சுண்டை(த்)தழை[6] ஒரு பிடி கொண்டு வந்து, நான்கு ஈர வெங்காயம் வைத்து(க்)கூட்டி, சாலடியில்(?) தண்ணீரில் அரைத்து(க்)கலக்கி வார்க்கவும். சுண்டை(த்)தழையை வாட்டி சட்டியிலே பிழிஞ்சு, நற்சீரகம் அரைத்து (அந்தச்) சாற்றில் கலக்கி(க்) கொடுக்கவும்.

---

1. வேறு குழந்தைச்சடலம் புதைத்த என்று பொருள்.

2. சவத்தின் மண்டையோடாகிலும்.

3. தீரும் = வரட்பிணி போம்.

4. இங்கே ஒரு வியாதியின் தலையங்கமும், அதைப்பற்றி விளக்கும் சில வரியும் விடுபட்டுப் போயிருப்பதாகத் தெரிகிறது.

5. விடத்தேர் என்னும் மூலிகை இங்கு விடத்தேரன் என்று பிசகாக எழுதப்பட்டிருக்கலாம்.

6. சுண்டைக்காய்ச் செடியின் தழை.

## பிள்ளை(ப்)பிணி ஆண்தோஷவகை அறிய

கடக்க நின்று எடுத்த தோஷத்திற்கும்(?), விலைக்கச்(கிய) சீலை வண்ணானுக்குப் போட்டாகும் தோஷத்திற்கும்(?); வைத்து உடுத்தின சீலை முந்தாணி அடிபட்ட தோஷம் (த்திற்கும்), இந்த மூன்று தோஷத்திற்கும்(ங்களுக்கும்) செய்யுங் குணம்[1]. பல காலம் மேனி வாடும். வயிற்றில் பாலத் தோர்[2] காது உச்சி குழியும. கொஞ்சம் நீராய் வயிறு கழியும். கண்ணிடி[3] விழும். கண் சிவந்திருக்கும். உடம்பு வெடி நாற்றமாய் நாறும். பசேலென்று வயிறு போம். முலை குடித் தால் பால் எதிர் எடுக்கும். உடம்பு வற்றி இருக்கும். தலை யைப் பிற(புர)ட்டும். வயிறு மூட்டைபோலே நாறி கழியும். நாவும் பல்லும் உணரும். தாகமெடுக்கும். பலவிதமாக வயிறு கழியும். பல விகாரமும் செய்யும். இதன் குணம் அறிந்து பார்க்கும்படி[4].

### இதற்குப் பரிகாரம்

பலிசெய்யும்படி[5] தண்ணீர் வார்க்க அஞ்சுக்கு[6] விபரம் :— ஆயத்து(த்)தண்ணீர்[7], வண்ணாந்துறை(த்) தண்ணீர், வாய்க் கால் தண்ணீர், கிணற்றுத்தண்ணீர், குளத்துத்தண்ணீர் இந்த

---

1. இத்தோஷங்களால் உண்டாகும் குறிகள் என்று கருத்து.

2. வயிற்றில் பால் தங்காது (வாந்தியாய் விடும்) என்றிருத்தல் தகும்.

3. கண்ணில் இடி (குழி) விழும்.

4. பார்க்கும்படி = பார்க்க வேண்டும். (இங்கு சில குணங்கள் புநருக்தியாகத் தோற்றுகின்றன. ஆகிலும் மேனிவாடும் என்பதற்கு உடல் துவளும் என்றும், உடம்பு வற்றும் என்பதற்கு உடல் இளைக்கும் என்றும் பொருள் கொள்ளலாம்).

ஆண்தோஷ லக்ஷணம் வேறிடத்தில் இவ்வாறு கூறப்படுகிறது :—

"போமே உச்சி கண்குழியும் பொருந்துண்பாலுந் தங்காது
போமே வயிறு பச்சென்று பொழுமியழுமே பறவைக்குரல்
தாமே குறுகும்ஒருவேளை தனியேதனியே சீறியழும்
காமே கறுத்தநயிலாளே கலந்த புருஷதோஷமிதே."

5. பலி செய்யும்படி = பூஜை செய்வதற்கேற்ற.

6. அஞ்சுக்கு = ஐந்துவகை நீருக்கு.

7. ஆயத்துத் தண்ணீர் = இடைச்சேரியில் கிடைக்கும் ஜலம்.

ஐந்து வகை(த்) தண்ணீரும் கொண்டு வந்து, புது(க்) கலசத்தில் வார்த்து, ஈசுவரன் கோவில் தீர்த்தமும் குழிமண்ணும், அய்யனார் மடத்து மண்ணும், நற்சந்தி மண்ணும் (ஆக) இந்த ஐந்துவகை மண்ணும் கொண்டு வந்து, கும்பத்தின் கீழே பற(ர)ப்பி, அயி(ஐ)ங் கோணமாக எழுதி, அந்த சக்கரத்தின் மேலே கும்பத்தை வைத்து, தூபதீபங்கொடுத்து செபிக்க[1] :—

## மந்திரம்

"அந்திக் கூத்தா, அந்திக்கூத்தா, அந்திக்கூத்தா" என்று மூக்கால் செபித்து[2], கும்பத்தை எடுத்து, தாய் தலையும், பிள்ளை தலையும் மூன்றுதரம் சுற்றி திருவாக்கிய காவலை செபித்து, கும்பத்து(த்) தண்ணீரை பிள்ளைமுகத்தில் எறிந்து, பின்பு அந்தத் தண்ணீரை(க்கொண்டு) பிள்ளை தலையை(க்) குளு(ளி)ப்பாட்டவும்.

## பிள்ளைக்கு(த்) துவளை மருந்து

குட்டிவிளா வி(இ)லை, வேலிப்பருத்தி இலை, முடக்கொற்றானிலை, ஆமணக்கிலை, உள்ளி, வசம்பு இவை எல்லாம் நைய(த்) தட்டிக்கொண்டு, உச்சியிலிருந்து உள்ளங்கால் மட்டும் துவளை இடவும். பின்பு நல்ல தண்ணீர் விட்டு (மீண்டும்) குளு(ளி)ப்பாட்டவும்.

## இதற்கு பலி

அரிசி பொங்கி[3], ஒரு பிண்டமாக(ப்) பிடித்து, சட்டியி லிட்டு, சுண்ணும்பும் மஞ்சளுந்தடவி, மூன்று கோலத்திரியும் வைத்து[4] பிள்ளையை தாயின்மடியில் வைத்து, இந்த பலியை தாயின் தலையையும் பிள்ளையின் தலையையும் மூன்று தரம் சுத்தி(ற்றி) அப்பால் செய்யவும்[5]. இதற்கு யந்திரம் எழுதி(க்) கட்டவும்.

---

1. செபிக்க = பின்வரும் மந்திரமோதி ஜபிக்க வேண்டுமெனக் கருத்து.

2. மும்முறை மௌனமாய் ஜபித்து என்று பொருள்.

3. அரிசி பொங்கி = அன்னம் சமைத்து.

4. அந்த அன்னபிண்டத்தில் பள்ளம் செய்து மூன்று மூலைகளில் திரியிட்டு தீபமேற்றி எனக் கருத்து.

5. அப்பால் செய்யவும் = தூரக்கொண்டு போய் போடவும்.

## வால்கிரி எல்லாவற்றிற்கும் யந்திரம்[1].



| | | |
|---|---|---|
| ஹரீ | ஹரீ | ஹரீ |
| ஹரீ | ஹரீ | ஹரீ |
| ஹரீ | ஹரீ | ஹரீ |
| ஹரீ | ஹரீ | |
| ஹரீ | | |

............பத்தியம் காத்துக்கொள்ளவும். உப்பு புளி தவிர (ர்க்க)வும்[2].

## கட்டு மாந்தத்திற்கு (குணம்)[3]

உடம்பு காயும், கண்கள் இரண்டிலும் பு(பீ)ளை சாறும் மயக்கம் எடுக்கும்.

---

1. வால்கிரி தோஷத்திற்கு இது இரண்டாவது மந்திரம். (64-ம் பக்கம் பார்க்க).

2. உப்பு புளி இரண்டையும் விலக்கி பத்தியமாயிருக்க வேண்டும் என்பது கருத்து.

3. கட்டுமாந்த குணத்தைப்பற்றி இது ஐந்தாம் முறை. (55-ம் பக்கம் பார்க்க).

## இதற்கு மருந்து[1]

ஒரு சேர் கோழிக்காரம் (?) கொண்டு வந்து, ஓடு[2] காய வைத்து, அந்த ஓட்டில் இட்டு தீயக்காய்ச்சி, காரத்தை(க்) கொட்டிப் போட்டு, அந்த ஓட்டிலே வேலி(ப்)பருத்தி இலைச் சாறு, ஒரு படி அவரைத்தழை, ஐந்து சுரைத்தழை (இவற்றைப்) பிழிஞ்சு, ஒரு காசிடை புகட்டவும். இந்தப்படி மூன்று வேளை வார்க்கவும். பத்தியம் காரம் புளி தவிர்(க்க)வும்.

## பசுங்குளி முட்டின குணம்[3]

## இதற்கு மருந்து

நல்ல பிற(ர)ண்டையைக் கொண்டு வந்து, சிறுகச் சிறுக நறுக்கி, ஒரு சட்டியில் போட்டு, பொன்நிறமாய் வறுத்து, அதிலே ஒரு படி மோர்விட்டு, திப்பிலி க, திப்பிலி மூலம் கொஞ்சம், கடுக்காய் கொஞ்சம், களிப்பாக்கு பாதி, மு(மி)ளகு ஐந்து, ஓமம் கொஞ்சம், வசம்பு கொஞ்சம், ஒரு உள்ளிப்பூண்டு, பெருங்காயம் கொஞ்சம், ஆமைஓடு கொஞ்சம் இவை(வற்றை) எல்லாம் சீலையில் முடிஞ்சி போட்டு, அந்த மோரை ஒரு சேராகக் காய்ச்சி இறக்கிவைத்துக் கொண்டு, (முற்கூறிய) மோர் வார்த்து அரைத்து, குன்றுமணி பிரமாணம் குளி(கை) செய்து, நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு, முலைப்பாலில் ஒரு குளிகை (உரைத்து) வார்க்கவும். (இவ்விதம்) மூன்று நாள் வார்க்கவும்.

---

1. கட்டுமாந்தத்திற்கு இது 6-ம் மருந்து. (60-ம் பக்கம் பார்க்க).

2. ஓடு = வறுக்கும் வாணாய் அல்லது வாணலி.

3. பசுங்குளி என்பது குளிதோஷம் எனப்படும் பிள்ளைநோயில் ஒரு வகை எனத் தெரிகிறது; மாதவிடாய் குளித்தப்பெண் எடுப்பதால் (முட்டுவதால்) ஏற்படும் கோளாறு குளிமுட்டுதோஷம் எனப்படுகிறது. அந்நோயின் குணம் என்று இங்கு குறிப்பிட்டிருந்தும் அக்குணத்தைப்பற்றி ஒன்றும் இங்கு குறிப்பிடப்படவில்லை. அக்குணங்களை வேறொரு நூலிலிருந்து இங்கு எழுதுகிறோம் :—

“ மதலையின் மேனி வாடி வயிற்றினில் பாலுந்தங்கா
சதலையிற் குழியுண்டாகிச் சர்த்தியுமெடுக்கு நீராய்
நுதலினிற் சலமுநண்ணி நோக்கிய விழியுந்தாழ்ந்து
குதலைவாய் கருகித்தோன்றுங் குளித்தவ ளெடுத்தக்காலே.”

## மாந்தத்திற்கு மருந்து[1]

.........ப்பட்டை வராகனெடை, வாய்விளங்கம் விராகனெடை, சாதிக்காய் விராகனெடை, லவங்கம் விராகனெடை, (லவங்கப்)பத்திரி விராகனெடை, பெருங்காயம் விராகனெடை இந்தச்சரக்கு வகை எல்லாம் இடித்துப் பொடிசெய்து கொள்ளவும். பொடுதலை, சொ(சு)ரைத் தழை, அவரைத்தழை, ஊறவரை இலை(?), சின்னி இலை, அப்பக்கோவை இலை, சங்கங் கொழுந்து, நிலவிளாவி(இ)லை, பருத்தலாந்தழை(?), ஆவாரங் கொழுந்து, புங்கங்கொழுந்து, குழிமுட்டாந்தழை இந்தத் தழைகள் (ளிலிருந்து) சாறு வாங்கிக்கொண்டு, தகரை(த்) தழை, பச்சைத்தழையாய் (கொண்டுவந்து), சாறு வாங்கிக் கொண்டு, கடைச்சரக்கு(களை)ப் பொடிசெய்து போட்டுக் காயவைத்து, மெழுகுபோல் திரண்ட பின்பு, கடலைப் பிரமாணம் குளிகைபண்ணி வைத்துக்கொண்டு, முலைப்பாலில் (லாவது), சுக்குத் தண்ணீரில்(லாவது) சாலடி நீரில்(லாவது) கொடுக்கவும்.

## ஓடு மாந்தத்திற்கு

பொடுதழை (லையும்) ஓமமும் கிஷாயமிட்டுக் கொடுக்கவும். ஓடு மாந்தம் கட்டும். நுணா இலையும் ஓமமும் கிஷாயமிட்டுக் கொடுக்கவும்.

## பிள்ளைப்பிணிக்கு மருந்து[2]

விடத்தேரை இருக்கிற இடத்தில் ஞாயிற்றுக்கிழமை அன்றைக்கு இடம்புரி வலம்புரியாம் சுத்தி(ற்றி) வந்து, வாயினாலே நார் உருவிக்கொண்டு வந்து, சூரிய நமஸ்காரம் பண்ணிக் கொண்டு, ஒருகட்டைப் பூண்டு, கடுகு, மு(மி)ளகு, மஞ்சள், இவை எல்லாம் வைத்துக் குளிசமாடி, கணபதிக்கு பூசைசெய்து கட்டவும்.

---

1. மாந்தத்திற்கு இது 6-வது மருந்து. (68 ம் பக்கம் பார்க்கவும்).

2. பிள்ளைப்பிணிக்கு இது 2-வது பரிகாரமுறை. (64-ம் பக்கம் பார்க்க).

## கட்டு மாந்தத்திற்கு[1]

சுக்கு கழஞ்சு[2] க, நற்சீரகம் கழஞ்சு க, திப்பிலி கழஞ்சு-க வேர்ப்பட்டை கழஞ்சு க; இவை எல்லாம் ஒன்ருய் சேர்த்து, இடித்துக் கொண்டு, மாந்தத்திற்கு வென்னீரிலாவது ஓமக்கிஷாயத்திலாவது, நற்சீரகம், சுக்கு (இவற்றின்) கிஷாயத்திலாவது கொடுக்கவும்.

## மாந்தத்திற்கு குளிகை[3]

திப்பிலி விராகன் ட, சுக்கு விராகன் ட, வசம்பு விராகன் ட, கட்டை பூண்டு, விராகன் எ, பெருங்காயம் விராகன் ட, வேலிப் பருத்திப்பட்டை துட்டிடை[4] க, நல்லவேளைப்பட்டை துட்டிடை க, ஆயப்பட்டை, பெருமரத்துப்பட்டை[5], யூரு(?) முருங்கப்பட்டை வகைக்கு துட்டிடை க, கருப்பட்டி[6] சுண்டைக்காய்ப் பிரமாணம் சேர்ந்து அரைத்து, கடலை பிரமாணம் சேர்த்து அரைத்து, கடலை பிரமாணம் குளிகை செய்து வைத்துக் கொள்ளவும். சோறு தின்கிற குருந்தையானல் வென்னீரில் கொடுக்கவும். சிறு குழந்தைகளுக்கு முலைப்பாலில் கொடுக்கவும்.

## இந்த மந்திரத்திற்கு[7] சக்கரம்

சுத்தமான இடத்திலே நாலு சத்திரமாய்[8] வளைத்து, இந்தச்சக்கரத்தை நடுவே எழுதி, அதன் பேரிலே சாணி(ப்) பிள்ளையார் வைத்து, தூபதீபங்கொடுத்து, பச்சரிசி, வெல்லம், பொரி, (இவற்றுள்) எதுவாகிலும் நைவேத்யம் பண்ணி, பின்பு

---

1. கட்டு மாந்தத்திற்கு இது ஏழாவது பரிகாரமுறை. (27-ம் பக்கம் பார்க்கவும்).

2. கழஞ்சு = பன்னிரண்டு பணவிடை. (ஒரு பணம் என்பது ஒரு வராகனிடையில் ஒன்பதில் ஒரு பங்கு).

3. மாந்தத்திற்கு இது 6-வது மருந்து. (28-ம் பக்கம் பார்க்க).

4. துட்டிடை = ஒரு பண இடையில் நாலிலொரு பங்கு.

5. ஆயப்பட்டை = நால்வகை பால்மரங்களில் ஒன்றின் மேற்பட்டை.

6. கருப்பட்டி = பனைவெல்லக்கட்டி.

7. 'இந்த மந்திரத்திற்கு சக்கரம்' என்பதிலிருந்து, பின்வரும் சக்கரத்திற்கு ஆதாரமான மந்திரமொன்று இங்கே விடுபட்டுப் போயிருப்பதாய் தோன்றுகிறது.

8. நாலு சதுரமாய் என்று இருப்பது பொருத்தமாகும்.

இந்த உயிர் மந்திரம் சொல்லி, செவ்வற(ர)ளிப்பூ சாத்தவும். இப்படி நூற்றெட்டு தரம் சொல்லி[1] சாத்தவும். அதன்பேரிலே யந்திரம் கட்டவும். மந்திரிக்கிற போது யந்திரத்தை கையில் வைத்துக்கொண்டு மந்திரத்து கட்டவும்.



பிராணப் பிரதிஷ்டை



1. இங்கு குறிக்கப்படுமாறு மந்திரமெதுவும் காணவில்லை.

மந்திரப் பிராணுய, யந்திரப் பிராணுய, சிவப்பிராணுய, பரமசிவப் பிராணுய, ஸர்வமந்திரப் பிராணுய, பிரதிஷ்டை பிராணுய, நம்பிரான் பிராணலிங்கப் பிரதிஷ்டை சிவன்ஆயுள் பிராணமும் பெருவாளமும்(?) உயிரும் அதிலே நிற்கச் சுவாஹா. ஹரி: ஓம் சிவலிங்கப் பிரதிஷ்டை, யந்திரப் பிரதிஷ்டை, ஓம், ஓம்.........அர சுப்பிரமண்யாய நம :

## ஒரு வருஷத்திற்கு[1]

பிள்ளை பிறந்து ஒரு மாதத்தில் சனி என்று(னு)ம் தேவதையின்[2] குண்டம் குடித்தபால் செரியாது. சிறுநீர் சிவந்து இறங்கும். இதற்கு பலி மூன்று வண்ணச்சோறும், பாக்கும், வெற்றிலையும் மண்கலத்தி(லி)ட்டு, ஊருக்கு கிழக்கே மூன்று சந்தியில் வைக்கவும்.

## இதற்கு யந்திரம்—அஷ்டகோண சக்கரம்



---

1. "பிள்ளை பிறந்த ஒரு மாதத்திற்கு" என்றிருப்பது பொருந்தும். அடுத்து வரும் வாக்கியத்தைப் பார்க்கவும்).

2. சனி என்னும் தேவதை தாக்கும் என்று கருத்து.

## பிள்ளை பிறந்த ஒரு வருஷத்திற்கு

பிள்ளை பிறந்த ஒரு நாள், ஒரு மாதம், ஒரு வருஷத்தில் பரமசத்தி என்னும் தேவதை[1]. அதின் குணம், மேல்நோக்கி அழும். மு(வி)ழிக்கும். உடம்பு மருந்து(போல்) நாறும், சிறுநீர் சிவந்திருக்கும். கண்மூடி இருக்கும். வெதும்பும்,[2] வயிறு கழியும் பால் தரிக்காது.

## இதற்கு பலி

மாவாலே பாவை செய்து, கறுப்பு சிக(வ)ப்பு வெள்ளை புள்ளி(கள்) குத்தி, சந்தனம் பூச்சூடிவைத்து, ஊருக்குக் கிழக்கே நடுவழியில் விளக்குஏற்றி வைக்கவும்.

## இதற்கு யந்திரம்

ஹ்ரூ ஹ்ரூ ஹ்ரூ ஐ ஓ உ உ ந ஓ உ உ ா ஓ உ ஸ்ரீ ஐ விலெ உ ரு ம் ஹ்ரூ எ ஹ்ரூம்ஹ்ரூ ஸ ஸ ஸ ஸ ற ா வ ா ஹெலா ந உ ்".

## பிள்ளை பிறந்த இரண்டு வருஷத்திற்கு

பிள்ளை பிறந்த இரண்டு நாள், இரண்டு மாதம், இரண்டு வருஷத்திற்கு குணபதிஎன்னும் தேவதை, இதின் குணம். வெதும்பும், வாந்தி(எடு)க்கும். சீறும். நெஞ்சி இறுகும். நடுங்கும்.

## இதற்கு பலி

சாரசோறும்(?) மாவாலே பாவைசெய்து...........புது அகலிலே நெய் வார்த்து, சந்தனம் பூவும் எருக்கிலையிலிட்டு மயானத்திலே வைக்கவும். "ஓம் தாநாதிபதி உந்தியதில் பணிந்தேன்." (என்று உச்சரிக்கவும்.)

---

1. முதல் வருஷத்தில் பரமசத்தி என்னும் தேவதை குழந்தையைத் தாக்கும். இவ்விதமே இனி குறிக்கப்படும் தேவதைகள் விஷயத்திலும் அறிக.

2. வெதும்பும் = உடலில் வெப்பம் அதிகரிக்கும்.

## இதற்கு யந்திரம்[1]

ஹ்ரு ஓ உ ஓ உ ஹ்ரு ஹ்ரு ஸெத உசு.

## (பிள்ளை பிறந்த) ஐந்து வருஷத்திற்கு

குழந்தை பிறந்த ஐந்து நாள் ஐந்து மாதம், ஐந்து வருஷத்திற்கு குணம். காடுமதி மாமுனி என்னும் தேவதை. இதின் குணம். (அதிகமாகத்) தூங்கும். மேல்நோக்கி விழிக்கும். முலை உண்ணாது. மேனி அழுகும்[2] விருக்கிடும்; வெதுப்பு விடாது. வயிறு பேதிக்கும்[3].................டிக்கும்.

## இதற்கு பலி

உளுந்துமாச்சோறும், தயிரும், பஞ்சவர்ணச் சோறும், அப்பம், பச்சை அரிசி (இவற்றையும்) ஆமணக்கிலையில் இட்டு, உச்சிப்போது[4] சுடலையில் வைக்கவும்.

## இதற்கு யந்திரம்

"ஒற்ற ஓ உ வீற ஹ்ரு ஐ ஐ வ பெரிநிறப்படி உ ஹ்ரு ஓம் பட்......அங்கிசம ஷுந".

## (பிள்ளை பிறந்த) ஆறு வருஷத்திற்கு

குழந்தை பிறந்த ஆரும் (பிள்ளைபிறந்த) நாள், ஆரும் மாதம், ஆரும் வருஷத்திற்கு மிண்டிமாமுநி என்னுந் தேவதை. இதற்கு குணம். உடம்பு சிறுத்திருக்கும்[5]. மெலியும். மற்றும்

---

1. இந்நூலுக்கு ஆதாரமான ஓலைச்சுவடியில் ஓர் ஏடு தவறியிருப்பதால் மூன்ருவது நான்காவது வருஷங்களில் தாக்கும் தேவதைகளாலான கோளாறு விஷயம் விடுபட்டுப் போயிருக்கிறது. அவ்விதம் தவறியுள்ளது ஓலைப்புஸ்தகத்தில் 26-ம் ஏடு என்று தெரிகிறது.

2. குழந்தையின் உடல் அழுகிப் பதன்கெடுவதுபோல் அதிக விகாரமடையும் எனக் கருத்து.

3. வயிறு பேதிக்கும் = வயிறு கழியும்.

4. உச்சிப்போது = நடுப்பகலில்.

5. குழந்தையின் தேகம் வயதுக்கேற்றவண்ணம் வளராது எனக் கருத்து.

விக்கல் எடுக்கும். மு(வி)ழி நிமிரும்[1], அழும், நித்திரை இல்லாமல் வந்திருக்கும் கண்..............கும். வெதும்பும், முலை உண்ணாது.

### இதற்கு பலி

உளுத்தஞ்சோறும், பு(பி)ண்ணாக்கும், லெக்கிரி(?)எண்ணை (ணெய்) பொரி, அவல், இளநீர், (இவற்றை) கல்லிலையில்[2] இட்டு, சந்தியா காலத்தில் காளிகோட்டத்தில் வைக்கவும்.

### யந்திரம்

"ஸ ஸ ஸ ஹ டீ ப ஸ பட சபு ஹு ஸ ஸ தீ
அ அ அ மெத நெ".

### (பிள்ளை பிறந்த)[3] ஒன்பதாம் வருஷத்திற்கு

ஒன்பதுநாள், ஒன்பதுமாதம், ஒன்பது வருஷத்திற்கு காளியடா மென்னுந் தேவதை: இதின் குணம், பிள்ளை (பால்) உண்ணாது. அழும். விக்கல் எடுக்கும். வாய்வேற்(ர்க்)கும்[4]. மலங் கழியாது. கண்மூடி இருக்கும். கண் மாறி மு(வி)ழிக்கும்.[5]

### இதற்கு பலி

உள்ளும், அவலும், அவரையும், வெல்லமும், பஞ்சவர்ணச் சோறும், பீர்க்கங்காய் கறியும், பொரியும், காலத்திலே[6] பிடாரி கோவில் நடுச்சந்தியில் வைக்கவும்.

---

1. எப்பொழுதும் மேல்நோக்கிப் பார்க்கும் என்று பொருள்.

2. கல்லிலை = கல்லாலயிலை.

3. இங்கே இந்நூலுக்கு ஆதாரமான ஓலைச்சுவடியில் ஓர் ஏடு காணப் படவில்லை; ஆகவே ஏழாம்—எட்டாம் வருஷங்களில் தாக்கும் தைவங் களாலான கோளாறுகள் விடுபட்டுள்ளன. (அது ஓலைப்புஸ்தகத்தில் 28-ம் ஏடு என்று தெரிகிறது).

4. வாயிலிருந்து சொள்ளுநீர் ஒழுகும் என்பது கருத்து போலும்.

5. பிள்ளை வெவ்வேறு வகையில் விழித்துப் பார்க்கும் என்று பொருள்.

6. சந்திநேரத்தில் என்று பொருள்.

### யந்திரம்

ஓ உ ஹு ஹு ஹு ஹு ரொம் உ ஊ மு ஜ்ஜெ
ஷெ ற ண ற ற லி ள ச
உ ௦ உ

## (பிள்ளை பிறந்த) பத்தாம் வருஷத்திற்கு

குழந்தை பிறந்து பத்து நாள், பத்து மாதம், பத்து வருஷத்திற்கு மாசகுனியிஞ்சி என்னுந் தேவதை. இதின் குணம். நலநாளும் சிறுநீர் சிவந்திருக்கும். (உடல்) வெதும்பும். தலை நோகும். வயிறு வலிக்கும். கண்சொருகும். பல விகாரம் பண்ணும். முலை குடியாது, உம்புநீர் மெத்தி விசகும்(?).

### இதற்கு பலி

பாலும், சோறும், பருப்பும், பச்சை அரிசியும், உளுந்தும், பொரியும், பஞ்சவர்ணச்சோறும் மூன்றுஞ்சாமத்தில் ஊருக்கு மேற்கே வைக்கவும்.

### யந்திரம்

ஹுமெ வ ச ம ம ற ண ரு வென்கிற வசந்தே நடலே ந ம பு கண ற ற ஹு ஹு உ று று று ந று ற ந.

### பொருமல் குணம்

கருக்கிமே வெகுவீச் சென்னும்
சேர்ந்ததோர் பச்சைவெள்ளை சிறந்துமேல் மலமும்.
நீரும் வாந்தியே பண்ணும் கண்டீர்வலி
....................புடன் சன்னிதானே[1]. (89)

---

1. இச்செய்யுளில் சிலபாகம் விடுபட்டுப்போயுள்ளது. பொருமல் என்பது வயிற்றில் விம்மல் முதலிய கோளாறுகளுண்டுபண்ணும் ஒரு கோளாறு.

பொராமம்[1] குணம்கேளீர் பொருமிடும் வயிறுதள்ளும்
நேராக வயிறுபோகும் நெற்றியில் வலியுத்தோன்றும்
சீராக முலையுண்ணுது சீறியே வெருவி(ப்)பார்க்குமங்[2]
கார்குழல் முலையினுளே இதின் குணந்தானு
[மென்றே. (90)

பொராமத்தின் குணம்கேளீர்
பொருமிப்பொருமி வயிறு கழியும்
மாரைஇடிக்கும் தலை நோகும்
வயிறே வலிக்குமிகச்
சோரும்[3] நேரேசர்த்தி[4] உண்டாகும்
நேத்திரம் பூதான் புடைக்கும்[5]
பாரோ ரறியபால் கறக்கும்(?)
பரிந்தே இதனை(ப்) பாரீரே. (91)

## நீராமக் குணம்

நீரும் சீத்ததேடேதான் பச்சை மஞ்சளாகிகண்
ணீரும் பூவிற்பாய்ந்து கடுப்புடன் வலித்தேசொருகும்
உண்ணீரு முத்துப்போலே ஓடவே களிந்துதாகில்
எண்ணீரோ நீராமத்தை எவரும்தீர்க்க வல்லார்[6]. (92)

---

1. பொராமம் = பொருமலுடன் கூடிய ஆமமென்னும் அஜீர்ணக் கோளாறு.

2. வெருவிப்பார்த்தல் = பயந்து பார்த்தல்.

3. மிகச்சோறும் = அதிகமாகக் களைத்துத் துவண்டுபோம்.

4. சர்த்தி = வாந்தி.

5. நேத்திரம் பூ புடைக்கும் = கண்களுக்கு எதிரில் பூக்கள் போன்று மினுமினுப்புக் காணும்.

6. நீராமம் என்பது ஒருவித கணரோகம். இச்செய்யுளே வேறொரு நூலில் பின்வருமாறு காணப்படுகிறது :—

"தண்ணீருஞ் சீதத்தேடேதான் பச்சை மஞ்சளாகும்
கண்ணீரும் பீளைபாய்ந்து கடுப்புடன் வரித்துச்சோரும்
உண்ணீரு முத்துப்போல் ஓடவே கழிந்ததாகில்
தெண்ணீராம் நீராமத்தை எவருளார் தீர்க்கவல்லோர்."

(பால வாகடம்)

## ஆம சன்னி

முலை[1] உண்ணாது அழுது பார்க்கும் முகமது வேறதாகும்
    பலபல வலிப்புண்டாகும் பாலகன் குரலும் கம்மும்
மலமது கட்டுமெய்யில் வந்திடும் சுரமுமீதே
    மலமது வல்ல மின்னே ஆமத்தின் சன்னிதானே. (93)

தாகமே மிகவுண்டாகும் சரீரத்தில் சுரமுண்டாகும்
    வாகிய[2] மலமும் தீஞ்சு மலமுமே கறுப்புண்டாகும்
நோகுமே வயிறு ஊதும் நோக்கா நேத்திரமுந்தான்
    சுழலுமாம் இருமை போலிருக்குமாம்[3] சன்னிக்
        குணம்[4] இதுவே. (94)

உய்யாதபடி குடிதன்னால் குறவமனத்துயரந் தன்னால்ச் செழுன் புணல் தட்ட[5].

### பதின்மூன்று வருஷத்திற்கு[6]

(வசனம்)

குழந்தை பிறந்து, பதின்மூன்று நாள், பதின்மூன்று மாதம், பதின்மூன்று வருஷத்தில் மெய்யசின்னி என்னுந் தேவதை.

---

1. இதே செய்யுளை பாலவாகடத்திலும் காணலாம்.

2. வாகிய மலமும் = வழக்கமாய் வெளியாகும் மலமும்.

3. இருமைபோலிருக்கும் = பார்க்கப்படுவதெல்லாம் (ஓர்உருவம்) ஈருருவம் போல் தோற்றும்.

4. சன்னிக்குணம் = ஆமசன்னி என்னும் நோயின் குறி.

5. "உய்யாதபடி"……….என்னும் செய்யுள் இங்கே அரை குறையாய்விட்டுப் போயிருக்கிறது.

6. இதற்குமுன் பிள்ளை பிறந்த பத்தாம் வருஷம் வரையில் ஏற்படும் தைவக்கோளாறுகள் கூறப்பட்டன. (10-ம், 87-ம் பக்கங்கள் பார்க்க.) பிறகு ஆமதோஷம், சன்னி முதலிய வேறு விஷயங்கள் கூறப்பட்டன. மறுபடி இங்கே பதின்மூன்றும் வருஷத்திலேற்படும் கோளாறு குறிக்கப்படுகிறது. அதிலும் பதினொன்று பன்னிரெண்டாம் வருஷங்களின் தோஷக்கோளாறுகள் காணப்படவில்லை. இதனால் விஷயங்கள் ஒழுங்குக்குறைவாக அமைந்திருப்பதுடன் ஓலைச்சுவடியில் இடையில் சில ஏடுகளும் தவறியிருக்குமென்று தோன்றுகிறது.

## இதின் குணம்

மெய்யலர்ந் திருக்கும்[1] ; வயிறு பேதிக்கும் ; அழும் ; மேல் நோக்கி மு(வி)ழிக்கும் ; உடம்பு இளைக்கும்.

## இதற்கு பலி

பருப்புச்சோறும், பணியாரமும், தயிர், வெண்ணை(ணெய்) வார்த்துக் குழைத்து, மண்கலத்தில் இட்டு, சந்தியா காலத்தில் பிடாரிகோவிலில் வைக்கவும்.

## இதற்கு யந்திரம்

ஷ்ரூ ஷ்ரூ ஷ்ரூ ஸ்ரீ ஹெ லெ உ.

.................[2]பலகாலுங் கக்கயிடு சிறுமிடுக்காகுங் கண்
[சிவக்கும். (11)

## ஆரு மாதம்[3]

பாலசொரு பகலிலே பனை கோழி மண்
கலத்தில் சோற்றைப் பிசைந்து தொகுப்பாவை
மேல்த்திசையில் வெள்ளைப் பூச்சூடி (கதிரோன்) விழும்
பொழுதில் வைப்பிக்க தெள்ளுதமிழ் மிடவிதீரும்.(12)

கர்மா பருமாத கருதி முருகி என்றும்
பிறந்தாரு மாசம்வெப்புச் சிறங்காகும்
அறமுள்ள பால்எடுக்கும் மெய்கருக்கும்
பறந்தவீழி கொட்டாவியால் இரண்டு தீர்த்தாக
[மாம். (13)

---

1. மெய்யயர்ந்திருக்கும் = உடல் சோர்ந்திருக்கும்.

2. மூலச்சுவடியில் சில (2) ஏடுகள் தவறியிருப்பதால் சில விஷயங்கள் மத்தியில் விடப்பட்டிருக்கின்றன. செய்யுளிலும் கடைசிவரி தவிர்த்து மற்றவை காணப்படவில்லை.

3. ஏடுகள் தவறிப்போன காரணத்தால் குழந்தை பிறந்து ஐந்து மாதங்களளவும் காணக்கூடிய கோளாறு சம்பந்தமான விஷயமும் விடுபட்டுப் போயிருக்கிறது ; ஆகவே இங்கு ஆருமாதம் ஆரம்பிக்கிறது. இங்கிருந்து 28-ஆம்செய்யுள் முடியும் வரையிலுள்ள விஷயங்கள் ஆண்பிள்ளைகள் சம்பந்தமானவை,

அறியு மறுத் துஞ்சேர பறுக்கி மண்ணிற்பாவை
குறிமண் கலத்திலிட்டு கோழிபலி
சிறிய மூள்றும் பைப் பூச்சீடி சொல்லுத்தொழு(?)
சந்தியிலே அம்புவியில் வைக்கலாம். (14)

## ஏழாம் மாதம்

உற்றதோர் திங்களுத்தாரபதி என்னும் பேய்
பற்றிமூலே யுண்ணப்பகுணமும் நித்திய
நித்தியம் சீறிஅழும் குணங்கள் செய்யில் பலி
கேளாய் கூறுந்தவிடு புழுக்கிக்கொள். (15)

தூதுவிளங் காயுடனே சோறு முப்பாலிலே கறியும்
மாதுரை மண்கலத்தில் மரப்பாவை
போது புண்ணிய ஆல்குத்தி மூன்றும் நாள்
ஆவாரம் பூச்சூட்டி மாலையில் தாரசாந்தி
[தனில் வை. (16)

## எட்டாம் மாதம்

ஏல மழுகி என்றும் பேயிணையு மெட்டதனில்
ஏலமுடன் முட்டை உடைத்தாப்போல
சீலமுடன் வெம்புழுச்சி தாமும் வேழ்க்கும்
மிக நாவறளும் நம்பியிடுக்குளமே நன்று. (17)

கூழாக்கிப் பாலில் கறி சோறுங்கொண்டு வெண்ணெய்
பாழாக்கும் பெயிலது படிஇலே
கீழாக்கில் தவிட்டில் ஒருபாவை பண்ணி
தாழ மண்கலத்தி லிடுகுவட் டெருக்கம்பாவை
[இடங்கொள். (18)

## ஒன்பதாம் மாதம்

திங்களாம் ஒன்பதினில் சொசங்கபாலியது
பங்கபட்ச செட்டை பண்ணிவைக்கும்
தங்க இகத்துடுதுழலே செப்புஞ்
சொல்லுங்கேளாய் நீர்இதனே செய்ய நினே. (19)

வெள்ளாட்டுப் பாலில்அன்னம் வேண்டும் ஒப்புடன்
நள்ளிஇடு மண்கலத்தில் ஆண்பாவை
குள்ளிகுத்தி ஏழ்ச்சாந்தி வைக்க ஏகிவிடும்
பேய்கள் நீள் புவியோடு செய்ய நினை. (20)

## பத்தாம் மாதம்

திங்களொரு பத்தில்அதிக நாறங்கியது
அங்க மஞ்சளி சன்னியாக்கி விடும்
அங்கம் கழியும் அழுவிக்கும் கண்மேல் மூடும்
வழியுடனே தான்பலி செய் வாங்கு. (21)

பஞ்சவர்ணச் சோறும் பழம் பாகல் காய்கறியும்
விஞ்சு பூ விட்சுப் பூ வென்பும்
மஞ்சுதினிசி மேற்கைதனில் வைப்பிக்க மின்பேய்
பேர்ச்சொல்லி அரக்குமிது செய்வீரரி. (22)

## பதினொன்றும் மாதம்

ஒன்றாகும் பத்திலே உத்திர மாகாளியது.
நன்றாகத் தங்கம் நரம்புக்கு
குன்றாகச் செங்கலாகவே சீதம்
சிவப்பிக்கும் தங்கம் புலவிதந்தான். (23)

பச்சரிசி அன்னம் பசுவின் தயிருடனே
உச்சமொரு சுளியாய் அண்டபாவை
நிச்சயமாய் கார்த்திகைப் பூச்சூட்டி கார்மாலையம்
பொழுதில் நாடிச்சுடலை வைக்க நன்று. (24)

## பன்னிரண்டாம் மாதம்

திங்களு மிரண்டுபத்தில் சோழுடு மென்றும்
பேயாங் கண்விழிசொருகும் சுழன்று உறங்கும்
அங்குஞ் சிறங்கதான் எங்குஞ்சீறும் பலகுண பார்வை
[தெரிந்தும்
கொள்ளைப்பூ முன்னுள் கோழிபலி உச்சியிலே
[இன்னுபிடாரி யிடமேத்து. (25)

சாமுண்டி யென்னும் பேய்தான் தாக்கும் வயிறு கழியும்
உண்டபாலும் எதிர்எடுக்கும் தான்
முன்றிஉச்சி குழிந்தே யரைக்கண் விட்டதலை
உருண்டு நிச்சயமாய் முன்னிருத்தி னேன். (26)

சாறுயங் கோழியுடன் சாதம் புண்ணுக்குடனே
ஆறுமீன் கத்தரிக்காய் கறியு மரிஇலை
பாராதோ மாவாலே பாவைபண்ணி மண்
கலசததில் வைத்துப் பூவானது சூடியோற்று. (27)

இடைக்கிய மஞ்சுகோலமுடன் சூழ நட்டு
அடை வாடையுந்தான் பொரியுமஞ்சு வைத்துகடை
வெண்ணே(ணெய்) கூட்டிப்
படைத்துக் குழந்தைதனைச்சுற்றி ஓட்டைச்சுடலை
[வைக்க ஓடும். (28)

இதற்கு யந்திரத்துடனே வைக்க மந்திரத்துடனே பண்ணி வைக்கவும்.

## ஆண் பிள்ளைக்கு முற்றும்[1].

---

## பெண் பிள்ளைக்கு

### ஓராந்திங்கள்[2] பெண்ணுக்கு

ஓராந்திங்கள் ஆறணியே ஓடக்கழிந்து
சுரமுண்டா மென்றுலிது பலிகேளி இனியச்சந்தனம்
மரப்பாவை குன்றுக்குடைகள் சிவந்த நற்பூவும் கூறும்
[உளுத்தஞ் சோறுடனே
நன்றுயஞ்சு திரிகொளுத்தி நாற்சந்தியில்
[வைப்பீரே. (30)

---

1. ஆண்பிள்ளைக்குச் சேர்ந்த நோய்கள் மருந்துகள் விஷயம் முடிவு பெற்றது என்று குறிக்கப்படுகிறது.

2. ஓராந் திங்கள் = ஒரு மாதம்.

## இரண்டாம் மாதம்

மாதமுமிரண்டு பேய் கொத்தி மதனை சிரசும்
சிதம்போக்கும் சர்த்திஎடுக்கும் சிரங்குண்டாம்
அதன்பலிதான் உளுத்தஞ்சொறையும் பூதிய அகலில்
[மேல்பாவை
நாதமஞ்சிந்த எடுக்கிலையில் நாற்சந்தியிலே
[வைப்பீரே. (31)

## மூன்றும் மாதம்

மூன்றுந்திங்கள் பேய்காளி முறுக்குங் காயும் வயிறுகழியும்
கண்டாய் இதற்குபலி கேளாய் கருத்தகுக் குடம்
[சோறு
குன்றுசல வெங்கமலமாப்பாவை கொன்னை தும்பைச் சூடி
உன்றால் காளிபேர்சொல்லி ஓடி மேற்சந்தியில்
[வைப்பீரே. (32)

## நான்காம் மாதம்

நாலாந்திங்கள் பேயின்பேர்ணும்
நாலையிம் மூர்ச்சிக்கும்
பாலும்எடுக்கும் சிரங்குழியும் பார்க்கும்
வெறிக்க அதன்பலி தான்
சாலா உளுத்தஞ் சோற்பஞ்
சாத்தை எள்ளும்பொரி யிறைச்சி
வேலார் விழியுடனே மசானக்
கரையில் வைப்பீரே. (33)

## ஐந்தாம் மாதம்

அஞ்சாந்திங்கள் மாமுனிவனதுதான்
வெதுப்பிதான் கழியும்
நெஞ்சும் வற்றி சிரங்குழியும்
நெகிழாதிருக்கும் அதன்பலி தான்
அஞ்சா உளுத்தஞ்சோறு பஞ்ச
வர்ணச் சோறுடனே
நெஞ்சாவிழியாள் நாட்டில் வைத்து
நாற்சந்தியில் வைப்பீரே. (34)

### ஆறும் மாதம்

ஆறுந்திங்கள் சாமுண்டிஎன்னும் பேய்
 வந்தால் தினம் குணம்தான்
மாறுதெடுக்கும் கண்சொருகும் வயிறு
 பொருமும் அதன்பலி தான்
நீறுமாவும் இளநீரும் நிறம்பக்
 குறைத்தச் சந்தனமும்
போறுய்ச்செய்து ஓட்டில் வைத்து பிடாரீ
 கோட்டம் வைப்பீரே. (35)

### ஏழாம் மாதம்

ஏழாந்திங்கள் பெயிருன்ன வெதுப்பும் முலையுண்ணு
 தாழாகலத்து மூர்ச்சிக்கும் தாக்கும் வெகுவாயிதன்
 [பலிதானே.[1] (36)

### எட்டாம் மாதம்

எட்டாந்திங்கள் நாற்சிங்கனென்று
 பேய் மிகவே தான்
மட்டாய் கழிஞ்சு மூர்ச்சிக்கும்
 வயிறு பொருமு தன் பலிதான்
துட்டா ஓட்டில் தானெருமை
 மாவாலே நியாதை நிறுத்தி
பூட்டாய் சந்தனம் பூவிட்டு போற்றிச்
 சுடலையில் வைப்பீரே. (37)

### ஒன்பதாம் மாதம்

மாதமொன்பதில் மாமுனிவனென்னும்
 (பேய்)பிடித்து தான் வயிறும்
பாதங்குளிரும் வயிறுகழியும்
 பலவிதமாகு மிதன் பலிதான்

---

1. இங்கு செய்யுளில் இரண்டு அடிகள் விட்டுப் போயிருக்கின்றன.

போதருறுசு வண்ணப்பூ புதிய அகலில்
அவை யமர்த்தி
பேதாயிச்சந்தனந்தான் தெளித்து
பெரியசந்தியில் வைப்பீரே. (38)

## பத்தாம் மாதம்

பத்தாந்திங்கள் அதிபாலாபத்தி
வயிறுதான் கழியும்
மெற்றச் சிரசுவலி யுண்டாம் மிகவும்
பலசுரந்தான் பலிதான்
வற்ற உவஞ்சுவர்க்கு சோற்றிலே
பூவும் சந்தனமும்[1]. (39)

## தூங்கு புள் குணம்[2]

சுருண்டு எழுந்திருக்கச் சோறும்
அருந்தியதெல்லாம் கக்கும்
இருண்டிடுட் கண்கள்தானு மிமையின்
மேல் சொருகிக்கொள்ளும்
பிறண்டு வீறிட்டழும்
பேயுறக்கமாய் பல்கடிக்கும்
சுருண்டுதான் கீழேநோக்கும்
தூங்கும்புள் தோஷந்தானே. (44)

மாங்கியுக்க கந்தனை குடித்து
வயிறு கழிந்தே வாந்தியுமாய்
பாங்காய்த்திரும்பி மிகப் பார்க்கும்
பயமாயழுது வயிறென்றும்

---

1. இங்கு மூலச்சுவடியில் ஓர் ஏடு (39-ம் ஏடு) தவறியிருப்பதால் அநேக வரிகள் விட்டுப் போயிருக்கின்றன. ஆகவே 39-ம் செய்யுளில் ஒரு பாகமும் 40, 41, 42, 43-ம் செய்யுட்களும் இங்கு காணவில்லை.

2. தூங்குபுள் குணம் = தூங்குபுள் தோஷமென்னும் கோளாறு சம்பந்தமான குறி.

தூங்கித் துருசிப்பாயு மிசை சார்ந்தே
வீறிட்டெழுந்திருக்கும்
தூங்கும் புள்ளின் தோஷமிது
தொங்கர் என்ன சொன்னரே[1]. (45)

### விளக்கொளிக் கண்ணன்[2]

குடித்தபால் எடுக்கும் மெய்யும்
கூர்மையாய்க் காயுமோயும்
அடிக்கடி காயும்அன்றி அரியதாய்
சிந்தை நோக்கும்
பிடித்த நன்முலை யுண்ணது பெருவிடாய்க
கொண்டு சோரும்
இடுத்திடு மிந்தநோய்தான் விளக்
கொளி கண்ணன்தானே[3]. (46)

---

1. தூங்குபுள் தோஷம்பற்றி பாலவாகடம் இவ்வாறு கூறுகிறது :—
" தூங்குபுட்டோஷமது தோன்று குறிதன்மை
செயல் தொகுதியா யுரைசெய்திடின்
தூங்கவரை விழியில் புட்பார்ப்ப
தென்னவத் துக்கம்விட்டலறி யெழுதல்
தாங்குகண்ணீரண்டு மேலிமையினுள்ளே
சொருகல் தாங்கி காணுக்கழிதல் வாந்தி
திருமுகம் பலமுறைத்திரிமியே பார்த்திடல்
சார்பயத் தழுதல் மிகவாய்."
" ஆங்கிருப்பதி லிருந்தொழல் முரடதாகவே
யருந்தநீர் பற்கடித்தல்
அடிப்பார்வை பார்த்தல் சோர்வுடன்
மயக்கந் தலையதனுச்சி பன்னமாதல்
வாங்கிடுதல் மேல்மூச்சிதளைத் தலுடல்
முகமாறல் வருதலிவை காணிமுலார்
மனமிகவருந்துவர் தீர்ந்திடாக் குறியென்று
வகையறிந் துரைப்பை யாலோ."

2. விளக்கொளிக் கண்ணன் அல்லது விளக்கொடுண்ணன் என்பதும் ஒருவகை பக்ஷிதோஷம்.

3. இதே செய்யுள் பாலவாகடத்திலும் காணப்படுகிறது. இதில் " இடுத்திடுமிந்த நோய் தான் " என்னும் நாலாமடியிலுள்ள சொற்றொடர் பாலவாகடத்தில் " விடுத்திடும் விளக்கை நோக்கா " என்கிற விதமாயுள்ளது.

## வெண் கண்ணன்[1]

வெளுங்கள் கழியும் பால்போல வென்நீரம்
  மேல் அதுவன்றி காயும்
குளுக்கென இறையப்பண்ணி குடித்த
  வண்ணம் பேதிக்கும்
அளுத்திடும் வயிற்றினுள்ளே
  ஆனதோர் பலியுமாகும்
புளுக்குன மீதேயென்று பொங்து
  வெண் கண்ணனே[2]. (47)

## கருடக் கண்ணன்

புதுப்புனல் வழிந்துகொண்டு புளவிளைப்பட வெடுக்கும்
  எதுப்படக் கண்ணுந்தாயு மிருவர்போன்றிருவ
    [ஞென்று
முதற்பிள்ளைப் பட்டபாடு முந்தியே பத்திநீற்கும் வீத்
  ததின் கருடக்கண்ணன் விலங்கிடும் வேல் கண்
    [மாதே[3]. (48)

---

1. வெண்கண்ணன் என்பது ஒரு பக்ஷிதோஷம்.

2. வெண்கண்ணன் புள்தோஷத்தைப்பறிய பாடல் பாலவாகடத்தில் சொற்ப மாறுதலுடன் இவ்வாறுளது :—

“ வெளுக்கென கழியும்பால்போல் வெளிறிமெய்த்துவண்டு காயும்
குளுக்கென இரைச்சலுண்டாம் குடித்தவல் வணம்பேதிக்கும்
அளித்திடும் வயிற்றினுள்ளே ஆனதோர் வலியுமாகும்
வெளிப்படை குமோவென்னில் வேங்கண்ணன் குணமதாமே.”

3. கருடக்கண்ணன் பக்ஷிதோஷத்தைப்பற்றி பாலவாகடத்தில் பாடம் பின்வருமாறு :—

“ புதுப்புனல் வடிந்துகொண்டு புகழ்முலைப் பாலொடுக்கும்
எதுப்படக் கண்ணுந்தாழும் இருபக்கம் பீளைகட்டும்
முதிர் பிள்ளை படும்பாடாக முந்தியே பற்றி நிற்கும்
விதத்தலை வயிறு பார மிகுங் கருடக்கண்ணற்கே.”

## (செங்கண் புள் தோஷம்)

சிவந்த[1] கண்ணீர் ததும்பும் சிரங்குளிர்ந்
　　திருக்கும் வெம்பித்
துவந்துபோய் நிலத்தில் வீழ்ந்து
　　தடக்கையால் முகந்துடைந்தும்
மெலிவாய் அழும் பாலருக்கு
　　வெப்பு நாறும் பேதிக்கும்
சிவந்ததோர் குணங்கள் கண்டால்
　　செங்கண்புள் தோஷந்தானே. (49)

## வற(ரட்)ப்புள் குணம்

[2]உடலது வறண்டு மெத்த உறங்கிடும் மேனியுலுர்ந்து
　　கடல் இரைந்தாப்போல சத்தம் கருக்குரி என்று
　　　　[மூன்றிது(?)
இடமுடனு வறண்டு திக்கெங்கும் பார்த்து நின்று
　　விடமது பால்காயும் வெறுண்டும் வற(ரட்)ப்புள்
　　　　[தானே. (50)

வேப்பம் பூப்போலப் பொருந்து மூக்கையே துடைத்து
　　கொப்பாய் நாவும் வறண்டு தண்ணீர் குடிக்கப்
　　　　[பரிதவித்தல்
கர்ப்பங் கைமா முக மாதே
　　செப்பாய் வற(ரட்)ப்புள் தோஷ மென்றே.[3] (51)

---

1. " சிறந்து கண்ணீர் சொரிந்து சிரங்குனிந்திருக்கும் வெம்பித்
தவழ்ந்துபோய் நிலமதில்வீழ்ந்து தடக்கையால் முகந்துடைக்கும்
விவந்தியாய் அழுதுபாலன் வெப்புநீராய் பேதிக்கும் "
　　என்றவாறு பாடபேதம்.

2. " உடல் ரெண்டு வாய்திடு யுறங்கிடு மேனி வற்றும்
கடலிரைந்தாற்போல் சத்தங் கண்குழி தலையுமாட்டும்
திடமுடன் நாவரண்டு திக்கெங்கும் பார்த்திருக்கும்
விடமது போலக்காயும் விரண்டிடும் வரட்புள்தானே."
　　என்பது பாலவாகட பாடம்.

3. " வேப்பம்பூப்போல் வயிறெழுகும் விடாதகண்ணீர் தலைவலியும்
பூப்புணல் மாந்திப் புறங்கையால் பொருந்த மூக்கையே துடைக்கும்
கோம்பாய்த் தனக்கே யெதிரில் சலங்குடிக்கக் கண்டு பரிதவிக்கும்
கோப்பான குரலாம் விலாகுளிரும் கேளாய் வரட்புள் தோஷமிதே "
　　(பாலவாகட பாடம்.)

## அந்திப் புள் தோஷம்

பரவுகண் மேனிவாடிப் பச்சறக் கண் விழித்துப்
பின்னும் சிலைபோல கால்குளு(ளிர்)ந்து சீறி சிடுத்தப்
[பலமேலெல்லாம்
நரம்பு தோன்றி மேனியும் வெளுத்துக் காயும்
மாலமெய்யுண்ட(?) கண்ணு அந்திப்புள் தோஷந்
[தானே.[1] (52)

## நீர்ப்புள் தோஷம்

நெஞ்சு வரண்டு [2]கண்அழிந்துநீரிடும் பெருமூச் சுண்டாகில்
பஞ்சுபோல் கண்வெளுத்துப் பாலுங் குடியாதேஅலறி
துஞ்சா திறவு பகலுந்தான் [3]சுங்கப்பன்றி மிக வெளுக்கில்
செஞ்சொற் கிள்ளை மொழிமாதே [4]செப்பாய் நீர்ப்புள்
[தோஷமென்றே. (53)

## காணுப்புள் தோஷம்[5]

உச்சி கண்ணுந் தான் குழியும் உண்ணும் பாலும்தங்காது
பச்சைநீர் போலே வயிறு விடும்பறவை குரல்போல்
[சீறியழும்
மிச்சித் திருக்கும் தண்ணீர் எடுத்தே குடிக்கும் மிகவேதான்
கச்சங் கனிந்தமுலை மாதே காணுப் புள்ளின் தோஷ
[மிதே. (54)

---

1. இதற்கு பாலவாகட பாடம் பின்வருமாறு :—
" பாலகன் மேனிவாடிப் பசந்துகண் விழித்திட்டந்தி
சீலக்கைகால் குளிர்ந்து சீறும் பாலெதிரெடுக்கும்
மேலெல்லாம் நரம்புதோன்றி மேனியும் வெளுத்துக்காயும்
ஆலமே யுண்டகண்ணு யந்திப்புள் தோஷந்தானே ".

2. " கண் குழிந்து நீரும் பெருமூச்சுண்டாகிப் " (பாலவாகட பாடம்.)

3. " சுருங்கப்பண்ணி மிக வேர்க்கும் " (பாலவாகட பாடம்.)

4. " செய்ய நீர்ப்புள் தோஷமிதே " (பாலவாகட பாடம்,)

5. காணுப்புள் தோஷம் என்பது பாலவாகடத்தில் " புள்ளின் தோஷப் பொதுக்குறி " என்றுள்ளது ; அவ்விஷயம் பின்வருமாறு :—
" உச்சி கண்ணுந்தான் குழியு முண்ணும் பாலுந் தங்காது
பச்சை நிறம்போல் வயிறுவிடும் பறவைக்குரல்போற் சீறியழும்
எச்சமிளைக்கும் தண்ணீரை எடுத்துக்குடிக்க மெய்பிறக்கும்
கச்சை யணிந்த முலைமாதே காணும் புள்ளின் தோஷமிதே."

## பறவை தோஷம்[1]

குடித்த பாலும் தங்காது குஞ்சியுடம்பு மிக நொந்தும்
இடித்த நெஞ்சும் அந்தரத்தில் மிகவே நோக்கும்
செடி நாறும்படிக்கு மங்கைகால் அழுக்கேறி பதைத்து
[வருத்தப்படுமானல்
துடிக்கும் சமனுமிடையாள் சொல்லும்பறவை
[தோஷமிதே. (55)

பின்னும்[2] :—

குஞ்சுடம்பு நொந்து[3] குடலிலே பாலும் தங்கா
நெஞ்சையும் [4]சுழிய வாங்கும் நெரியது வலிப்
[புண்டாகும்
மிஞ்சிடும்[5] போது சற்றே துணுக்கென வலித்துச் சீறும்
பஞ்சுமெல் லடியினுளே பறவையின் தோஷந்
[தானே. (56)

---

1. 'புள்' என்றாலும் 'பறவை' என்றாலும் ஒன்றே. ஆயினும் புள் தோஷம், பறவை தோஷம் என்று தனித்தனியே நோய்கள் காணப்படுவதற்குக் காரணம் யோசிக்க வேண்டும். பறவை தோஷத்தைப்பற்றி பாலவாகட பாடம் வருமாறு :—

" குடித்த பால் எதிரெடுக்கும் குழிந்திடுந் தலையுங் கண்ணும்
அடிக்கடி திடுக்கெட்டேங்கும் அகமதில் தாகமாகும்
எடுத்திடக் கையில் தங்கா எதிரினைப் பெடுக்கும் பிள்ளை
கடுத்துடன் வயிறுபோகும் கருது நீ பறைவை தோஷம்."

2. 'பின்னும்' என்பதற்குப் பிறகு "குளிதோஷம்" என்று ஓலைப் பிரதியில் தவறுதலாய் தலையங்கம் போடப்பட்டிருக்கிறது; 'குளி தோஷம்' என்கிற விஷயம் பிறகு வருவதாலும், 'பின்னும்' என்று அடுத்தடுத்து வரும் சொற்கள் 'பறவை தோஷம்' என்பதே தொடர்வதாகக் குறிப்பதாலும், "குஞ்சுடம்பு" "உச்சி முலை" என்னும் செய்யுட்களின் விஷயங்கள் பாலவாகடத்திலும் பறவை தோஷத்தைப்பற்றினவையாகவே இருப்பதாலும் இங்கு "குளி தோஷம்" என்னும் தலையங்கம் இருப்பது சரியில்லை. மேலும் அடியில் வரும் இரு செயுட்களிலும் பறவை தோஷம் என்பதே குறிக்கப்பட்டுள்ளன. ஆகவே குளிதோஷம் என்பதை இங்கே நாம் விலக்கி, வேறிடத்தில் அதைப் போட்டிருக்கிறோம்.

3. "குஞ்சியின் உடம்பு நொந்து" என்பது (பாலவாகட பாடம்,)

4. "சுழியாய் வாங்கும் நெற்றியும் வலியுண்டாக்கும்"—பாலவாகட பாடம்.

5. "துஞ்சிடும்போது"—பாலவாகடம்.

பின்னும் :

உச்சி[1] மூலேதனைப் பற்றி
　　உடலெங்கும் வெதுப்பு உண்டாம்
எச்சமாக நாவுலர்ந்து [2] அதுவே
　　கண்ணும் வெதுப் பெய்து
பச்சை மஞ்சள் முளைத்தாப் போலே[3]
　　பசும்பொன் நிறமாய் [முக[4]மிருக்கும்
இச்சை புரிந்த குழல் மாதே
　　இதுவே பறவைதோஷ மென்றே. (57)

## குளிதோஷம்[5]

மதலையின் மேனிவாடி வயிற்றினில் பாலும் தங்கா
　　வீணிலிற்குளி யுண்டாகில் நோவன்றி கண்திறக்கும்
விதனமா யழுதுபிள்ளை வெதும்பி சோர்ந்து விழுந்து
　　மதலைவாய் வெதும்பும்தோளும் குளித்தவ ளெடுத்தக்
　　　　　　　　　　　　[காலே.[6] (58)

உச்சி குழிந்து கண் குழிந்து உயர்களிச்சல்[7] மிகவுண்டாய்
　　வெச்சென் றுடலும்மிக்க காய்ஞ்சு வெளிரிக் குஞ்சு
　　　　　　　　　　　　[யுடனும்
மச்சமுறவே மிகவற்றி மாறுதாகம் மட்டுவரும்
　　நச்சை பொரு வேல்விழியாளே நாடிக்குளி தோஷந்
　　　　　　　　　　　　[தானே. (59)

---

1. “ உச்சி முளை தனைப்பற்றி உடலமெங்கும் ”—பாலவாகடம்.

2. “ இரண்டு கண்ணும் வெளுப்பெய்தும் ”—பாலவாகடம்.

3. “ முறித்தாற்போல் ”—பாலவாகடம்.

4. “ முகமினுக்கம் ”—பாலவாகடம்.

5. மாதவிடாயில் குளித்த பெண் தொடுவது முதலியதால் காணும் கோளாறு குளிதோஷம் எனப்படுகிறது.

6. “ மதலையின் மேனிவாடி வயிற்றினில் பாலுந் தங்கா
　　சதலையிற் குழியுண்டாகிச் சர்த்தியும் எடுக்கும் நீராய்
　　நுதலினிற் சலமுநண்ணி நோக்கிய விழியுந் தாழ்ந்து
　　குதலைவாய் கருகித்தோன்றுங் குளித்தவ ளெடுத்தக்காலே. ”

7. “ வயிறு கழிச்சல் ” என்றிருத்தல் தகும்.

பாலகன் பவளவாயில் பனியென விளங்கிப் பூறும்
மாலக்கண் வளையரைகும் அடிக்கடி வயிறு போகும்
காலது பின்னிக்கொள்ளும் கத்தியே அலறிச் சீறும்
சாபமே விழுந்து தூரகத்தித்தது நெடுத்த
காலே[1]. (60)

தேயா நிற்கும் மெய்வேலுறுந்தீதே
வெளும்பும் வயிருகும்
தாயார் முலையில் வாய்வைத்து
சற்றே உண்ணுந் திகைத் திருக்கும்
காயா துடம்பு கண்பிசையும்
கண்டால் இதுதான் அறிவீரே
பேயால் கொண்ட நோயெல்லாம்
பொன்னை குளித்துக் கண்டதுவே. (61)

## எச்சி தோஷம்[2]

உதரமும் காளியா தோன்றும் வாந்தியும மிகவுண்டாகில்
மேல்தலை எடுத்திராமல் கண்களும் உள்ளே வாங்கி
விதம் விதமாகமேனி வெதும்பியே வருவதாகில்
இது எச்சிதோஷமென்று மெண்ணவே
[செப்பலாமே. (62)

தேயு முடம்பு மிட
நாறும் செற்பலை முலை
பேயருவருக்கும் தாயுங் கண்டா
லுத்துவிழா சற்றே வயறுதான் ஒழுகும்

---

1. "பாலகன் பவளவாயிற் பனியென வேர்க்கும் மூக்கு
ஆலகண் வளையமாகு மடிக்கடி வயிறு போகும்
காலது பின்னிக்கொள்ளுங் கதறியே யலறிச் சீறும்
சீலமாய் விழித்துத் தாவுந் தீதவளெடுத்ததாலே".
(பாலவாகடம்.)

2. யக்ஷிணி என்னும் பேய் தாக்குவதாலாகும் கோளாறு எச்சி தோஷம் எனப்படுகிறது. இதுவே எட்சி தோஷம், யக்ஷி தோஷம், யக்ஷிணி தோஷம் என்றும் கூறப்படும்.

பாயும் புலிபோல் பதறியழும்
பலரை(க்) கண்டால் பார்த்திருக்கும்
பாயுமுடை யொன்று னரிய
பாகா எச்சி தோஷமிதே.[1] (63)

இவ்வகை உள்ளியின் போயிருந்த
தோர் கொம்பி லேறில்
அவ்வகை குணங்கள் கண்டால்
அண்ணனைக் கதிகமாகும்
வகைக் கெல்லாம் வந்துமுறை
முறையாக பார்க்கில்
வேல்வினை பாலன்சீவன்
விடுத்தின்ன மருந்து செத்தே. (64)

## செங்கிரந்தி

பிள்ளை பிறந்தவுடனே அழுதும்
பின்னே மிடறுந்தனைக் கட்டி
மெள்ளப் புண்குரல் போன்று
விடமை மலமும் வயிறாதி
துள்ளி(க்) கைகால் அசைவற்று
அம்மிகிடக்கும் மெய்யசைந்து
கள்ளமான செங்கிரந்தி இது
தானென்று கண்டு கொள்ளே.[2] (65)

---

1. " தேயுமுடம்பு மிக நாறும் செவ்வன முலைப்பால் மறந்திருக்கும்
தாயைக் கண்டா லொவ்வாது சற்றே வயிறு போஞ்சுரமாம்
பாயும் புலிபோல் பதறியழும் பாலரைக் கண்டால் பார்த்திருக்கும்
பாயும் விடையோன் தானறியப் பகராய் எட்சித் தோஷமிதே. "
(பாலவாகடம்.)

2. " பிள்ளை பிறந்தவுடனழுது பிறகு மிடறுதனைக் கட்டி
மெள்ளப் பூனைக்குரல் போன்று விடாமணீர் மலம் வயிறாதித்
தள்ளிக் கைகால் சிவப்பேறச் சும்மா கிடக்குமே தென்னில்
கள்ளமான செங்கிரந்தி கருத்தா யிதனைக் கண்டுகொள்ளே. "
(பாலவாகடம்.)

## கருங்கிரந்தி

[1]முழங்க அழுதுமுலை உண்ணாது மூறி முறையும் உடல்
[வெதும்பும்
குணங் கொண்டிருகாது பாச்சியுண்டாய் குணமாம்
மருங்கி யிருமல் கக்கு அதிகமாக வயிறு ஊதும்
புழுங்குங்கரிய கருங்கிரந்தி பொல்லாததுவும்
[பொல்லாதே[2]. (66)

## கட்டு மலை வாதம்

கட்டுமலைவாதம் கண்ணை நாக்கைப் புருவத்தை கால்கை
[நெறித்து
மெலிக்குமிது விண்ணைப் பார்க்குங் குடலிரையும்
விட்டுவிட்டு வலிப்பெய்தும் உண்ணுமுலையை யுலகாது
[ஓடுங்காதுடலும் மஞ்சணிக்கும் நண்ணுங்
கட்டுமலை வாத மிதுதானென்று நயந்தறியே. (67)

## மாந்தம்

மாதாவயற்றில் மந்தமூலைப்பாலே அருந்திவரும் மாந்தம்
சூதாமாம்பை தேங்கிளநீர் சுரபி [3]மாங்கிஷிகிளி
[யிறைச்சி
[4]பேதா மவரை துவரை கட(லை) பேசுமொச்சை
[[5]புளிமாங்கொட்டை
மாதாகொள்ளில் பிள்ளைக்கு வரும் கணமாந்தம்
[தப்பாதே. (68)

---

1. "முழிக்கும் மூலையுண்ணாது" என்னும் சொற்கள் இந்நூலுக்கு மூலமான ஏட்டுப் பிரதியில் செய்யுளின் மூன்றுமடியின் முதற்பகுதியாகத் தவறுதலாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

2. "முழுங்கவழுது முலையுண்ணு மூர்ச்சையாகு முடல்வெதும்பும்
கொழுங்கண் திறவாய் வரட்சிகொண்டே யதரங் கறுப்பேறும்
அழுங்கி யலருங்குரல் கம்முமதிகமாய் வயிறூதும்
புழுங்கும் வலிக்கும் கருங்கிரந்தி பொல்லாதெனவும் புகன்றனரே"
(பாலவாகடம்).

3. மாமிசங்கனிகவிச்சு (பாலவாகட பாடம்.)

4. பேதாமலைத்துவரை (பாலவாகட பாடம்.)

5. புளியங்கொட்டை (பாலவாகட பாடம்.)

## [1] அவபத்தியம் (மாந்தத்தில்)

அன்னப்பால் மலக்கட்டாகி அதுஉடல் கனத்துத்
[தோன்றும்
தின்னத்தால் வாயுபண்டம் தின்னுல்மாந்தம்
பின்னத்தானம் கூச்சிட்டு வெள்ளை வெதுப்புக் காணும்
மின்னொத்த விழியாய்கேளாய் மிகுந்திடும் கழிச்சல்
[தானே. (69)

அன்னமே பாலும்நெய்யும் பல்பழகும் வித்தும்
பின்னையும் பயறு தேங்காய் பெரியதோர் தேவிப்
[பழமும்
தின்னிடில் கால்குளு(ளிர்ந்து) தீயென வெதும்புமாகி
லொன்றல்லாத் தள்ளை காமமுயர்ந்து நீர்அறிந்து
[கொள்ளே[2]. (70)

மாந்தத்தின் குணமே கேளீர் வயிறுபோம் வெப்புநாறும்
சோர்ந்து கால்குளு(ளிர்)ந்து [3]காணும் தோகையே
[முலை யுண்ணுது
வாந்தியும் மிகவே பண்ணும் வாயுவே உலர்ந்து காயும்(?)
மாந்தியே மயக்கமுண்டாம் மாந்தத்தின் குணமீ
[தென்றே. (71)

---

1. மற்ற நோய்களுக்கெல்லாம் இல்லாமல் இங்கே மாந்தத்திற்கு மாத்திரம் அவபத்தியம் கூறும் காரணம் யோசிக்கவேண்டிய விஷயம்.

2. " அன்னமும் பாலு நெய்யு மழகிய பழமும்தேங்காய்
பின்னையும் கடலை வெல்லம் பெரியதோர் கதலிப்பண்டும்
தின்னுமோர் காலந்தன்னில் தீயென வெதும்புமாகில்
என்று பிள்ளைக்குத்தானு வந்துமே மாந்தமுண்டாம் "
(பாலவாகடம்.)

3. " கை கால் குளிர்ந்து தோகையே " (பாலவாகட பாடம்.)

## பொர மாந்தம்

ளாயுடன் நெஞ்சு வெந்து [1]வயிறது காயுமாகில்
சாயவே உடம்புசேர் நன் சடுதியில் பொருமியூதும்
காயமும் வாடித்தானும் கண்களும் மலர்ந்துமூடும்
மாயம் [2]பொரமாந்தமென்று வகுத்தனரென்று
[தானே. (72)

தக்க நென்றியவேதான்(?) சங்கரசீதம் தோன்றில்
கண்ணிலே நீர்முட்டிய சுரங்கனதாது
மெய்க்க வெலந்து(?) கூடி யொன்றதா இருக்குமாகில்
சிக்கென வகைகள்தன்னை தெளியவே விளம்ப
[லாமே. (73)

பொருமுங்கழியும் புரண்டு வலியுண்டாம
மருவுமுலை யுண்ண மயங்கும்
பொருமி சர்த்தி செய்யும் கண்குழிந்தான் நயங்கியே
[யுழன்று
மெத்தயிறும் பொரமாந்த மென்றே.[3] (74)

[4]ஏற்றே தீர்ந்து மிக்கக் கழியுமிடை
யிடை சுரந்தான் தோன்றும்
தோத்த முடலைத்தானும் முறுக்கி
தோன்றும் முதுகு உடம்பெல்லாம்

---

1. "வயிறது கழிச்சலாகும்" (பாலவாகடம்)

2. பொரமாந்தமென்பது பாலவாகடத்தில் போர்மாந்தம் எனப்படுகிறது.

3. போர்மாந்த குணங்களையும் அதற்கான மருந்துகளையும் பற்றி 56-ம் பக்கம் பார்க்கவும்.

4. "ஏற்றே தீர்ந்து" என்னும் செய்யுள் (போர்மாந்த) பொரமாந்தத்தைப் பற்றியது; பாலவாகடத்திலும் அவ்விதமே இருக்கிறது. ஆனால் ஓலைப் பிரதியைப் பார்த்து எழுதிய கையெழுத்துப் பிரதியில் இச்செய்யுள் பால் மாந்தத்தின் கீழ்சேர்க்கப்பட்டிருக்கிறது; அது தவறு என்று தெரிகிறது. இதன் பாலவாகட பாடம் பின்வருமாறு:—

"ஏற்றே யிருந்து மிகக் கழியுமிடையிற் சுரமுந்தான் தோன்றும்
தோற்றமுடலைத் தானுருக்கும் தோன்றும் விலாவு முதுகெலும்பும்
வேற்றேருடலாய்ச் சர்த்தியுண்டாம் மிகுந்த மலமுமே யொழிக்கும்
கூற்றனைகும் போர்மாந்தக் குணமாஞ்சுதற்குப் பொல்லாதே."

வேத்துக் குடலாய் சக்தி கெடமிக
மின் மலத்தோடே நுரையும்(?)
கூத்தாகிய பொரமாந்தம் மிக்க
சொல்லும் மறவும் பொல்லாதே. (75)

## [1]பால் மாந்தம்

பாலது கழியும் பாலது எடுக்கும்
பரிதபித்திடும் உடம்பு பலவிதமாய்
சாலவே சுரங்கால்
வெதும்பில் குளிரும்
தலைஎடுக்காமல் மந்திக்கும் இதற்கு
மருந்து பொடுதலையின் காய் வறுத்துக்
கோலமாய் வசம்புள்ளி பிந்துமரிசி
கொஞ்சம் கொடுத்திட குணமாமே. (76)

---

1. பாலமாந்த மென்பதை பால்மாந்தமென்று இங்கு தவறுதலாய் குறிப்பிட்டிருப்பதாகத் தோன்றுகிறது. பால வாகடத்திலும் பால்மாந்த மென்றே காணப்படுகிறது. இதற்கு பாலவாகட பாடம் வருமாறு :—

"பாலதைக் கழியும் பாலதை யெடுக்கும்
பரிதவித்திடும் பலவிதமாய்ச்
சாலவே சுரங்கால் வெதும்பிடுங் குளிருந்தலை
யெடுத்திராமலே மயங்கும்
சீலமாய்த் தாயார் லங்கனமிருந்து திகழ்
பொடுதலையின் காய் வறுத்துக்
கோலவிந்துப்பு வசம்புள்ளி மிளகு
கொள் சமன் கொடுத்திடக் குணமே."

## நீர் மாந்தம்

[1]தலையது நோவாய் முகமது மினுங்கும்
தவிக்கவே மலம் சிறுத்திட்டு
முலையது முகவாதுமெல்லாம் பிணம்
போல மூத்திரங் குறுகிடுந்திங்கு
மலைமருந்து உள்ளிமூக்கறட்டை
வளங்குஞ் சாறொவ்வொன்று ஒன்றுகும்
இலங்குறு மணக்கெண்ணை(ணெ)யின் சரி
எறித்திடத்திரும் நீர்மாந்த மதுவே. (77)

இருமுகல்வால் நீர்துளியும் இடையிடை சுரந்தோன்றும்
பொருமி வயிறும் இரைச்சலுமாய் போதப்பல
[வண்ணந்தான் கழிந்து
சொருகுமுடல் மெலிந்து மிகச் சொருங்கண்மூடி
இருமுமே நீர்கண மாந்தமென்று மறிந்துபார்
[சத்தியமே. (78)

---

1. இந்தச் செய்யுளின் பாடம் பால வாகடத்தில் பின்வருமாறு; இச்செய்யுள் அங்கு இரண்டாகவும் பிரிக்கப்பட்டுள்ளது :—

"தலையது நோவாய் முகமது மினுக்குந்
தக்கவே மலஞ்சிறுத்திட்டு
முலையது முகவாதுடம்பெலாங் குளிர்ந்து
மூத்திரம் குறிகடுத்திறங்கும்."
"மலைமருந்தீர உள்ளி மூக்கரட்டை
வயங்குசா றெவ்வொன்றே ருழக்காய்க்
குலவிளக்கெண்ணெய் தனிலெரித்தருந்தக்
கொட்டுநீர் மாந்தமுங்குணமே."

## செரியா மாந்தம்

மிக்க வெதும்பும் தலைவலியும் மிகவும் வயிறுதான் கழியும்
மைக்கலந்தான் கரைந்தேன் வயிறுபொருமும்
[நொந்து அழும்
பந்தம் படும் துயர் சோருங்கீரைத்தண்டது போல்
சிக்கென்றினகுகள் மூலைதானே செரியாமாந்த[1]
மிதே. (79)

## கட்டு மாந்தம்[2]

கொட்டாவி தலைநோயும் மலம்போகாமல்
[3]கூறி நரைவிட்டொரு நாளிணுக்கவிஞர்(?)
கொட்டாலு முடலெங்கும் அனல்போல
காயும் தூக்கமதுபோலிருந்து சேர்ந்து மாந்தி
[4]பட்டாவி வயிறுமிகக் கழிந்தடங்கும்
பலநாளுமிப்படியே மலச்சிக்குண்டாம்
மட்டாருங்குழல் மடவாய் கட்டுமாந்தம் வகையறியும்
[5]வாகடநூல் ஓதுவோர்க்கே. (80)

---

1. "மிக்க காய்ச்சல் தலைவலித்தல் மிகவே வயிறு நொந்தழுதல்
தக்க மலமாக்கரைத்தாற் போல் சாலக்கழிதல் கண்ணரைக்கண்
தொக்க பக்கந்தான் படுத்துச்சேர்தல் கீரைத்தண்டதுபோல்
சிக்கென்றிலங்கு முகமாதே செரியாமாந்த குணமிதுவே."
(பாலவாகடம்).

2. கட்டுமாந்த பரிகாரமுறைகள் ஐந்து இடங்களில் கூறப்பட்டுள்ளன.

3. "குறுவேர்வை வயிற்றுவலி குடலிரைச்சல்" பாலவாகட பாடம்)

4. "பட்டாலே வயிறு மிகக் கழிந்திடாமல்" (பாலவாகடம்).

5. "வாகடநூல் வல்லீர்தானே." (பால வாகடம்.)

## தலை மாந்தம்

அகடது பெக்கவாதி அதிகமாம் சுரமும் தொத்தி
முகடது கலையே பாகை முறிகொட்டாவி யுண்டாய்
விகடமாய் வலிப்பெடுக்கும் விரைவிறைத்திருக்கும்
[வேற்கும்
துகடிலாமின்னே இதுதான் தலைமாந்த மென்ன
லாமே[1]. (81)

தலையும் கனத்து உடம்பூதி
சரீரத்தினிலே வலியுமுண்டாம்
குலையும் வலித்துத் துள்ளி விழும்[2] குளிரும்
சோர்ந்து வேர்த்துவிடும்
[3]சிலையும் புருவந்தலை நீராய்
சேட்டை மிகவே வலியுண்டாம்
மலையினுயர்ந்த தனத்தாளேவாதைப்
படுத்தும் தலைமாந்தம். (82)

## விஷ மாந்தம்

[4]சிறியவன் வயிறுமேலாய்ச் சினத்திடு
முருட்டிப் பார்க்கும்
கரியுடனுடைய தாயாரங்கய
நிற்றேங்கா தொன்றும்(?)

---

1. "கூட்டுச்சந்துகள் தலைவலி வேர்வை கொட்டாவி
சாட்டியத்தொடு தலைகனங் குலைவலி சலம்போல்
ஆட்டமில்லாது குளிர்சுரமதிக மெய்யூதற்
காட்டினால் தலைமாந்த மென்றதை யறி மாதே."

(இது தலைமாந்தத்தைப் பற்றி பாலவாகடத்திலுள்ள மற்றொரு வகைக் குறிகள் கூறும் செய்யுள்.)

2. "குளிருஞ்சுரமும் வேர்வை விடும்" (பாலவாகடம்.)

3. "சிலையின் புருவத்தலை நிமிராசேட்டை மிகவே செய்விக்கும்" (பாலவாகடம்.)

4. இதற்கு பாலவாகட பாடம் பின்வருமாறு :—
"சிறியவன் வயிறிரைந்து சினத்திடு முருட்டிப் பார்க்கும்
கருவுடன் பெற்றதாயார் கையினிற்றங்காப் பிள்ளை
அறிவுள மேனிவாடி அரைக்கும்கீழ் குளிர்ந்திருக்கும்
வெறியென வெருவும் எவர்க்கும் விஷமுள மாந்தந்தானே."

அறின்போ மென்னச் சொருமறை
யிறக்கீழ் குளுந்திருக்கும்(?)
வெறியென விளக்குமாகில்
விஷமுள்ள மாந்தந்தானே. (83)

வாந்தியும் வயிறும் போகும் வாகுசேர் விழியும் பொருமும்
மாந்தியே சோர்ந்து வீழ்ந்து வயிற்றிலே வலியுண்
[டாகும்
[1]சோர்ந்திடும் மலமும்தானும் சிக்கியே வயிறுபோகு
மாய்ந்திடும் நூல்வல்லோர்களது விஷமாந்தந்
[தானே. (84)

## வறள் மாந்தம்

தோலும் திரங்கி யுடல் வெளுத்து
சுழலும் மயக்கமுண்டாகும்
[2]பாலுமருந்து மெய்யிளைக்கும்
பார்க்கும்போது பல குணமாம்
[3]காலுங் கையுந்தான் வீங்கி
கடுப்பும் வலியும் காண்பித்து
வாலர்தம்மை யுருவழிக்கும் [4]வறள்
மாந்தத்தின் வகைதானே. (85)

## ஊது மாந்தம்

உடலெல்லா மூதிகாணும் வாந்தியும் கழிச்சலுமுண்டாம்
குடலெல்லாம் இரைச்சலாகிக் கூப்பிடும் சமுத்திரம்
[போல
[5]துடியெல்லாம் வலிக்கு மிக்க சுரமுடன் கடுப்புமாகு
மடவினூ லூதுமாந்த மதுசெய்யுங் குணங்கள்
[காணே. (86)

---

1. "சேர்ந்திடு மலமுந்தானுஞ் சிக்கியே" (பாலவாகட பாடம்).
2. "பாலுமெடுக்கு மெய்யிளைக்கும்" (பாலவாகடம்).
3. "காலுங் கையுந்தான் வற்றி" (பாலவாகடம்).
4. "வரள்மாந்தத்தின் குணமிதுவே." (பாலவாகடம்).
5. "தொடையெலாம் வலிக்கும்" (பாலவாகட பாடம்.)

## மாந்த சன்னி

பத்தியத் தாழ்வால் மந்தம் பகை செய்யும்
முத்திய சுரமும் தாகமும் உதிர்ந்திடும் நாவில் முள்ளும்
புத்தியும்கலங்கி கண்ணும் போதவே தாமுந்
[தானே[1]. (87)

## வலிப்பு மாந்தம்

வயிறுகழியும் விதவிதமாய் மாரைவலிக்கும் பல்கிட்டும்
பயறு கடித்தாப்போல் [2]தந்தம் பதரிக்கடிக்கும்
[பசியெடுக்கும்
கயிறு முறுக்கிவிட்டாப்போல் காலும் கைதானிழுக்கு
மெயிறு திறக்கமாட்டாது இறங்காது அன்னம்
[தண்ணீரே. (88)

## வலிப்பு சன்னி

மாந்தமே கோபித்தக்கால் வயிறுபோம் உப்பிக்கொள்ளும்
காந்தல்போல மேனிதானும்[3]......................

[4]...........ச்சத்தி சலதோஷந் தன்னால்
பையாவல் குழலார்கள்
பசியற வருந்துதன்னால் துய்யதோர் குரல் கேட்டு
கண்களும் தோன்றுமென்றே[5]. (95)

---

1. இப்பாட்டில் நான்காம்அடி விடப்பட்டிருக்கிறது.

2. "தந்தம் பற்றிக்கடிக்கும் இசிப்பெடுக்கும்". (பாலவாகட பாடம்).

3. வலிப்பு சன்னியைப் பற்றிய விஷயமும், வேறு விஷயங்களும் அடங்கிய ஓர் ஏடு மூலப்பிரதியில் தவறிவிட்டது.

4. பாலவாகடத்திலுள்ளபடி இச்செய்யுளில் முழுப்பாகமும் வருமாறு :—

"ஐயது கூடிற்றென்று லரிவையர் துயரந்தன்னால்
செய்ய பற்புனலருந்திச் செறி சல தோஷந்தன்னால்
பையா வல்குளாலும் பசியுடனிருந்தாலும்
துய்யதோர் குழவிகட்குக் கணங்களுந் தோன்றுமன்றே."
இங்கு கணநோய்கள் என்பது ஆரம்பிக்கும்.

5. இந்நூலுக்கு ஆதாரமான ஏட்டுப்பிரதியில் ஒரு ஏடு காணப்படவில்லை யாகையால் 89-வது செய்யுளின் பிற்பாதியிலிருந்து 95-வது செய்யுளின் முற்பாதி வரையிலுள்ள செய்யுட்கள் இங்கே விடப்பட்டுள்ளன.

மாந்தமுதிர்ந்து விழிக்குங்கால் வயிறு
நொந்து நாக்கு வெந்து
ஏந்து மெதிரே மூச்செறிந்து
வெச்செனத்தீர் நிற்கும்[1] (?)
(போந்த வுடம்பு பலவிதமாய்ப்
பொறுத்துச் சுரமுண்டாம்)[2]
காந்தண் மலர்போல கரமுடையீர் கணத்தின்
வகை என்றுரையீரே. (96)

கணங்கள் செய்யுங் குணங்கள்தானும்
கண்ணது வலியுமாகும்
தனையெழ சுரமுந்தோன்றும் சரீரமும்
வெளுத்து காணும்
அனையெழ வாயுந் தோஷமாகுமாங்
குணமு மென்றே[3]. (97)

மகா சன்னி[4]

முகம் புறங்கால் புறங்கை மொத்நியே மினுமினுக்கும்
நகம் விழி வெளிறிக் காணும் நஞ்சுண்டாப்போல்
[மயங்கும்
மிகமிக வெதுப்புண்டாய் வெடித்து நாவுதடுபுண்ணாய்
இகவறு வறுத்துமாகில் மகாசன்னி
என்னலாமே. (98)

---

1. "எந்த வெதிரே மூச்செறிந்தும் இருமலிருமச் சந்திக்கும்" (பாலவாகட பாடம்.)

2. "போந்த வுடம்பு........." என்னும் அடி எட்டுப்பிரதியில் காணவில்லை; இது பாலவாகடத்திலிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

3. இச்செய்யுளின் ஓரடி காணவில்லை.

4. "மகாகணம்" என்று இருத்தல் வேண்டும். 95-ம் செய்யுள் முதல் கணநோய்கள் கூறப்படுவதால் 'மகாசன்னி' என்று நடுவில் இருப்பது சரியாகத் தோன்றவில்லை. மேலும் பாலவாகடபாடத்தில் இச்செய்யுள் மகாகணம் என்பதையே குறிக்கிறது. அது வருமாறு :—

"முகமும் புறங்காலும் கையும் மோதியே மினுமினுக்கும்
நகைவிழி வெளிறிக்காட்டும் நஞ்சுண்டாற்போல் மயக்கும்
மிகமிக வெதுப்புமுண்டாய் வெடித்துநா உதடுபுண்ணாய்ச்
சுகமிலா வருத்தந்தோன்றும்சொல் மகாகணத்தின் வாறே."

## அந்தக கணம்

[1]உச்சி மூலை தன்னை பத்தும்
உடலெங்கும் வெதுப்புண்டாய்
இச்சமாந்தால் தாங்க அத்தெயம்
கண்டு வலுப்பெய்தும்
பச்சைமஞ்சள் முறித்தாப்போல முக
மிருக்கும் பாலாவேர்(?)
சத்தமாகும் அந்தக நேருங்(?)
கணமா மறிந்துரையே. (99)

## [2]பொர கணம்

கையுங்காலும் குளிர்ந்து காணும்
கண்மலர வளியமாகும்
குய்யவே கரமுந்தோன்றும் குடித்தபால்
ச(ர்)த்தி பண்ணும்
துய்யவே திடுக்கிட்டெங்கும் சோர்ந்து
தான் வயிறு போகும்
பொய்யல்லக் கேளாயிந்தப்
பொரகணத்தின் வாகுதானே. (100)

---

1, "உச்சிமூளை தனைப்பற்றி உடலெங்கும் வெதுப்புண்டாம்
மிச்சமாக நா உலரும் விழிகளிரண்டும் வெளுப்பெய்தும்
பச்சை மஞ்சளது போருரிலே பசும் பொன்னிறமாய் முகமினுக்கும்
அச்சம்புரியு மூலையாளே அந்தக கணமென்றறிந்துரையே"
(பாலவாகட பாடம்.)

2. இது பாலவாகடத்தில் பேராமகணம் எனப்படுகிறது. அதிலுள்ள பாடம் பின்வருமாறு :—

"கையுடன் கால் குளிர்ந்து கண்ணுமே வளையமாகும்
குய்யவே கரமுந்தோன்றும் குடித்தபால் சர்த்திபண்ணும்
துய்யவே திடுக்கெட்டேங்கும் சோர்ந்துதான் வயிறுபோகும்
பொய்யல்ல கேளாயிந்தப் பேராமகணத்தின் வாறே."

## [1]விஷ கணம்

நெஞ்சுங் கொதிக்க விலாகொதிக்க
நீராயந்த(?) உடலெங்கும்
வஞ்சமது வாயொரு வேளைவெந்தே
சர்வாங்கமும் வெதும்பும்
விஞ்சுமிருமல் வயிறிரையும் விட்டுத்
திடமாய்த் திரும்பெடுக்கும்
மஞ்சுநடையாய் இது விஷக்கணமா
மென்று மருந்துரையே. (101)

## கொதிப்புக் கணம்

[2]நெஞ்சுங்கொதிக்க விலாக்கொதிக்ச நேரே
நெற்றி வலித்துவிடும்
பஞ்சுபோல முகம் வெளுக்கும் பார்க்கும்
போது பலவிதமாய்
துஞ்சுவொண்ணு இருமல்வந்து துயரப்
பட்டுத்தலை நோவாம்
கொஞ்சுங் குரலுந்தான்கம்மி கொஞ்சஞ்
சுரமுங் கோத்தமரும். (102)

---

1. இவ்விஷகணம் என்பது பாலவாகடத்தில் வரட்கணம் எனப்படுகிறது; இதைப்பற்றிய பாலவாகடச் செய்யுள் வருமாறு :—

"நெஞ்சுதுடிக்கும் புகைந்திருமும் நிறமும் வேறே நாகறுக்கும்
வஞ்சமறவே ஒருவேளை வந்தே சரீரமெல்லாம் வெதும்பும்
மிஞ்சுமிருமல் வயிற்றிரைச்சல் விட்டுத் திடமெய்துரும்பெடுக்கும்
மஞ்சார் குழலாய் வரட்கணத்தின் வாகுமிதனை யறிவாயே."

2. கொதிப்புக் கணமென்று தலையங்கமிருப்பினும் இங்குள்ள பாட்டில் அப்பெயரில்லை. ஆனால் பாலவாகட பாடம் பின் வருமாறு அதை விளங்கக் கூறுகிறது :—

"நெஞ்சு கொதிக்கும் விலாக்கொதிக்கும் நேரே நெற்றிவேர்வை விடும்
பஞ்சைப்போலக் கண்வெளுக்கும் பார்க்கும்போது பலவிதமாய்
துஞ்சவொண்ணு இருமல்வந்து துயரப்பட்டுத் தலைநோவாம்
கொஞ்சுங்குரலும் கம்மிவிடும் கொதிப்பு கணத்தின் குணமாமே."

## நீர்க் கணம்

[1] இருமும் மேல்மூச்சுண்டாகும் மிச்சக்
கண்கடை நீராம் சொற்
பெருகும் மூக்குதனில் புண்ணுய்ப் பொருந்துஞ்
சுரமுந் தலைநோவாம்
வருமே விலாப்பக்கம் சுழியவாங்கும்
நயமுள்ளென் றறிந்து
சேருந்தொண்டை விலாச்சிலுத்திருக்க இது
நீர்க்கணமென்றறிந்து கொள்ளே. (103)

[2] நீர்க்கணகுணமே கேளீர் நீரின் மேல்
மனது வைக்கும்
வேர்க்கும் கணமுகமே வேர்வையில்
வெதுப்புத் தோன்றும்
நாக்கும் வாய் வரண்டு காணும் நல்ல
நீர் கழிச்சலுண்டாம்
பார்க்கில் ஓர் நீர்கணத்தின் பற்பல
குணங்கள் காணே. (104)

முகமும் புறங்கால் புறங்கையும் மெறவே(?)
மினு மினுக்கும்
தகமையும் தாகமுணடாய் தண்ணீரே
மிக குடிக்கும்

---

1. இங்கு குறிப்பிட்டுள்ள செய்யுள் சில மாறுபாடுகளோடு நீர்க்கண மாந்தநோயைப் பற்றியதாய் பாலவாகடத்தில் உள்ளது.

2. " நீர்க்கண குணமேகேளாய் நீர்வேட்கை யுடலிலன்றி
வேர்க்குங் கைகால்கள் தம்மில் வெதுப்புறுங் கண்களாழும்
நாக்கு வாய்வரண்டு புண்ணும் நாவெடிப்புறு நீர்ப்பேதி
பார்க்கிலோ நீர்க்கணத்தின் பற்பல குணங்கள் தாமே."
(பாலவாகட பாடம்).

மிகவே மயக்கமும் வெதுப்பு முண்டாய்
வெடித்து நாவுந்தான் புண்ணாய்
மகமேரொத்த தனத்தாளே வருநீர்
கணத்தின் வகையாமே[1]. (105)

## வரட் கணம்

[2]நெஞ்சுந்துடிக்கும் புகைந்து இருமும் நித்தியம்
விடாத காய்ச்சலுண்டாம்
மஞ்சணிக்கும் நாக்கறுக்கும் மங்காது
தினவு முண்டாகும்
மிஞ்சும்போது வலித்திரைக்கும்
கனமூச் சறையும்
பஞ்சுமேனுச்சி மாவா(?)கேள் பகரில்
அதுதான் வரட்கணமே. (106)

அஸ்தியிற் சுரமுந்தோன்றும் அழுன்று நீர்த்தாகமாகும்
முற்றியே சிறுநீர்தானும் முறுக்கியே வெள்ளைகாணும்
சற்றுதான் வயிறுநொந்து சதிருடன் கடுப்புமாகும்
வற்றிடும் சரீரமெங்கும் வரட்கண மென்று
[சொல்லே. (107)

நாக்கில் மஞ்சள்வெள்ளை முள்ளும் நடுவே
[3]வெடிப்பு முண்டாகும்
பார்க்கப் பிள்ளையீடழியும் [4]பருக்கு
முடலும் எரித்துவிடும்

---

1. "முகமும் புறங்கால் புறங்கையுமோதி மினுமினுப்புண்டாகும்
தகைசேர் மயக்கமுடல் சோர்வுதணியா வயிற்றுநோயுண்டாம்
மிகவே சோகம்வெதுப்புண்டாம் விட்டுவிட்டுச் சுரங்காயும்
மகமேரொத்த மனத்தாளே வருநீர்க்கணத்தின் வகையாமே."
(பாலவாகட பாடம்).

2. வரட்கணத்தைப்பற்றிய பாலவாகடச் செய்யுள் விஷகணத்தைப் பற்றிய டிப்பணியில் எடுத்து எழுதப்பட்டுள்ளது. 101-ம் பாட்டின் டிப்பணியைக் காண்க. இங்குள்ள வரட்கணக் குறிகளுக்கும் பாலவாகடத்தி லுள்ள குறிகளுக்கும் வேறுபாடு சிறிது இருப்பதையும் பார்க்கவும்.

3. வெடிப்பு மூன்றுகும். (பாலவாகடம்).

4. பருக்காதுடலுமிளைத்து விடும். (பாலவாகடம்).

[1]மூக்கில் சளியும் இருமல் உண்டாய் முகமும்
மஞ்சள் பூத்திருக்கும்
தூக்கம் மிகவே மயக்கமுண்டாம் சொருகும்
வரளின் கணமிதுவே. (108)

## மூல கணம்

[2]சீதம் இரத்தந் தினம் ஆசனத்தின் கடுத்து மூக்கும்
இது காய்ச்சல் வயிற்றிரைச்சல் அண்டாது தலை
[நோவதிகமாய்
பேதப்படவே முகமினுங்கும் சிவக்கும் கறுக்கும்
பிதா மாதா இந்தக்கணம் செய்யும் மேலுண்மையே
[மூலக்கணமறியே. (109)

உதிரமாய் வயிறுபோகும் வாந்தியும் சுரமுங்காணும்
சதிரமெல்லாம் நடுங்கும் சந்துகால் வலியுமுண்டாம்
உதிரவே சீதங்காணும் முக்கியே யடகள்தள்ளும்
மதியுட னறியவல்ல வைத்திய ரென்னலாமே. (110)

## மந்தாரக் கணம்

மந்தாரக் கணத்தின் வாறுவகை யறிந்தாரே கேளீர்
முந்தியே கணமு[3]மாந்தம் உதிரவே அசந்துகூடில்
[4]சிந்தையில் சுரமயக்கம் திடுக்கிடும் சுவாஸம் வாங்கும்
காந்தியே வயிறும் உப்பும் கணத்தின் மந்தார
[மாமே. (111)

---

1. மூக்கிற்சளியு மிருதலுடன் முகமும் (பாலவாகடம்).

2. மூலகணத்தைப்பற்றிய பாலவாகடப்பாட்டு வருமாறு :—
"சீதரத்தமுமே கழிந்து தினமுமாசனங் கடுத்துளையும்
மீதுகாய்ச்சல் வயிற்றிரைச்சல் விடாத தலைநோயதிகமாம்
காதப்படவே முகமினுக்கும் கறுக்குஞ்சிவக்கும் பலவிதமாய்
ஓதுமுறுப்பு மிகத்தளரு முரைத்தோ மூலக்கணமென்றே."

3. "மாந்தமோதியே இசைந்து கூடில்" (பாலவாகட பாடம்).

4. "சந்தியில் சுரமயக்கும் சார்ந்திடும்" (பாலவாகடம்).

## மூக்கு கணம்

[1]சோகமாய் நாக்கு வெந்து சுரமுடன் தலைகள் (தலையும்) [நாணி
தாகமாய் வயிற்றில்தானும் தான்மிக கடுத்துரத்த
மாகவே கழியும் பிள்ளை அதிகமாய் சீதம் வீழ
தோகைநீ கேளாய் மூக்குகணமென்று தொடுத்த [வாறே. (112)

கக்கும் முலையுண்ணாது காலுங்கையும்
குளிர்ந் திருக்கும்
[2]செரக்கும்(?) உடம்புதான் சோரும் சொரிந்
தெம்பலத்தில் ரத்தம் விழும்(?)
நிற்குங்கடுக்கும் ஆசனவாய் நெருப்புப்
பட்டாப்போல் எரியும்
மூக்குங் கணத்தின் குணம் இதென்று
மொழிந்தேன் இதனைப் பாரீரே. (113)

## இரத்த கணம்

[3]சீதமும் ரத்தமும் மிகப் பெருகும் திரும்பக்
கெட்ட பால்போல
போதங்கழியும் கருந்தண்ணீர் போலு
மின்னே கழிந்துவரும்

---

1. இப்பாட்டிற்கு பாலவாகட பாடம் பின்வருமாறு :—
“ சோகமாய் நாக்குவெந்து சுரமுடன் தலையுநாணித்
தாகமாய் வயிற்றைப்பற்றித்தான் சீதம் ரத்தம் வீழும்
மாகமாய் உறுப்பு தள்ளி மாருட்ட லுடல் நடுக்கல்
தோகையே கேளாய் மூக்குகணமெனச் சொல்லுவாயே.”

2. “ சொக்குமுடலும் கண் சோரும் தொக்குமிணைக்கு முடல் கறுக்கும் ” என்றவாறு பாலவாகடத்தில் இரண்டாமடியின் பாடம்.

3. பாலவாகடத்தில் இச்செய்யுள் சில மாறுபாடுகளுடன் பொதுக் கணக்குறிகளுள் ஒன்றாகப் பின்வருமாறு காணப்படுகிறது :—
“ சீதரத்தமாய்க் கழியும் திரும்பக்கெட்ட பால்போலப்
பேதக்கறித் தண்ணீரதுபோல் பின்னும் கழியும் வயிறுப்பும்
ஏதங்கைகால் முகங்கருகி எரிந்து குளிர்ந்து வெதுப்புண்டாம்.
கோதை இருமலுண்டாகும் குறிதானறிவாய் கணங்கட்கே.”

மெத்த முன்போல காலும் கையும்
ஒருக்கால் வலியுண்டாம்
கோதா யிந்தக்குணங்கண்டால் குணமாம்
குணங்கள் குறித்தறியே(?). (114)

இடைவிடா முக்கி முக்கி இருமலுங் கழிச்சலுண்டாய்
அடைபடா கழிச்சலாகி அடிக்கடி ரத்தங்காணும்
துடைஇடை வலிக்கும் தாகம் சொல்லொண்ணு [1]சுரமுங்
[காணும்
தடைபடா வியாதி என்றும் சாற்றினர் முனிவர்
[தானே: (115)

## ஆமக் கணம்

[2]சுழியப்பொருமும் வயிற்றெரியும்
சுவாசம் மிகவுண்டாகும்
கழுத்தை நாணிக்காலும் குளிர்ந்து
கண்ணும் மூக்கும் அழியாது
அழுத்தமாம் சுரந்தோன்றும் மலர்ந்து
சீறி திக்கென்று
சுழிக்குமாம் கணமென்றும் சொன்னர்
முனிவர் சொன்னரே. (116)

---

1. "சுரமுங் காயும்" என்கிற சிறு பாடபேதத்தைத் தவிர பால வாகட பாட்டிற்கும் இப்பாட்டிற்கும் பேதமில்லை.

2. "சுழிக்கும் பொருமும் வயிறிழியும் சுவாசமிகவு முண்டாகும்
கழுத்தை நாணிக் கால்குளிர்ந்து கண்ணைமூடி விழியாது
அழுத்தமான சுரந்தோன்று மயர்ந்துசீறித் திடுக்கென்னும்
சுழிக்கு மாமகணமென்று சொன்னாரானர் தோகைக்கே."
(பாலவாகட பாடம்).

## எரி கணம்

[1]பாயில் இடந்து தரையோடு பாலால்
மோதும் உடம்பெரியும்
வாயில் மூச்சுப் பிறந்து விடும் வாயா
லெடுக்கும் வசமளியும்
நோயில் பட்டு மிகவழிக்கும் நோக்கும்
கீழாய் முகம் சாய்க்கும்
தாயேஅறிய வயித்தியருக்கும்
சாற்றுகிறேன் எரிகணமே. (117)

## [2]சுழல் கணம்

சொல்லில் சுழியவே சுவாசம்
வாங்கும்
நளிருடன் சுரமும் தோன்றும் நயனம்
பஞ்சடைந்து காணும்
தெளிவுளன் சற்றும் தோற்றும் திகைக்க
நெஞ்சிரைப்பு மாகும்
குழலிக் கண்ணுச்சிதாழி குணமிது
வறிந்து சொல்லே. (118)

---

1. "பாயில் கிடக்கவொட்டாது பதைத்தே எரிவுமிகவுண்டாம்
வாயில் மூச்சுப் பறிந்துவிடும் வாச உமிழ்நீர் வடிந்துவிழும்
நோயில்பட்டு மிகஅழுமே நோக்கும்கீழே முகஞ்சாய்க்கும்
ஆயுள்வேத வைத்தியருக் கறைந்தோமிதுவே எரிகணமே."

(பாலவாகட பாடம்).

2. பாலவாகடத்திலுள்ளபடி சுழல்கணம் என்று ஒருநோய் கிடையாது. "சொல்லில் சுழியவே" என்கிற செய்யுள் சில மாறுபாடுகளுடன் "கழிக்கணம்" என்பதைப்பற்றி அதில் பின்வருமாறு காணப்படுகிறது :—

"சுழியெனுங் கணமே சொல்லின்சுழியவே சுவாசம் வாங்கும்
நளிருடன் சுரமுந்தோன்றும் நயனம் பஞ்சடைந்து காணும்
தெளிவுடன் சுந்துநொந்து திகைக்க நெஞ்செரிப்பு காணும்
குழியுமே யுச்சிதாழிற் குணமிதையறிந்து சொல்லே."

சுழிக்கணம்

[1]பால்முலையாய் நீகேளாய் மண்ணில் பிறந்த பாலகருக்கும்
ஈரல் வெந்து சுழிகணமாய் இருமலுண்டாம் வாய்
[இனிப்பாம்
நாறவம் போலத்து வண்டுநாசி இரண்டும் எடுத்தெரியும்
.................................................. (119)

பாரிலுள்ள பாலகருக்குப் பரிந்தே இதனைப் பாரீரே
மாரிலே சுழியவாங்கும் வாயினால் நுரையும் கோழை
சேரிலே பிள்ளைவாந்தி செய்யும் கழியும் காயும்
பாரிலுள்ள பாலகருக்குப் பாரீர் இதனைப்
[பாரீரே. (120)

மின்னே கேளாய் சுழிகணந்தான்
மேல்சுவாசம் மேலு முண்டாய்
பின்னே மார்பு முகம் நரம்பும்
புடைத்துக் காணும் உண்மையிது
சொன்னோம் வயிறுமீரல் நெஞ்சுந்
தோன்று மதரமிவை வெந்து
அன்ன முலையும் குடியாமல்
மலத்தி(?) குடிக்கும் அறிவாயே[2]. (121)

---

1. "பால் முலையாய்" என்னும் பாட்டுக்கு நான்காம் அடி காணப் பட வில்லை. இந்தச் செய்யுளும், அடுத்துள்ள பாரிலுள்ள என்னும் செய் யுளும் பாலவாகடத்தில் காணவில்லை. "பாரிலுள்ள பாலகருக்குப் பரிந்தே" என்பதுகூட அச்செய்யுளின் முதலடியாகத் தோன்றவில்லை.

2. "மின்னே கேளாய் சுழிகணந்தான்
மேவும் வாந்தி யிருமலுண்டாம்
பொன்னே முகமு மார்பு கண்டம்
புடத்துக் காணு முண்மை யிது
சொன்னோம் வயிறுமீரல் நெஞ்சு
தொண்டை நாவுமிவை வெந்து
அன்னை முலைப்பால் குடியாம
லலறியழுமீ தறிவாயே."

(பாலவாகடம்.)

## தோஷ கணம்[1]

தாகமுங் கழிச்சலுண்டாய் தலையது சுழலுமுண்டாய்
வேகமாய் சுரமும் சற்றே விட்டு விட்டெனவே காயும்
வாகுசேர் கண்ணுந்தாழ்ந்து வாயுந்தா னுலர்ந்து காணும்
சோகமும் வயிற்றில் நோவாய் சேர்ந்துகைகால்
[தண்ணீரே. (122)

## கண சன்னி[2]

கண்மூடினுப் போலதன் கழிந்து கைகால் குளு(ளிர்)ந்து
மனமிதில் மனிதர்காண மாய்ந்துபேய் சோர்ந்துமீது
குளு(ளிர்)ந்து தாயஞ் சொல்லேயழுது இன்னும்
விண்மீதிலேகு மென்று விரைந்துமே முனிவர்
[சொன்னர். (123)

## [3]அக்கர குணம்

தலையும் வலிக்கும் தாகமுண்டாம்
தாதுமிகவும் துடித்து நிற்கும்
குறலையம் வெந்து நா வெந்து
குந்தூதிதான் வரும் பின்னை

---

1. "தோஷகணம்" என்பதன் குறிகுணம் முதலிய விவரம் பால வாகட நூலில் காணப்படவில்லை.

2. கண் சன்னி (அல்லது கண சன்னி) என்ெறுரு நோய் பால வாகடாதி நூலில் காணப்படவில்லை. ஆனல் அந்நூலில் அசாத்திய குறி குணம் என்கிற தலையங்கத்தின் கீழ் இச செய்யுள் பின்வருமாறுள்ளது :—

" கண்ணையு மூடிக்கொண்டு கழிந்து கைகால் குளிர்ந்து
மண்மீதில் மனிதர்காண மயக்கமாய்ச் சோர்ந்து வீழ்ந்து
கண்மீது பெற்ற தாயார் சாலவு மழவே பிள்ளை
விண்மீதி லேகுமென்று விரைந்துமே முனியுரைத்தார் ".

3. அக்கரம் என்பதே அச்சரம் என்றும் வழங்கப்படும். " அச்சர மென்ெறுரு நோயுண்டு அஂதக்காமும் " என்று கூறி, இங்குள்ள பாட்டும் பாலவாகடத்தில் பின்வரும் வகையில் காணப்படுகிறது :—

" தலையில் வலியுந் தானுண்டாம் தாதுமிகவும் துடித்து நிற்கும்
குலையும் வெந்து நாவெந்து குளிர்ந்துதானே வரும்பிள்ளை
கலையும் பொசியு நாவெளுத்துக் கலங்கிக் கண்டந்தான் வெந்து
மலையின் மிளகு கொளவொண்ணு வகுத்துச் சொன்னேமக்கரமே ".

நலையும் பேசிய நா
வெளுத்து வந்து
மலையில் மிளகுகொள்ள வொண்ணு
வருத்தே சொன்னேம் [1]தூக்காமே. (124)

## [2]குன்றீரற் குணம்

உந்தி தலைபத்தி ஈரல் முன்னளவும் பின்னளவும்
புண்ணு பொருக்காலே சுவாசந்தா னுண்டாம்
வந்து அறம்பூசிப்போல காய்ந்து மார்க்கமாய்
திண்டு முண்டாய் வருத்த மாகும்
இந்தவகை தன்னைக் குன்றி பகர்ந்தா னென்றே
உய்ப்புவாகல் அறியாதார் கணத்தின் பேதம்
கொந்துலவும் குழலும் வாயிதனையே ஆரய்ந்து கொண்டு
படனம் கொடுத்தார் குணமாமே(?) (125)

---

1. "அக்கரமே" என்னும் சொல் "தூக்காமே" என்று பிழைபட எழுதப்பட்டிருப்பதாகத் தெரிகிறது,

2. குன்றீரற் சுரமென்பது "கணச்சுரம்" என்று பாலவாகடத்தில் கூறப்பட்டிருக்கிறது. அதிலுள்ள செய்யுள் பின்வருமாறு :—

"உந்திதனைப்பற்றி யீரலளவும் புண்ணுய்
ஒருக்காலே சுவாசந்தானுண்டா மிக்க
வந்தசுரம் பூசிறைற்போலே காய்ந்து வருத்தமாய்
திட்டு முட்டாய் மயக்கங்காணும்
இந்தவகை கணக்காய்ச்சலென்றே நாளு
மியம்புவார் புவிமீது நூல்வல்லோர்கள்
சுந்தரியா ளுமைப்பாகன் முனிக்குச் சொன்ன
சூட்சுமமிது தானறிவீ ருண்மைதானே."

## [1]அக்ஷரக் குணம்

மூக்குநீர் பாய்ச்ச லாகும்
முகம் மிக வெளிறிப் போகும்
நாக்குமே வெளுத்து[2] மூக்கும்
நாவில் வாயாவி தோன்றும்
தூக்கமும் சுரமும்[3] அழுத்தும்
துணுக்கெனத் தண்ணீர் வாங்கும்
[4]தீர்க்கமாய் குண மிகுத்தால்
சிறந்த அக்ஷரமுமாமே. (126)

## குண்டி அக்ஷரம்

அக்ஷர குணமே கேளீர் அரைக்கு மேற் சுரங்கள் காணும்
[5]அக்ஷம் போலவெளரும் ரோகம் மஞ்சள் நீளச்சிறுநீர் [போகு
மெச்சவாயிற் சுரக்கெனும் இளைத்து உடம்பு கடுப்பாகும்
கொச்சைக் குரலும் கடுப்பெய்து குண்டி அக்ஷரக் [குணமாமே. (127)

## ஊது காமாலை

ஊதுகாமாலைக் குணமே கேளீர் ஊதிமுகமும் காலதைக்கும்
பாதிச்சாமம் பசிஎடுக்கும் பசித்தவுடனே மந்திக்கும்
சீதமும் சிறுத்துவயிறு விடும்சிந்தை மயக்க முண்டாகும்
[6]காதும் அடைத்து பயமாகும் காமாலை ஊது [குணமாமே. (128)

---

1. இது பாலவாகடத்தில் உள் அச்சரம் என்று குறிக்கப்பட்டுள்ளது. இதற்கு முன்பே 124-ம் பாட்டில் அச்சரம் (அக்ஷரம்) என்பது கூறப்பட்டிருப்பதால் இங்கு உள்ளச்சரம் என்றிருத்தல் தான் சரியென்று தோன்றுகிறது.

2. "பூக்கும் நாபி வாயாவி" (பாலவாகடம்).

3. "சுரமும் மெத்தத் துணுக்கென" (பாலவாகடம்).

4. "தீர்க்கவிக் குணங்கள் கண்டால் திகழுள்ளச்சரமுமாமே." (பாலவாகடம்).

5. "மச்சம்போல வெளுத்துடல்" (பாலவாகடம்).

6. "காது மடைக்குமிளைப்புண்டாங் காமாலை யூதற் குணமிதுவே." (பாலவாகடம்.)

## மஞ்சள் காமாலை

[1]குண்டியக்ஷர மிருந்தால் குளுப்
பையாய் காலம் அடங்கும்(?)
வெண்டி யெச்சீர்த்தவதும்(?)
வெதுப்பு மேல் விலாவில் தோன்றும்
மண்டையில் மலமுசிக்கி(?)
பசு மஞ்சள் சிறு நீராகும்
கண்டிடா கண் வெளுக்கும்
மஞ்சள் காமாலையாமே. (129)

## [2]கிரி நோய்

மஞ்சியினம் கலைதானும்(?) மருவிடும்பால் பாலாக
மிஞ்சியே வயிற்றிற் பூச்சி மேனியும் மலைத்து
[காட்டும்(?)
நெஞ்சோடு விலாவில் திட்டில் தெரிகெடப் பேசுமாகில்(?)
எஞ்சவே கிரிநோவென்று அறிவுள்ளோர் அறிந்து
[பாரே. (130)

---

1. "குண்டியக்கர மிருந்தால் குளுப்பையாய் முகங்கால் வீங்கும்
விண்டிட ரத்தம் வற்றும் வெதுப்புமேல் விலாவில் தோன்றும்
பண்டியின் மலமுஞ்சிக்கிப் பசுமஞ்சட் சிறு நீராகும்
கண்டியாய்க் கண்வெளுக்கு மஞ்சட் காமாலையாமே."

(பாலவாகடம்.)

2. கிரி என்பது ஒருவகை குடற் புழு. இவ்விஷயமான பாட்டு பாலவாகடத்தில் பின்வருமாறு :—

"மஞ்சடை மதலைதானு மருவிடும் பால்பாலாக
மிஞ்சியே வயிற்றிற்பூச்சி மேனியு மிளைத்துக் காட்டும்
நெஞ்சொடு விலாவிற்றட்டி நெறிகெட்டுப் பேசுமாகில்
அஞ்சவே கிரிநோயென்றறிந்து கொள்ளழகுமாதே."

## ஆமக்கழிச்சல்

உண்டால் எதிரெடுக்கும் உடல் பல முழக்கங் காட்டும்
சுண்டுமென முலைகள் சாலைசுரம் மிகுந்திருக்கும்மேனி[1]
கண்டுசேர் மொழியுந்தாழ்ந்து காலோடு கையும் நீத்து
விண்டிலாம மென்று விதித்தனர்[2] முனிவர்
[தாமே. (131)

## [3]ஐய சுரம்

மெய்யில் வந்த இளஞ் சுரந்தான்
விட்டு விட்டே வெதும்பி விக்கும்
கையும் வெதும்பும் கால் வெதும்பும்
கன்னங் காதில் கையை வைக்கு
முய்யு முழலை வந்தவரை
ஓடி கட்டிக் கொள்ளுமது
அய்யாவிழ யென்காணென்னும்(?)
அதிகமைய சுரந்தானே. (132)

---

1. “ சுண்டுமே ரத்தஞ் சாலச்சுரம் ” (பாலவாகடம்).

2. “ விளம்பினர் முனிவர் ” (பாலவாகடம்).

3. இங்கு ஐயசுரம் என்று கையெழுத்துப் பிரதியில் குறிக்கவில்லை. ஆனால் இச் செய்யுளிலுள்ள விஷயத்தையும் பாலவாகட பாடத்தையும் கவனித்ததில் இச் செய்யுள் ஐய சுரம் என்பதைப் பற்றியதே என்றறிந்து இத்தலையங்க மிட்டோம். இது பற்றிய பாலவாகடச் செய்யுள் பின் வருமாறு :—

“ மெய்யில் வந்தையைய சுரம்விட்டு விட்டேதான் வெதும்பிக்
கையுங் காலுமே வெதும்பிக் கன்னங்காயு நெஞ்சிடிக்கும்
உய்யு முழலை வாந்தியுண்டா மோடியோடிக் காட்டும்
தையம் பிழைப்பதரிது கண்டா யல்கமாகுஞ் சுரந்தானே.”

## ஆம சுரத்தின் குணம்

[1]ஆமசுரத்தின் குணம் கேளீ ரதிகமாகுமது பாதம்
சாமந்தோறும் வெதும்பிவிக்கும் தன்னைத்தான்
[உறங்கவைக்கும்
சேமமான உடம்புதனை செறுக்கப்பண்ணும் பசி இல்லை
நாமங்காயு முடம்போயும் நடுக்கி இறுத்தி மது
[வென்றே. (133)

[2]ஆமசுரத்தின் குணங்கேளீர்
அங்கேகால் குளு(ளிர்)க்து விடும்
சாமந்தோறும் எழுந்திருக்கும்
தாயின் முலைப்பால் அருந்தாது
தாமவா யோலைவிடும்(?) சோர்ந்து
கிடக்கும் வாய் அலத்தும்
காமனம்பின் கயற்கண்ணாய்
கனதலை மிக்குங் கண்டீரே. (134)

## மீளாதைய சுரம்

அய்யங்களிச்சல் தனைக்கேளீர்
அறவே பொருமி கண் வெளுக்கும்
கையும் காலும் சோர்ந்து விழும்
கண்ணு முழியும் உள்ளே விழும்

---

1. "ஆம சுரத்தின் குணங்கேளா யதிகமாக வெதும்பாது
சாமந்தோறும் வெதும்புவிக்குந் தண்ணீருமுலை யுண்டாக்கும்
சேமமாக வுடம்பிளைக்கும் சீறியழுதும் பசியில்லை
நாழங்காரி யுடலோயும் நடுங்கியிருக்குங் கண்டாயே."
(பாலவாகடம்.)

2. "ஆம சுரத்தின் மிகுகுணங் கேளடைவாய்க் கைகால் குளிர்ந்துவிடும்
சாமந்தோறு மெழுந்தலறும் தாயின் முலைப்பாலருந்தாது
தூமவாயி லெடுத்துவிடுஞ் சோராதிருமும் வாயாற்றும்
காமனம்பின் கயற்கண்ணாய் கண்தலை மிகநோய் கண்டாயே."
(பாலவாகடம்).

[1](தொய்யல் சுரமும் விடாததுவும்
சொல்லுந் தோஷ மாறுற்போல்)
மெய்யும் நாக்குமே வறண்டு
விக்க லெடுக்கும் மீளாதே[2]. (135)

## திஷ்டி தோஷம்

பாலது கழியும் தான்எதிர் எடுக்கும்
மாந்த வித்திடும் பலவிதமாய்
சாலக்கடுத்த னுடலெங்குஞ் சற்றே
சற்றே குளிரும் தலைகண் வலிக்கும்
மாலைகால மெனவே சுரம் கண்டிடு
சந்து கைகாலுடம்புமே கோமேனி முகமும்(?)
[3]கரிக்கிடுங் கோடிக்கன திஷ்டி
கொண்டிடும் காணுமே(?). (136)

---

1. "தொய்யல் சுரமும்" என்கிற மூன்றும் அடி கையெழுத்துப் பிரதியில் காணவில்லை. இவ்வரி பாலவாகடத்திலிருந்து இவ்வுரை யாசிரியரால் எடுத்துச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

2. இப்பாட்டின் ஆரம்பத்தில் "அய்யங்களிச்சல்" என்று இருப்பது பிசகென்று தோன்றுகிறது; ஏனெனில் மீளாத ஐயசுரத்தைப் பற்றியது இப்பாட்டு. பின்வரும் பாலவாகடப் பாடலையும் கவனிக்கவும்:—

"ஐய சுரத்தின் குணங்கேளா யகடு பொருமிக் கண்வெளுக்கும்
கையுங் காலுஞ் சோர்ந்துவிழும் கண்களுள்ளே தான்வீழும்
தொய்யல் சுரமும் விடாததுவும் சொல்லுந் தோடமாறுற்போல்
மெய்யு நாக்குமே வரண்டு விக்கலெடுக்கு மீளாதே."

(பாலவாகடம்).

3. நான்காம் அடியில் மோனைப் பிசகியிருப்பதாலே, வேறு பிழைகளும் காணப்படுவதால் இச்செய்யுளும் திஷ்டி தோஷ மென்னும் விஷயமும் சரியாய் அமையவில்லை யெனத் தோன்றுகிறது.

## கரப்பான் பதினெட்டு[1]

[2]செங்கரப்பான் மணல் கரப்பான்தானும்
மண்டைக் கரப்பான் பண்ணு மரிகரப்பான்
பொரி கரப்பான்அங்கமதி லெழு கரப்பான்
தானுமிக்க அளரா முதிரக்கரப்பான்
கட்டியோடு பொங்கமாய கரப்பானுந்தான்
புகவரிய சட்டைதடி வெடிகரப்பான்
சிங்கமுக மெரிகரப்பான் வாயுகரப்பான் பித்தகரப்பான்
சிலேத்தும கரப்பான் பதினெட்டாமே. (137)

எல்லாக் கிரந்தியெழும் வாதபித்தமுமாகு
பொல்லாத சேஷ்டுமத்தால் பொங்கிவிடும்—
[வில்லார்க்கும்
நீள் புருவத்தாளே நிறைந்து செய்யும் கரப்பான்
ஏழ் புவியோருக் கென்றியம்பு.[3] (138)

---

1. எட்டுப் பிரதியில் இரண்டாமுறை கற(ர)ப்பான் பதினெட்டுக்கும் (பதினெட்டு) என்கிற தலையங்கம் பாட்டின் முதலில் சேர்க்கப்பட்டிருப்பது பிசகு.

2. செங்கரப்பான் என்னும் பாட்டு எட்டுப் பிரதியில் மிக்க தாறுமாறாக எழுதப்பட்டிருக்கிறது ; பாலவாகட பாடத்தைக் கொண்டு இது ஒருவாறு சீர்த்திருத்தப்பட்டுள்ளது. மேலும் 18 வித கரப்பானென்று கூறியும் 13-வகை தான் இங்கு குறிக்கப்பட்டிருக்கின்றன,

3. "எல்லாக் கிரந்தி" என்னும் இச் செய்யுள் பாலவாகடத்தில் கரப்பான் நோயைச் சேராமல் கிரந்தி வகை என்னும் தலைப்பின் கீழ் கூறப்பட்டிருக்கிறது.

## வாத கரப்பான்

இயம்பு திமிர் காய்ச்சலியங் குவிக்குந் திரட்சி
தயங்கு கணங்களத்தொரு கரப்பானும்
வந்தூறுமாக் கணத்தில் வாதக்கரப்பானும்
செந்தாமரையாளே செப்பு.[1] (139)

## பித்தக் கரப்பான்

செப்புந்தலை நெறித்துச்சேரும் காய்ச்சல் தினவு
ஒப்ப சிவந்தெரிந்து உஷ்ணமும் தப்பாமல்
வாந்திவரும் நீர்சிவக்கும் வந்துமலம் சிக்கிவிடும்
சேர்ந்த பித்தம் செங்கரப்பான் தின்னும்[2]. (140)

## சிலேஷ்மக் கரப்பான்

முன்னம் சிலேஷ்மக் கரப்பான் செய்யும் நெஞ்சுகண்
மண்ணும் வாயில் கிரந்தி பற்றிவிடும்
எண்ணெறி மண்டை வலிக்கும் மணிப்புடைய
வாளத்திறங்கொண்ட வளிர்தான் கேளாய்.[3](?) (141)

---

1. மேலே மூலத்திலிருப்பது பாலவாகட பாடம். இச்சீர் வெண்பாவின், எட்டுப் பிரதியில் இருந்த பாடம் பிழை யுள்ளது. அது பின் வருமாறு :—

" இயம்பு திமிர் காய்ச்சலியங் குவிக்குந் திரட்சி
துயங்கு கணங்களத்தொரு கறப்பானும்
நய்யம்படவே வந்தூரங் கனத்தில் வாத கறப்பானுகும்
வன்னஞ் செந்தாமரையாளே செப்பு.

2. தின்ணம். (வேறு பாடம்).

3. சிலேத்தும கரப்பான் குறிகுணங்கள் பாலவாகடத்தில் வருமாறு :—

" இசைய நெஞ்சகளடைந்துள்ளே விரணமாகியே தலைவலித்திடும்
அசையும் வயதனில் வெந்துமே திரட்சியசகியே கடுகடுத்திடில்
விசையும் சேத்துமகரப்பானென சிகிச்சைமேவு செவ்வரி பரந்துநீள
வசை பொருந்தும் விழிகலைதிரண்ட முகவனிதையே
[யவுஷதங்கேளே. "

## தோஷக் கரப்பான்

கேளாய் குளிர்காய்ச்சல் கிளகுங்கண்டுங் களலை(?)
மூளாலி தனப்போல முயன்று நிற்கும்(?)
நாள்தோறும் பூதம் போல்வீங்கி வற்றும் புண்ணுகி
மூக்கில் அரிக்கும் மோதும் கரப்பான் தோஷ
[முற்று.[1] (142)

## ஊது கரப்பான்

ஓதக் கேளான்றேடி ஈரமற்று லிங்கம் யோனி
கதம் வந்திடும் பூசத் தண்ணி ஆரைமலைப் புண்
[கரைக்கும் பிரண்டைபோல
தடித்திருக்கும் உள்ளஞ்சிவந்து கன்னி உடம்பிலே
வெடித்திருக்கும் துள்ளியே நெருப்புபோல
[சுழன்றுமே
குண்டு நாவுகண்ண விழ
கோதைமாதே கரப்பானின் குணங்கள் தானே[2]. (143)

---

1. பாலவாகடத்தில் தோஷக்கரம்பான் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது :—

" உள்ளுமேலு ளிர் காய்ச்சலாகி யுடம்பெங்கும் புண்ணென
[வழன்றுவாய்
கள்ளுநாறி யுடல்தன்னிலே கழலைகண்டு பூதமென வீங்கியே
எள்ளின் மாமலரையொக்கும் மூக்கினலரித்து நின்றமூது மேங்கினல்
துள்ளுமான்கணின் சாயலாய் கொடிய தோஷமான கரப்பானிதே."

இந்த "கேளாய் குளிர்" என்னும் பாட்டு ஊதுகரப்பான் குறிகளைக் கூறுவதாக பாலவாகடத்தில் இருக்கிறது. அப்பாடம் வருமாறு :—

" கேளாய் குளிர்காய்க்சல் கேடாங் கருங்கழலை
மூளாவிதான்போல் முயன்று நிற்கும்—நாள்தோறும்
பூதம்போல் வீங்குவிக்கும் புண்ணுகி மூக்கலிக்கும்
ஊதுகரப்பான் தோஷ முற்று."

2. "ஓதக்கேளான்" என்னும் இச் செய்யுள் ஒழுங்கீனமாகவும், கருத்தறிய முடியாமலும் அமைந்திருக்கிறது. இச் செய்யுள் அல்லது இதைப்போன்ற செய்யுள் பாலவாகடத்தில் எங்கும் காணப்படவுமில்லை.

குறிப்பு :—ஏட்டுப் பிரதியில் ஓர் ஏடு தவறியிருப்பதால் இது முதல் விஷயத்தில் சில பாகம் (4 பாட்டுகள்) விடுபட்டுப் போயிருக்கின்றன. (மூலத்தில் 61-ம் ஏடு தவறியுள்ளது).

## முட்டைப்பான்

பஞ்சபூதம் நெஞ்சம் பரிவுடன் வெதுமாகில்(?)
மிஞ்சியே சுவாமிளை மிகக் கண்ணும் கோபம்
[கொள்ளும்(?)
பஞ்சனிவிலா இரண்டும் பரிவுடன் தாக்குமாகில்(?)
மிஞ்சியே முக்கி மூக்கில் மிகுத்த முட்டைப்
[பானுமே. (148)

## தானம் திருச்சன்னி

வேகமாய் சுரமுமுண்டாய் மேனியுமதைப்புக் காட்டும்
மாகமாய்(?) முலையுண்ணுது மூர்ச்சையாய் இருகண்
[சொருகும்
மாகமே(?) பசளைசாடி ஆறங்கைகால் குளிர்ந்து காணும்
தாகமே மிகவுண்டாகும் தானதிருச்சன்னி
[யாமே. (149)

## சந்நிபாத குணம்[1]

மாந்தகணம் போராமமொன்றாய் கூடி
வயிறு விடுகத்தானுப்பும் வாந்தி பண்ணும்
சேர்ந்த சுரங்கால் கையுங் குளிர்ந்து ரத்தம்
சீதமிகப் பரபரென்று வாயு தள்ளும்

---

1. இவ்விஷயம் பாலவாகடத்தில் தோஷ சந்நியின் குறி குணம் என்று குறிக்கப்பட்டுள்ளது. இதைப்பற்றிய செய்யுள் அதில் பின்வருமாறு காணப்படுகிறது :—

“ மாந்தகணம் போராம மொன்றாய்க்கூடி
வயிறுவிடுந் தானுப்பும் வாந்திபண்ணும்
சேர்ந்தசுரங் கால்கையுங் குளிர்ந்திரத்தம்
சீதமிகப் பற்றிநின்று வாயு தள்ளும்
போந்தக் கண் நாவெந்து புண்ணாய்த் தோஷமுற்றிப்
போகாமல் சந்நியாய் வலித்து வேர்க்கும்
சாந்தமுட னிதுதீர மாதமொன்று தப்பினல்
நோயாறுந் திங்கள் மூன்றே.”

புறந்தகண்ணுய்(?) வெந்துபுண்ணு தோஷம்பற்றி
[போகாமல்
சந்நியாய் வலித்து வேர்க்கும்
சாந்தமுட னிவை தீர மாதமொன்று தப்பினுல்
தோவாருத்திங்கள்(?) மூன்றே. (150)

## அபின்னியாத சுரம்[1]

ஆர்க்கும் காயும் நபஞதி(?)
சுரத்தை அறியக் கொள்
வேர்க்கும் வெதும்பும் கண்
சிவக்கும் வேண்டும் பலகாலும்
பார்க்கப் பயமாயிருக்கு தென்னும்
பலகாலும் கண்டங்கத்திரியழு(?)
மரிக்கும் வயிறு வருசிக்கு விக்கும்(?)
தெருவில் புறப்பட்டோடிடுமே. (151)

## வாத பித்த சிலேஷ்ம நிலை

மாங்கிஷசுரந் தன்னில் வாதமது பித்தந்தானும
தூங்கிய எலும்பில்யம் சுகபிரந்தி(?) தோன்றும்
[பின்னை(?)
சாங்கியமாக நின்று சரீரத்தை நோவு பண்ணும்
ஆங்கிதை சொல்லவொண்ணுது அனேகமா
[ரோகந்தானே. (152)

---

1. இது வடமொழியில் அபிந்யாஸஜ்வரம் எனப்படுகிறது. ஆனல் பாலவாகடத்திரட்டில் இது அன்பஞதி சுரம் என்கிற தலைப்பின் கீழ் குறிக்கப்படுகிறது ; அது வருமாறு :—

" ஆர்க்குங்காயு மன்பஞதி ஆனசுரத்தை யறியக்கேள்
வேர்க்கும் வெதும்பும் கண்சிவக்கும் வெந்நீர் வேண்டும் பலகாலும்
பார்க்கப் பயமாயிருக்குதெனப் பதறி அலறிக் கதறியழும்
சேர்க்க சிக்கிவிடுந் தெருவிற் புறப்பட்டோடிடுமே. "

## மாங்கிஷ சுரம்

அதிகமாய் சரீரமெல்லா மனல்போல சுரமுங்காயும்
சதிரமெல்லாங்[1] கடுகடுக்கும் தான்மூச்சு மெத்தவோடும்
உதிரம் போயுடல் வெளுத்து உருகியே கருகிமேனி
மதியுமே மயங்கி மூர்ச்சை மயிர்க்கூச்சு மாங்கிஷ
[வெப்பே. (153)

## ரத்த சுரம்

தாகமும் மூச்சுமொன்றாய் அதிவித முர்ச்சையாகும்
ஆகமே மதங் கொண்டாய் போலதுபோல மிகுந்து
[காணும்
முகமும் கவலை நோவுநுரை ரத்தசுரமிதன்றே[2]. (154)

## [3]செங்கிரந்திக்கு மருந்து

கோரோசனை நீரோடு கொடுக்கபின் கற்பூரவள்ளி
நீராடே புரைத்த தருந்த நிகரி குன்றுமணிச்
சாற்றால் வாரவகுத்த(?) முருக்கிலையின் சாறு மருந்து
[நன்று சடா(?)
மார்வேல் விழியாய் செம்முள்ளி மருநீர் போட்டு
[கொடுப்பாயே. (155)

---

1. "நடுக்குந்தானே". (பாலவாகடத்திரட்டு).

2. "தாகமும் மூச்சு" என்கிற இப்பாட்டில் ஒரு அடி இங்கு காண வில்லை. பாலவாகடத்திரட்டில் முழுப்பாட்டுமே பின்வருமாறு வேறு வகையில் அமைந்துள்ளது:—

" தாகமுங் கழிச்சலாகுந் தலையது சுற்றல் காணும்
வேகமாய்ச் சுரமுஞ்சற்றே விட்டு விட்டேகுங்காயும்
வாகுசேர் கண்ணுந்தாழ்ந்து வாயுடன் நாவுலர்ந்து
சோகமும் வயிற்றில் நோயும் சேர்ந்து கைகால் தண்ணீரே."

3. பல்வேறு சுரம் முதலியவற்றின் குறிகுணங்களைக் கூறிவரும் போது திடீரென்று செங்கிரந்திக்கு மருந்து முதலிய வேறு விஷயம் கூறப் படுவதற்குக் காரணம் யோசிக்க வேண்டியதே. மேலும் செங்கிரந்தியின் குறி குணம் முன்பு (36-ம் பக்கம்) கூறப்பட்டிருக்கிறது. இச் செய்யுளின் பாலவாகட பாடம் வருமாறு:—

" கோரோசனைதான் முலைப்பாலிற்கொடு கர்ப்பூர வள்ளியிலை
நேரோடுள்ளிதனை நறுக்கி நிகருங் குன்றுமணி யிலையின்
சாறுமருந்த முருங்கயிலைத் தன் சாறருந்தச் செங்கிரந்தி
தீரும் செம்முள்ளியினிலையைத் தினமு நீரிற் குளிப்பாட்டே."

## கருங்கிரந்திக்கு மருந்து

நெய்யுடனே விளக்கெண்ணெய் நல்லெண்ணெய் சமன் [கூட்டி
நீடும் சங்கிலைச்சாறு சமனய் விட்டு
[1]தீயாமற் கடுகுதான் நீரில் வார்த்துத் திரளுமளவில
வடித்தெரித்து இறக்கிக் கொண்டு
பையவொரு பணவிடை தானுட்கொண்டு பாங்குமே
லெங்குந் தான்தடவி வைத்துச்
செயுமுள்ளிக் கிரந்தி நாயகன் போட்டுத் தண்ணீர்
தினமும் குளிப்பாட்டிட திருமென்று. (156)

## வலிப்புக்கு மருந்து[2]

மூக்கறட்டைச் சாறு முடக்
கொத்தான் செப்பு நஞ்சி
முத்தெருக்கஞ் செவியுட
ஞேரிலைத் தாமரை தாமரையும்
அறக்கமுடன் நீருமுள்ளியில் இறகுங் கூட்டி
ஆமணக் கெண்ணெயில் எரித்து
உள்ளுக்கும் கொடுத்துப் புறம்பூந்தற்குடன் பூசியிட
அனந்த வலிப்பு நிற்கும் புவியுள்ளோருக்கே. (157)

---

1. "தீயாமல் முக்கடுகை நீரரைத்துத் தீதில்லா ரவியில் வடித்தே யெடுத்து மையவொரு பணவிடை தானுட் கொடுத்துப் பாங்குடனே மேலெங்கும்" என்று பாலவாகடத்திரட்டுப் பாடம். கருங்கிரந்தியின் குறி குணம்பற்றி 37-ம் பக்கம் பார்க்க.

2. கிரந்திக்கு மருந்து கூறியதும், வலிப்புக்கு மருந்து என்ன ஒழுங்கு முறையில் கூறப்படுகிறதென்பதும், இது வலிப்பு மாந்தத்திற்கா அல்லது வலிப்பு சன்னிக்கா (115-ம் பக்கம்) என்பதும் விளங்கவில்லை. கடைசி அடியில் "அனந்த வலிப்பு நிற்கும்" என்றிருப்பதைக் கொண்டு அனந்தவாதம் என்னும் தலைவலி நோய்க்கு இது மருந்தா யிருக்கலாமென்றும் ஊகிக்க வேண்டியிருக்கிறது.

## குளி தோஷத்திற்குப் பரிகாரம் (1)

*பச்சைப்பனை ஓலையிலேதான் படுசீராடுசெறென் றெழுதிக்*
*கொச்சே (?) கோழி பலியிட்டு குடநீர் சோர்ந்து*
*[தான்கட்ட*
*அச்சமில்லை குழியிட்டா ணுணநிலத்தின் விள்விலை*
*மெச்ச துவைத்துவைத்து நீருடனே விரவி*
*[குழயாட்டிட நன்றே. (158)*

## [1]குளி தோஷத்திற்குப் பரிகாரம் (2)

*பின்னந் தண்ணீர் காட்டாத்தி எழுந்த பருத்தி பயற்றம்*
*[வேருமே குளிசமது கட்டி*
*உன்னீர் சொரியப் புறமடைநீர் பெருங்கோழி*
*[கொடுத்துப் புறப்பாய்*
*சுத்திப் போட்டக்கால்*
*ஓம் விழமைக்கு மென்று(?) கையாகாஞர்*
*[சாற்றினரே. (159)*

---

1. இது பாலவாகடத்தில் குளிச தோஷப்பரிகாரமென்று கூறப்பட்டுள்ளது. ஆனல் பாலவாகடத்திலும் குளிதோஷமென்றே இருக்கிறது. பாலவாகடத்திலும், பாலவாகடத்திரட்டிலும் பாட்டு மாத்திரம் இங்கிருப்பதைவிட வேறு விதமாய் காணப்படுகிறது. அது வருமாறு:—

" ஓமந்தண்ணீர் காட்டாத்தி உயர்ந்த பருத்தி பயற்றம்வேர்
ஆமே குளிசமதுகட்டி அன்பாய்ச் சொறியும் பிறமடைநீர்
போமேகோழிப் பலிகொடுத்துப் புறமாய்ச்சுற்றிப் போட்டக்கால்
தாமே குழவி பிழைக்குமென்றுத் தையற்காஞர் சாற்றினரே."

(பாலவாகடத்திரட்டு.)

இங்குள்ள " பின்னந் தண்ணீர் " என்னும் பாட்டு முற்றிலும் பிழையுள்ளதாகவும் ஒரு அடி குறைந்ததாகவும் காணப்படுகிறது.

(குளி தோஷ பரிகாரம் 3)

[1]வேலமரத்திருப்பு கூட்டிட னய்யர்கனூல் சுத்தி விளங்க
வரிந்திரம் பூசி தூபதீபங்காட்ட கோழி பலிகொடுத்து
தலைசுற்றி பாங்கிற்போட்டு மேலெங்கும் குழாவிளாவியை
[யாதல் இல்லை
இலை யாகுந்தலைக் குளிப்பாட்டிடுமே. (160)

[2]வரட்புள்ளுக்கு(ப் பரிகாரம்)

செம்புத் தகடுதனில் பக்ஷிராச வழுத பக்ஷிகள்(?)
தப்பா தெழுதநீர் மந்திரிச்சுச் சொரிந்துதான் கட்டிப்
பார்கோலி பலியிட்டவன் ரத்தம் நெற்றியிலே திலகமிட
துப்பார் மேனியருக்குச் சோறுபுளுக்குந் தப்பா
[தென்றேம்(?). (161)

---

1. "வேல் மரத்திருபு" என்கிற பாட்டும் இங்கே அரை குறையாகவும் பிழையுள்ளதாகவும் காணப்படுகிறது. இதன் பாடம் பாலவாகடத்திரட்டில் பின்வருமாறு :—

"வேலமரப் புழுக்கூட்டில் கன்னிநூல்
சுற்றி விளங்குமஞ்சள் அதுபூசித் தூபங்காட்டி
சாலவுமே முக்குளநீர் மந்திரித்துத் தலைமீதே
சொரிக நீள ஆலம் வீழ்தைப்
பாலனுக்குக் குளிசங்கட்டிக் கோழிப்பலிக்
கொடுத்துத் தலைச்சுற்றி அப்பால்போட்டு
மேலுக்கு நிலவிளா ஆதல்வில்வ இலையதல்
போட்டுக் குளிப்பாட்டல் நன்றே."

2. வரட்புள் தோஷக் குறிகளைப்பற்றி 99-ம் பக்கம் பார்க்க.

## [1] நீர்ப்புள்ளுக்குப் (பரிகாரம்)

பச்சொந்திநீர் ரீங்காரம் வரைந்து பாங்கு பெற
மஞ்சள் நூலாலே சுற்ற
அச்சமறப்புற மடைநீர்தான் சொரிந்து அழகான
செஞ்சேவல் பலி கொடுத்து
ரகசியமாய் யந்திரம் கட்டத் தீரும் நிகரான மருந்து
தனை நிகழ்த்துங் காலே
வெச்செனவே விஷ்ணுக்கிரந்தி சீர்குடி நீர்விடி
வேறே(?) குடித்துவிட வியாதி போமே. (162)

## [2] தூங்கும் புள்ளுக்குப் (பரிகாரம்)

வௌவால் சிறகு லனிலூமத்தை(?)
யறுகம் வேரதைச் சுருட்டிச்
(செவ்வாய்க்) கன்னிப்பெண் நூற்ற
நூலால் சிறகுதனில் சுற்றிக்
(கவ்வாய்ப்) புனலுஞ் சொரிந்து குளிசம்
கட்டிக் கோழிப் பலி கொடுத்து
[3]நகூவி விழியாயி முண்டா(?)
குவளை வேறுரைத் தருந்தே. (163)

---

1. நீர்ப்புள் தோஷத்தின் குறி குணம் பற்றி 14-ம் பக்கம் பார்க்க. இதனடியிலுள்ள "பச்சோந்தி" என்னும் பாட்டைப்பற்றிய பாலவாகடத் திரட்டுப் பாடம் பின்வருமாறு :—

"பச்சோந்தி தன்னை ஸ்ரீங்காரஞ் சொல்லிப்
பாங்குடனே பிடித்து வந்து மஞ்சள்நூல் சுற்றி
அச்சமற புறமடைநீர் எழுதாஞ்
சொரிந்தழகான செஞ்சேவல் பலி கொடுத்து
நிச்சயமாய் இயந்திரம் கட்டத் தீரும்
நிகரான மருந்ததனை நிகழ்த்துங் காலே
வெச்சென விஷ்ணுக்கிராந்தி சீரங்கூட்டி
வேறே நீர்க் கொடுத்திடவே வியாதி போமே."

2. தூங்குபுள் தோஷக் குறிகள் பற்றி 14-ம் பக்கம் பார்க்க.

3. "நவ்வி விழியாய்க் கூவிளவேர் நன்ருய் அரைத்துப் புகட்டுகவே." (பாலவாகடத் திரட்டுப் பாடம்.)

## நீர்க்கணத்திற்குப் [1]பரிகாரம்

நாயுருவி யரிசி நெரிஞ்சிக்காய் நெய்க் கொண்டான்
கனியோ டருள்ளி நறுக்கி முலைப்பாலிற்
செயினிக்குக் கோழை யறவடுகவே கொடுத்திந்த
நெய்ப் பண்ண விசரம் செப்புங் காலை
பாய்கண்டங் கத்திரி தூதுவளை இத்திருங்கலை யுழத்
திரிகடுகு திருபலை இருசீர மிண்டங் கொழுந்து
நேயமுடன் போட்டெரித்து பத்ததில் வடித்து கூட்டி
[முள்ளி
வேரசை வள்ளிக்கொடி நித்தமொரு காசிடை
[கொள்ளில் நீங்கிடும் பின்னையே. (164)

## வரட்கணத்திற்குப் (பரிகாரம்)

முள்ளிவேர் செவ்வள்ளிக்கொடி தண்ணீர் முட்டான்
முசுமுசுக்கை தூதுவளை கண்டங்கத்திரி வேரும்
திள்ளுங்கமலிப் பிசின் கருஞ்சீரகம் திருந்து(?)
மணித்தக்காளி திருகுகள்ளி வேகம்(?)
வெள்ளுள்ளி வசம்பினோடொவ்
வொன்று இரண்டு வராகனிடை
[2]விளக்கெண்ணெய் இதற்சமனாய் விட்டுக்கொண்டு
உள்ளுக்குக் கொடுத்துப் பின் மேலும்பூச ஓடியலை
[புக்கும் வரட்கணமுந்தானே. (165)

---

1. நீர்க்கணக் குறி குணம் பற்றி 18-ம் பக்கம் பார்க்க. நீர்க்கணத்திற்குப் பரிகாரமுறை பாலவாகடத்திரட்டில் பின்வருமாறு :—

"அருளினூர் அமுதமெனும் குளிகைதானு
மதிமதுரம் செண்பகப்பூ ஏலமோடு
திருவு கோரோசனையுஞ் சாத்திரபேதி
சிறந்த வெட்டிவேர் கொஷ்டம் மாசிப்பச்சை
திருவெனவே விளாமிச்ச வேருங் கூட்டிச்
சரியாக ஆதண்டைச் சாறு கூட்டிப்
பருவமதா யொருசாம மரைத்துக் குன்றிப்
பருமனாய் முலைப்பாலிற் பருகிடரே".

2. "விளக்கெண்ணெய் இதற்குச் சமனாய் விட்டுத்தான் கொண்டு எரித்து உள்ளும் கொடுத்து மேல் தடவே". என்று எட்டுப் பிரதியிலுள்ள பாடம் இங்கே பாலவாகடத் திரட்டின்படி திருத்தி யெழுதப்பட்டுள்ளது.

## மூலக் கணம் (பரிகாரம்)

[1]மணம்பாசி சமூலம் வெள்ளாட்டுப்பாலில் பாங்குடனே
நேயாமல் துளாவி காய்ச்சிக்குழைத்து ஒன்றாய் காய்ந்த
தண்ணீர் இறக்கிக்கொண்டும் ஓர் எலுமிச்சம்பழம் பிழிந்து
குழம்பானபின் தயிரை கொடுக்கும்போது நற்சீரகம்
[மேல் அதிமதுர மகிழ்ந்தே. (166)

பெருமரத்துப் பட்டைதனை வெள்ளாட்டுத் தயிரில்
[2]அரைத்துக் கொடுக்கத் தீரும்
(திரு)வான பசுவின்பாலிற் பருத்திப்பிஞ்சும் சீரகமும்
அரைத்துமே கொடுக்கத் தீரும்
[3]பரிசிரந்தனில் நற்சீரகம் நெய்கூட்டி
வாங்கத் தீரும் அதுதானன்றி
பெருமோதியம் பட்டை பாலிலே பிறங்கி
மாதளம் பிஞ்சு தயிரோடேயே. (167)

---

1. இந்தப் பாட்டு பெரும்பாலும் இங்கு பிழை யுள்ளதாகக் காணப் படுகிறது. பாலவாகடத் திரட்டிலுள்ளபடி இதற்குப் பின் வருமாறு பாடம் :—

"பழம்பாசி சமூலமுடன் வெள்ளாட்டுப்பால்
பாங்குடனே நன்றாகப் போட்டுக் காய்ச்சிச்
செழும்பாக வெந்தபின்பு கோது நீக்கித்
தேசியெனும் பழச்சாற்றைக் கூடவிட்டுக்
குழம்பாக விழுந்தயிரைக் குடிக்கும்போது
குணமாகு மூலகணங் கோதை கேளாய்
அழங்கு கருவேல்பட்டை தண்ணீரோடே
அதிமதுரஞ் சீரகமு மேலங்கூட்டே."

மூல கணத்தின் குறி குணம் பற்றி 28-ம் பக்கம் பார்க்க.

2. "பிறகரைத்துமே யதனைக் கொடுக்க." (பாலவாகடம்).

3. "பரிவான சாறதனிற் சீரகமும் கூட்டிப் பண்புடனே தீரும் பின்னர்" (பாலவாகடம்).

## [1]குண்டியக்கரத்துக்கு (மருந்து)

[2]சுண்டிவே ரணலும் ஈச்சங்காய் அளவு அரைத்து
கலங்காயின் வெண்ணெய் கட்டியும் அருந்தத் தீரும்
கொண்ட கருசிலாங்கண்ணியே பாக்களவு அரைத்துக்
கூறுதல் சீதமுடன் அருந்த தீரும்
வண்ட லங்கருங்குழலாய் பச்சை அரிசிச் சோறும்
வயங்காலின் பாலும் பத்தியங் கூடலாமே
[3](குண்டியக்கரமான வியாதி விட்டுக்
குடிபோகுமென்று சிவன் கூறினரே.) (168)

## கணைத்திற்கு எண்ணெய்

[4]நாயுருவிச்சாறுழக்குக் கரிசலாங்கண்ணி யுழக்கு
வல்லாரைச்சாறு ழக்கு சீதமுடன் அருந்தத் தீரும்
வண்டரும் பூங்குழலாய் காய்கவதும்பை
கண்டங்காரி நொச்சியுடக் குத்துலங்கவும்

---

1. "குண்டிய காத்துக்கு" என்று எட்டுப் பிரதியில் உள்ளது சரியில்லை. அது "குண்டியக் கரத்துக்கு மருந்து" என்று பாலவாகடத் திரட்டின்படி திருத்தப்பட்டது.

2. "சுண்டைவேர் நிம்பக்காயள வரைத்துத்
துலங்கானின் வெண்ணெயுடன் அருந்தத் தீரும்
கொண்ட கரிப்பா னரைப்பாக்களவரைத்துக்
குறுகவே சீரமுட னருந்தத் தீரும்
வண்டணியுங் குழலாய்ப் பச்சரிசிச் சோறும்
வயங்காவின் பாலும் பத்தியமாய்க் கூட்டக்
குண்டியக் கரமான வியாதி விட்டு
குடிபோகுமென்று சிவன் கூறினரே."

3. இப்பாட்டின் இந்த 4-ம் அடி எட்டுப் பிரதியில் இல்லை; பாலவாகடத்திரட்டிலிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்டது.

4. இப்பாட்டில் கடைசி யடியின் ஒரு பகுதியைத் தவிர மற்றவையெல்லாம் பாலவாகடத்தில் வேறு விதமாயிருப்பதைப் பின்வருமாறு பாட்டில் பார்க்கலாம்:—

"நாயுருவிச் சாறுடனே கரிசிலாங் கண்ணி
நல்லதொரு வல்லாரைச் சாறுடனே இன்னம்
தூய கவிழ்தும்பை கண்டங்கரிய நொச்சில்
சோற் சாறுழக்கு வகை எண்ணெய் படி யொன்று
பாயும் வெள்ளுள்ளி திரிகடுகு திரிபலையும்
பாசபல மிலவங்கம் வசம்பிரு வராகன்
ஆய்பதக்கு நீர்வற்றக் கடுகுமது சிவந்தால்
ஆமெட்டுக் கணைகளையு மடக்கு மிதுதானே."

ஆமணக் கெண்ணெய் ஒருபடிதான் கூட்டி பாயும்
வெள்ளுள்ளி திருகடுகு திருபலை இலவங்கு வசம்பு
இவை ஒவ்வொன்று இரண்டு வராகந்தான்
ஆய்பதக்குநீர் வற்றிக்கடுகுஞ் சிவந்ததுவேயாம்
எட்டு கணங்களையும் அடக்குமிதுதானே. (169)

## அந்தகன் கணம் (இதற்குப் பரிகாரம்)

[1]பொன்னுங்காண்ணி சிறுகீரை
மூலா விலை வேருடனே
பன்னுங் கடுக்காய் தேற்றுங் கொட்டையு
மொன்றாக மயங்க கரைத்து
மன்னுவின் வெண்ணெயும்
பிறட்டிப் பிறங்க(?) வருந்தவனுடனே
மின்னுர் முலைப்பால் கலந்
தொக்கவும் சிருசிறப்பு வதே(?). (170)

[2]தப்பூமரு உலர்ந்தவுடன் தள்ளிப் பின்னுந் தப்புவிக்க
செப்பும் மருந்துதன்னை தினமும் தின்ன
[பார்த்துதான்கொடுக்க
கொப்புகுழலாய் இப்படியே கொடுக்க மூன்றுதினந்தானும்
தப்புவிதியானுந் திரும்பும் தயவே என்னைச்
[சாற்றினரே. (171)

---

1. "பொன்னுங்காணி சிறுகீரை பூலாஅவுரி வேருடனே
பன்னும் தேற்றான் கடுக்காயும் பலமோரொன்றாய்த் தானரைத்துப்
பொன்னே ஆவின் வெண்ணெயுடன் புரட்டியருந்த அதனுடனே
மின்னுர் முலைப்பால் கலந்தொக்க வீறு சிரத்தில் தப்புவதே."
(பாலவாகடத்திரட்டு.)

அந்தக கணத்தின் குறி குணம் பற்றி 115-ம் பக்கம் பார்க்க.

2. "தப்பு மருந்து உலர்ந்தவுடன்" (பாலவாகட பாடம்).

## சீதக் கணம் (பரிகாரம்)

சீராங்காய்ச்சொல் இலவங்கம்
சாதிக்காயும் சிவந்த
காசுகட்டியுடன் இலவம்
பிசினும் சாறுமிவை சமனுகவே
திறைத்து(?) சட்டியிலே
இளவறலாய் வறுத்துக் கொண்டு
சேரெண்ணெயுடன் கலந்து அருந்த தீரும்
நேரிழையே என்னவர் நிகழ்த்தினரே. (172)

## மகா கணம் (பரிகாரம்)

நீர்முள்ளி ஈருள்ளி திரிபலேயும் சமனுய் நிறுத்துமே
பசுவின் மோரில் கிஷாயம்பண்ணி எட்டொன்ருய்
காய்ச்சி இறக்கிக்கொண்டு அதைஇருப்பு மொந்தையிலே
வார்த்துக்கொண்டு சீராக ஒரு சங்கு
இரண்டு சங்கு தினங்கொடுக்க தீராத கணமுந் தீரும்
திருந்தலருங் குழல்மடவாய் மருந்திஞேடு(?)
சங்கம் விரை யொக்கச்
சாரித்துக் கொள்ளே(?). (173)

## கணம்[1]

போக்கியே கணமும்தீராமல் பொங்கியே கடுப்புக்கண்டால்
தாயாமணக்கின் எண்ணெய்தனில் நிம்பச்சாறு விட்டு
நீக்கிய வெந்தயத்தை நிறைந்தனிலே போட்டு
சீக்கரமாகப் பண்ணி செலுத்திமச் சிறுக
[வென்றே.[2] (174)

என்றுநீ பருத்திவித்தும் இயலும் சாதிக்காய் கூட்டி
நன்று நன்ஞரிவேரும் நல்வட்டத்திருப்பி யன்றி
குன்று சீரகம் கிராம்பு குருகு புள்ளடிச் சாரேடு
ஒன்று நீ வறுத்துத் தாக்கே உகந்திட கடுப்புப்
[போமே; (175)

1. கணத்திற்கு வேருேர் எண்ணெய் முன்பே (143-ம் பக்கம்) கூறப்பட்டிருக்கிறது.

2. இச் செய்யுள் ஒழுங்காய் அமையவில்லை; சில பிழைகளும் உள்ளன.

கடுகுஞ் சீரகமும் கடுகுரோகிணி விடுவமல்லிகை
[மிதுபாலையோடு(?)
முலைப்பாலுடன் நீருள்ளி சிலைங்
கொடு விளக்கெண்ணெய் தனற்கூறும்
[கணங்களே[1](?) (176)

## (கணத்திற்குக்) கிஷாயம்

காலமே இந்த எண்ணெய்க் கடுகிய நீருட்டு தந்திட்டு
சீலமேத்த துளசிபோன்று சேமமுள்ளி மணித்தக்காளி
கோலமே ஞானபத்திரிக்குஞ் சங்குந் திப்பிலி
சாலவே ஆலப்புல்லூரி தானிடக் கணங்கள்
[போமே. (177)

## சுழி கணம் (இதற்குப் பரிகாரம்)

முலைப்பால் கடுக்காய் காட்டு
மல்லி முதிர்ந்த ஆலின் புல்லுருவி
இலைப்பா லிரண்டு ஈருள்ளி இவை
யாமணக் கெண்ணெயுடன்
[2]தலைப்பா லேற்றி எரிந்தணச்
சொன்னபடியே கொடுத்திடவே
[3]குலைப்பாய் வந்தச் சுழிகணமும்
குறுகியோடி விடுமே. (178)

சிறு புள்ளடியும் கழல்கொழுந்தும்
சிறந்த அவுரி சாணக்கி
நறுமென பொடுதலையோர் பிடியும்
நய்யுதலைக்கு நல்லெண்ணெய்
நீர் முன்னிறையாய்(?) கதிரோன்
நேரே வைத்து நீரருந்த
நருமெனங் குழலாய் மேல்பூச
நாதன் அருளால் கணந்திரும். (179)

1. இச் செய்யுளும் முழுப் பிழையுள்ளதாகக் காணப்படுகிறது.

2. "துலைப்பால் கருக்கி யெரித்தனே" (பாலவாகட பாடம்.)

3. "சொலிப்பாய் வந்த சுழிகணங்கள் சொல்லாதோடிப் போய் விடுமே." (பாலவாகடம்)

கடுக்காய் காட்டு மல்லிகையும் கடியகுமரி வெந்தியமும்
ஈருள்ளி [1]ஆமணக்கெண்ணெய் முடுக்காயாமணக்
கெண்ணெயுடன் இதனை எரித்து உள்கொடுக்க
மடுக்க மாந்தமும் சுழிகணமும் பாரிலே ஓடிப்
[பறந்திடுமே. (180)

## கணத்திற்கு நெய்

கோஷ்டம் நல்லெண்ணெய் பசுவின் நெய் குறித்த
[செண்பகப்பூ கெந்தகம்
நீட்டிய அவாறிதுயிலிலகு மிளகு கடுகுரோகிணி
[2](நாட்டிலாமிச்சை மிக்க நலந்தரு கிராம்பு பாகம்)
ஈட்டியே சாறுகொண்டு எரித்து இறக்க கணம்
[போமே.[3] (181)

## [4]கணம் எட்டுக்கும் (பரிகாரம்)

சங்குடன் செருப்படை துளசி துறப் பூலாவுந்
தருகளச்சி நரிப்பயற்றின் வேர்
அங்கதொரு படியதனிற் கோவையப்பன்
பயடா(?) நெரிஞ்சி தூதுவளைவேர் கிராம்பு

---

1. "ஆமணக் கெண்ணெயுடன் முருகாதெரித்துக் கொடுப்பீரேல் துடுக்காய் வந்த சுழிகணந்தான் சொல்லாதோடிப் போய்விடுமே." (பாலவாகடம்).

2. (நாட்டிலாமிச்சை மிக்க நலந்தரு கிராம்பு பாகம்) என்பது பாலவாகடத் திரட்டிலிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்டது.

3. பாலவாகடத்தில் இப்பாட்டு பின்வருமாறு காணப்படுகிறது :—
" கோஷ்டம் நல்லெண்ணெய் நெய்யுங் குறித்த சண்பகப் பூ கந்தம்
நீட்டிய அவுரிதுய்ய திலக்குமிழ் கடுகுரோணி
நட்டிலாமிச்சை மிக்க நலந்தரு கிராம்பு பாகம்
ஈட்டியே சாறுகொண்டு எரித்துண்ணக் கணம் போமின்னே."

4. வாத கணம், பித்த கணம், சிலேஷ்ம கணம், மாந்த கணம், நீர்க் கணம், பிரளிக்கணம், சூலிகணம், சுழிகணம், மகாகணம், ஊதுகணம், வறட்கணம், கொதிப்புகணம், வீக்ககணம், பிறக்கணம், அந்தககணம், மந்தாரக்கணம், எரிகணம், நீராமகணம், ஆமகணம், முக்குகணம், மூலகணம், பேராமகணம், சிங்கிகணம், இரத்தகணம் என்று கணநோய்கள் 24 உண்டு. இவற்றுள் எந்த எட்டு கணங்களுக்கு இந்த மருந்தென்று பாட்டில் குறிப்பொன்றுமில்லை. இவ்விவரம் பாலவாகடத்திரட்டில் கணவகுப்பு (பாட்டு 353, 354) பார்க்கவும்.

இங்கு திப்பிலி சாதிக்காய் பூரலியல்
வசம்பு உள்ளி கடுக்காய் தேக்கு
துங்க நெய்தான் படியில் எரித்தருதைப்பூ
சொல்லிய கணமும் சுரமும் போமே. (182)

## [1]வரட் கணத்திற்கு(ப் பரிகாரம்)

நய நவநீதந் துஞ்சு கறுத்து ரேசனஞ் சேர
செய்யுந் தலைக்குந்த சொல்லுமே தொயடு
வய்ய வரட்கணமே தீரும் கடுவிடமார்
கணங்கே இக்கணமே செய்வாய் இது. (183)

காரைநாக நிறச்சாறும் கரும்புநீர் பஞ்சதாரை
ஒரொரு வகைக்குநாழி உடனுடன் நாழிப்பால்
சேரவே விட்டுப்பாகா யிதிரவில் நெய்விட்டுச்
சாறுநா ளெட்டுக்கொள்ள சகல கணந் தவிழ்க்குந்
[தானே. (184)

## ரத்தக் கடுப்புக்கு (மருந்து)

வெந்தயம் [2]மோராமலமதைத்தா படி யாவின் பாலின்
வெந்திறக்கி மனமையதால் வெல்லங் கூட்டி
கந்தமலர்ப் பூங்குழலால் பசுவின் நெய்யால்
கருகாமல் கும்பாமல் களியாய்க் கிண்டி
உந்திடு வயிற்றரி கடுப்போடு உதிரந்தானு
மோடுமடி புறப்பட்டதுள்ளே (வாங்கும்)
[3]அந்திவிஷம் திரும்போது கொள்வீராகில் அதிசார வகை
யணைத்து யணத்தும் அகலுந் தானே. (185)

---

1. வரட்கணத்திற்கு முன்பே பரிகாரமொன்று (பக்கம் 141) கூறப் பட்டுள்ளது. இது மற்றொரு முறை இங்குள்ள "நய நவநீதம்" என்னும் பாட்டு அரைகுறையாகவும் பிழையுள்ளதாகவும் காணப்படுகிறது.

2. "வெந்தியமோர் பலமதைத்தான் படியாவின் பால்" (பாலவாகடத் திரட்டு).

3. "அந்தி சந்தி இருபோதுட் கொள்வீரானல்" (பாலவாகடத் திரட்டு).

## மாந்த கணத்திற்கு (மருந்து)

வேலிப் பருத்தி மூலமுடனே
வெள்ளைச் சாரணை குட்டி விளா
[1]மூலி வெண்வேலால் வசம்பும்
ஊதிய வெள்ளை வெங்காயம்
[2]கோலி நறுக்கி தீச்சாறு மெதி
கொடுத்த வெண்ணெய்தனி லெரித்து
சிலைமுலைப் பாலதனில் கொடுக்க
கொந்தி மாருத கணம் போமே.[3] (186)

## போர் மாந்தத்திற்கு எண்ணெய்

செந்த பழம்பாசியோடு முசுமுசுக்கை வேரும் சிறுபுள்ளடி
செப்பு நெரிஞ்சி சித்தாமணக் கெண்ணெய்
எந்த வசம்புள்ளி யிதமருப்பொடி
பிணி யதனை இயம்பக் கேளாய்
மாந்தமோடு கணமிவை போராமம் விட்டுவயிறு
கழிச்சலும் தீரும் வாகடமா மிதுவே
ஓர்ந்துணர்ந்து பொதியமலை குருமுனி வந்தானும்
உலகறிய மருள்சித்த ருரைத்தார் பரிசித்துமே. (187)

மறுநாள் மூலமீருள்ளி சமனுச் செத்தி
வாணமா யேரண்ட மதனிற்பாதி
சிறவிது அடுப்பேற்றிற்றும் போது
சிறப்பான சாதிக்காய் சாதிபத்திரி
திறக்க வித்துப்போட்டு இறக்கி வைத்துக்கொண்டு
சிறப்பாகக் கரண்டி எண்ணெய் கொள்ள
பறக்கும்நோய் மாந்தகணம் வயிறுப்பல்
சுரம் அஸ்திசுரம் பறக்கும் பாரே. (188)

---

1. "மூலி வேளை வேர் வசம்பு முதிய வெள்ளை" (பாலவாகடம்).

2. "கோலி நறுக்கிச் சாற்மேதி கொடுத்து." (பாலவாகடம்).

3. மாந்த கணத்திற்கு இது 7-வது மருந்து, (67-ம் பக்கம் பார்க்க).

காட்டு மல்லிகை ஈருள்ளி
கரிய சீரகம் கடுக்காயும்
நாட்டுக் கடுகுரோகணியும் நல்ல
சிரப்பால் விளக்கெண்ணெய்
கூட்டி எரித்து பாலகருக்குக்
கொடுக்க மாந்தம் போர்மாந்தம்
[1]ஓட்டி விடுங்காண் ஒன்றுதலை
உலகோருக் கெல்லா முரையீரே. (189)

## வலிப்பிற்கு மருந்து

மூக்கரட்டை சாரணை முடக்கொத்தான்
முத்தேக்கஞ் செவிசெப்பு நெரிஞ்சுவேர் ஓரிலைத்
[தாமரையில் இறகு
சித்தாமணக் கெண்ணெயில் எரித்து உள்ளுங் கொடுத்து
தாக்குடனே மேனும் பூசத் தயங்கி வலிப்புத்
[தீரும். (190)

## [2]பொர மாந்தத்திற்கு (மருந்து)

ஆமணக் கெண்ணெய் அளந்து குருணி விட்டு
தாமணிக் குழலேதான் வெய்யிலில்
ஓமமுடன் சாதிக்காய் சாதிபத்திரிதான் வசம்பு
[கொத்தமல்லி
கோதில்லா வெள்ளுள்ளி கூட்டு. (191)

பஞ்ச திரவியமும் பண்பான திப்பிலியும்
மிஞ்சா வராகனிடை இரண்டாய்
பஞ்சாதம் அரைத்துக் கரைத்து
மெருகான பதம்பார்த்து உரைத்தபடி இறுதுக்
[கொள்ளே. (192)

---

1. "ஓட்டி விடுங்காண் இந்தெண்ணெய் உலகோர்க்குண்டு செய்து கொடே." (பாலவாகடத்திரட்டு). (இந்நோயின் குறி குணம் முதலியதை 56, 70-ம் பக்கங்களிற் பார்க்க).

2. பொரமாந்தத்திற்கு இது 8-ம் பரிகாரமுறை. (மேலே யுள்ள குறிப்பைப் பார்க்க).

உள்ளேதான் கொள்ளக் கொடுசீர் கரண்டி எண்ணெய்
விள்ளாத சீதம் விடுவிக்கும்
மெள்ளப் போம் அஸ்திசுரம் போம்
இதற்கு நல்லசீரான பத்தியமே செய். (193)

## [1]பொர மாந்தத்திற்கு (மருந்து)

வேலிப் பருத்திவேர் கோழியவரை
வேருங் கிளுவை யொடு
பாலிற் பெரிய இலைக்
கள்ளிப் பச்சை
வெளிச்சை வசம்புள்ளி கடுகுரோகணியும்
சிராருள்ளி கருஞ்சீரகம்
ஏலங் குழலே நிறைகழிஞ்சி
மிதமாய்க் கூட்டிக் கொள்வீரே. (194)

நிலச் சித்தாமணக் கெண்ணெய்
நிகரின வெள்ளாட்டுப் பால்
சால வெரித்து முலைக்
காம்பில் சற்றே தடவி
முலைகொடுக்க ஆலித் துண்ணும் பிள்ளை
தன்காமம் வாராதன்றியாமே(?)
சூலுக் கெண்ணெய் கொடுத்தாலும்
தோணுக் காமம் தோணுதே. (195)

## [2]செரியா மாந்தத்திற்கு (மருந்து)

வேலிப்பருத்தி யிலைச்சாறு வாட்டிப்
பிழிஞ்சு மிளகு வசம்புள்ளி
காலக் கரைத்து நெய்துளி
விட்டே தானருந்த குணமாகும்

---

1. பொரமாந்தத்திற்கு இது 9-ம் பரிகார முறை.

2. செரியா மாந்த நோயின் குறிகுணம் பற்றி இதற்கு முன் 110-ம் பக்கம்) பார்க்க.

மேலு மெருமை வெண்ணெயுடன்
இசைந்த மருந்தினுடன் இஞ்சி
(கோலங்கேளும்) பெரும தும்பை
[1]கூட்டி எரித்திடினும் குணமாமே. (196)

## [2]கட்டு மாந்தத்திற்கு

[3]அடவநீர்திருடி மலைவற்காலி பாலவை கொண்டும்
ஒவ்வொன்ரூர் உலகு அளந்து கொண்டு
திடமுடன் ஆமணக்கெண்ணெய் நாழிகூட்டி திருபலை
வெள்ளுள்ளி இவைஇரண்டு வராகனிடை
பொடிசெய்து பொட்டாங் கெண்ணெய்
தன்னை எரித்துள்ளுங் கொர
காசிடைமேல் விலாவிற்பூசில் தடமுடைய
கட்டுமாந்தங் கண
பேதங்கள் சேராதென்று கரத்தான்
சாற்றிய சத்தியமே. (197)

## [4]பொரமாந்தத்திற்கு (மருந்து.)

எட்ட விமோதண்டத் தயிலமாதே இவை ஒவ்வொன்றும்
ஒரு படியால் பால் நாழி
மட்டவிழும் நொச்சி இலைச்சாறு நாழிவயங்
கோஷ்டம் சுக்குமிளகு திப்பிலி

---

1. "கூட்டி யருந்திடினுங் குணமாமே". (பாலவாகட பாடம்).
2. கட்டு மாந்தத்திற்கு இது 8 வது பரிகார முறை.
3. "அடவியினில் திருடி மலைவர்க்காலிப்பால்
அவை யொவ்வொன்ரூ ருழக்களந்து கொண்டு
திடமுட னமணக்கெண்ணெய் நாழி கூட்டித்
திருபலை வெள்ளுள்ளி விராகனெடை யிரண்டு
பொடிசெய்து போட்டெண்ணெய்தனை யெரித்துப்
புகட்டுமோர் காசெடைமேல் விலாவிற்பூச
தடமுடையக் கட்டுமாந்தங் கணபேதங்கட்
சாராதென்று மைக்கரனூர் சாற்றினூரே."
(இது பாலவாகடத் திரட்டிலுள்ள பாடம்.)
4. பொரமாந்தத்திற்கு இது 10-ம்பரிகாரமுறை (151-ம் பக்கம் பார்க்க-)

மிட்டத் திரிபலை இந்துப்போடு வெங்காரந் தானிவை
ஒவ்வொன்று ஐந்து வராகனிடை
கூட்டி நற்குமரி பாலில்அரைத்து மேல் கரைத்து எரித்து
உள்கொடுத்துத் தடவ நோயறுமே. (198)

எண்ணெய்.

இரு சீரகம் வெளிச்சப்பிசின் தான்றிக்காய்
ஈரவெங்காயச்சாறு
கறுப்பட்டி மிளகு இயலாமை ஓடு சிவதை
வரிசையுள்ள வசம்பதாகக் கடுகுரோகணி
அரத்தை வளர் சீந்தில்தண்டு பற்படகம் அசமதம்
கொத்தமல்லி கம்பிளிப்பிசின் வாகான வில்வப்பிசின்
[வலிய கஞ்சாங்கோரை
வரிகடுக்காய் வாள்புளிகள் இவை சரியாய்
பரிகு வெந்தயம் இரண்டு பங்கிட்டு சூர்ணம் பண்ணி
[விளக்கெண்ணெய்
வரியகுமரிச்சாறு அந்த எண்ணெயிற்பாதி வாரடவே
எரிக்கும் பதந்தனில் நிம்பப்பழச்சாறு ரெட்டிவார
பொருமலோடும் உப்புசமுண்டிய சுரங்கள்இவை
தீரும் போட்டி எண்ணெய் முலைப்பாலிற் கொடுக்கப்போய்
வயிறு கட்டு விடுமே. (199)

[1]கணமாந்தத்திற்கு (மருந்து)

புங்கும் புளி நொச்சி வேம்புடனே தலைமாம் பேரு
வேலிப்பருத்தி கருவேப்பிலை நாரத்தை
சங்கவுரி பொன்னுவாரை ஒவ்வொன்றொரு பிடிதானிலை
ஈர்க்கெடுத்தும் ஒரு சட்டிதனில் இட்டு

1. கணமாந்தத்திற்கு இது 4-ம் பரிகாரமுறை. இங்குள்ள பாட்டு பாலவாகடத்தில் பின்வருமாறு காணப்படுகிறது :—

"புங்குபுளி நொச்சில் மா வேம்போடொக்கப்
பொடுதலை வேலிக் கரு வேப்பிலை நாரத்தை
சங்கவுரி பொன்னவரைப் பிடி ஒவ்வொன்று
தானுமிலை ஈர்க்கெடுத்துச் சட்டியிட்டு
தங்கு ரோகிணியுமிந்தோமமு முடிந்து
தான்போட்டுத் தண்ணீரும் நாழி வார்த்து
அங்கெரித்து வற்ற முடிந்தம்மருந்தை
கரைத்துக்கொடு மாந்தகண மகன்று போமே."

தங்கு கடுகுரோகிணி இந்துப்பும் முடிந்து தான்போட்டு
தண்ணீர் நாழி வார்த்து
அங்காழக்காய் வற்றிமுடித்த மருந்தையளந் தரைத்துக்
கரைத்துக் கொடுக்கக் கணமாந்தத்தை அடக்கி
[விடுமே. (200)

## [1]மாந்தத்திற்கு (மருந்து).

சீந்திற்றண்டும் கடுக்காயும் சிவதைவேறும் களிப்பாக்கும்
[2]காந்தஞ் சுக்கு ரோகிணியும் கள்ளிச்சாறு
குங்கலாந்திட்டு
எந்துமுலையாளிந் நிரை எட்டொன்றுக்கிக் கொடுப்பீராய்
மாந்தமோடு சுரம் தீரும் வயிறுகழியுங்
[கண்டீரே. (201)

நன்றாரி சிறுகீரை காட்டுமல்லிகை
நாவலரே நடுப்
பொன்னுரு சங்குவேர் பாவட்டை
நீலி பொருந்து கொஞ்சி
என்னுருக் காய்கின்ற வட்டக்கிலுகிலுப்பை
இலை இவைகளெல்லாம்
இன்னார் தம்பிள்ளைகளுக் கியறத்தம்(?)பின்பு
வெருண்டோடு மாங்கள் மிகவும் நன்றே[3]. (202)

---

1. மாந்தத்திற்கு இது 8-ம் மருந்து (149-ம் பக்கம் பார்க்க.)

2. "காய்ந்த சுக்குரோகிணியுங் காயுந் நீரில் தகர்த்திட்டு
எந்துங்கையா யிந்நீரை யெட்டொன்றுக்கிக் கொடுப்பாயேல்
மாந்தமான சுரமும் போம்"
(பாலவாகட பாடம்.)

3. இப்பாட்டு பாலவாகடத்தில் பின்வருமாறு காணப்படுகிறது :—
"நன்னாரியுஞ் சிறுகீரை வநமல்லி நாவலிரண்டு
பொன்னுருஞ் சங்கம்வேர் பாவட்டை நீலிபொருந்து கொஞ்சி
எந்நாளும் காய்க்கின்ற வட்டக்கிலுப்பை இவைகளெல்லாம்
மின்னார் பிள்ளைக்கீய மாந்தகணம் விரண்டோடிடுமே."

## [1]வாந்திக்கு (மருந்து).

### மாந்தம்போம் வாந்திக்கு

வசம்புடனே மயிலிறகு சாம்பலாக்கி
வசமாகவோர் பிறகு(?)முலைப்பால் வார்த்து
கசமாக நறுக்கி யதன்பின்பு சற்றே காலமே
    தேனுமே துளியே குத்தி
நிசமாக சீரகமும் கிராம்புங்கூட்டி நிர்ணயமாய்
    நிமப்பித்து(?) மேலேதூவி
வசமாகவே அந்தமாந்தமெல்லாம் போராமமோடு
    வாந்தியும் போமே[2]. (203)

## பொர[3]மாந்தகணம் (மருந்து).

பெருவசம்பு ஓமம் புழுங்கலரிசி அவுரியது
    வேரு மோரஞ்சு கறுவறுத்து
மருவே காய்ச்சி வகையாய் இருத்து
    வருந்த போராமம் போம் மங்கி. (244)

---

1. வாந்திக்கு இது 3-ம் பரிகாரமுறை (61—63-ம் பக்கங்கள் பார்க்க.) இங்கு "மாந்தம் போம் வாந்திக்கு வசம்புடனே மயிலிறகு சாம்பலாக்கி" என்று ஏட்டுப்பிரதியில் வரிகள் தவறுதலாக மாற்றி எழுதப்பட்டிருக்கிறது. "மாந்தம் போம் வாந்திக்கு" என்பது மாந்தம் போராமம் இவற்றிற்கு என்றிருத்தல் வேண்டும். பிறகு "வசம்புடனே மயிலிறகு சாம்பலாக்கி" என்பது செய்யுளின் முதலடியைச் சேர்ந்த வரியாகும்.

2. இந்தச் செய்யுளில் ஐந்து அடிகள் அமைந்திருப்பதற்குக் காரணம் யோசிக்கவேண்டும்.

3. மாந்தத்திற்கு இது 8-ம் மருந்து (149-ம் பக்கம்.) போரமத்திற்கு இது 11-ம் மருந்து (152 ம் பக்கம்.) மாந்தகணத்தின் குறி குணங்களைப்பற்றி 17 முதல் 20-ம் பக்கம் வரையில் பார்க்க.

### [1]மாந்தகணத்திற்கு (மருந்து).

வெளிவேர் சுக்குடனே வெந்தியமும் வெள்ளுள்ளி
பாலைசேர வசம்பு ஓமம் விழி
நாளைபொன்று நீர்நாழிளெலி லென்றுய்(?) நீபருந்த(?)
மாருதம்போம் காரேனும் மேன்மொழியாய்
[காண. (205)

### [2]மாந்தம் பாலிகிருகைக்கு.

வேலிப்பருத்தி ஒரு பிடியும் விரும்பும் சுக்கு சடாமாஞ்சி
கோலவினுவும் வசம்புள்ளி குறுக்கி மிளகு
[மாமையோடு
சில ஓம சீரகமும் சிறுக வறுத்து நீர்வார்த்து
போலவுளுந்து நீர்வார்த்துப் போதுவிடிய
[குடிப்பீரானுல்
பால்மாந்தம் பால்கிருகை வகையுள்ளதுவும் போம்
[காணே[3]. (206)

### அதிசார சுவாசகாசத்திற்கு கிஷாயம்.

அஞ்சன்வேர் நெற்பொரியும் மாஞ்சிலோடு
அதிமதுரம் சர்க்கரை தேள்ளாவி யுண்ணக்
கொஞ்சனவே கொஞ்சு(பிள்ளை)க் காய்ச்சல் தீரும்
குயில்மொழியீர் இன்னுமொன்று கூறக்கேளாய்

---

1. மாந்தகணத்திற்கு இது 9-ம் மருந்து. இது சம்பந்தமான செய்யுள் பெரும்பாலும் வேறுவிதமாய் பாலவாகடத்தில் இவ்வாறு காணப்படுகிறது :—

"வேளைவேர் சுக்குடனே வெந்தயமும் வெள்ளுள்ளி
பாளை வசம்புபகரோமம்—வாள் விழியாய்
ஒன்ருகக் காய்ச்சியுடன் குழவிக்கீந்துவிடக்
கண்டவுடன் மாந்தம்போம் காண்."

2. மாந்தத்திற்கு இது 10-வது மருந்து.

3. இந்தப்பாட்டிலும் ஐந்துஅடிகள் இருப்பது யோசிக்கத்தக்கது.

தஞ்ச மெனிலதிவிடயந் தேனிற் கொள்ளத்
[1]தாக்குமது அதிசார சுவாசகாசம்
சஞ்சனலாபி குழல்மடவார் பிள்ளைக்கென்று
[வைத்திய நூல்
சிவனுரைக்குமாறு தானே. (207)

அதிசாரசுவாச வாந்திக்கு.

சங்கியுடன் திப்பிலியு மதிவிடயம் கூட்டி தேர்ந்த நெடுங்
குழந்தைக்குக் கொடுப்பீராகில்
இங்கிதமாய் சுரமோடு சுவாசம் வாந்தியோடும்
இன்னுந்தீரும் இன்னும் சொல்லக் கேளும்
தங்கிய ஆலமுகிள் நாவற்று நீரிலாமிச்சைவேர் காய்ச்சிக்
குழந்தைக்குக் கொடுப்பீராகில்
ஆங்கியனும் சுரகாசம் வாந்தியோடதிசாரம் தாக
மிவை அகலுந்தானே. (208)

[2]சிறுபாம்புக்கு (கடிக்கு மருந்து).

நித்தமெலிச் செவியும் முள்முருங்கை நல்வேரும்
திரிபலை ஓணுங்கொடி நீர்
உத்தகளவாய் விளங்கமெலந்.........வி மாந்தள
அத்திவளதாய் விளங்கம் பூச்சிவிழுந்தான்[3]. (209)

---

1. "தாகமுடனே அதிசாரஞ் சுவாசம்போகும். மஞ்சணவுங்குழல் மடவாய் பிள்ளைக்கென்று" (பாலவாகட பாடம்.)

2. மாந்தம், கணம் முதலிய நோய்களைப்பற்றிய விஷயங்களுக்கிடையில் சிறுபாம்பு விஷக்கடி, விஷம் முதலியதைக் கூறவேண்டிய சந்தர்ப்பம் என்னவென்று விளங்கவில்லை. இதற்கு முன்பே விஷயங்களை வரிசைக்கிரமமாகக் கூற வேண்டியதில் சில ஒழுங்கீனங்கள் காணப்பட்டன. இனி இதுமுதல் அவ்வொழுங்கீனம் வெகு அதிகமாகக் காணப்படும்.

3. இச்செய்யுளில் சில பிழைகள் காணப்படுவதோடு ஒரு அடியும் குறைவாயிருக்கிறது.

சிறுபாம்பு விஷமருந்து கேளீர் முருங்கை
இலை தன்னை ஞெப்பாய்
இடித்து வைத்து நாழி
நீரே வைத்து
நாலிலொன்ருய் ஏற்பக்காலமே கொடுத்த
இலையை வயிற்றிலே வைத்து
கோரப்பாய் கட்டச்செந்து விழுங்கொடிய
கிரி கிரிபாம்பு இதுவே[1]. (210)

## [2] ஆமக்கடுப்புக்கு (மருந்து).

கற்ருழை கொண்டுவந்து கடுகவே சமன்தூக்கி
இத்தைக்கேள் வெந்தயத்தோடு எலுமிச்சஞ்சாறு
[விட்டு
சுத்தமாய் எரித்துப் பின்னே சுகம்பெற பாலகருக்குச்
சற்றுநீ கொடுத்தாயாகுல் சகலமாம கடுப்புந்
[தீரும்[3]. (211)

## [4] மாந்தசன்னிக்கு (மருந்து).

கஞ்சாவேரும் ஊமத்தைக்கட்டி
கடியதிராயின் வேரும்
பஞ்சாஇந்த வேப்பெண்ணெய் பைய
வறுத்துப் பொடியாக்கி

---

1. இந்தப்பாட்டும் பெரிதும் ஒழுங்கீனமாயுள்ளது.

2. சிறுபாம்புகடி விஷயத்திற்கு அடுத்து ஆமக்கடுப்பு, மாந்த சன்னி முதலிய நோய்களேயும் பற்றிக்கூறும் சம்பந்தம் யாதென்று யோசிக்க வேண்டும்.

3. "கற்ருழைகொண்டு" என்கிற செய்யுள் பாலவாகடத்திரட்டின்படி முக்குக்கணத்திற்கு மருந்து முறையைக் கூறுகிறது ; அங்கே அது பின்வருமாறு காணப்படுகிறது :—

"கற்ருழை கொண்டுவந்து கழுவின சோறெடுத்து
எற்ருன வெந்தயத்தோ டெலுமிச்சம்பழச் சாறுவிட்டு
சுத்தமாய்க் காய்ச்சி பிள்ளே சுகம் பெற பாலகர்க்கு
சற்றுநீ கொடுத்தால் முக்குக்ணமது தரியாதென்றே."

4. மாந்தத்திற்கு இது 11-வது மருந்து. (156-ம் பக்கம் பார்க்க)

துஞ்சா நெருப்பில் புகை காட்ட தொற்றும்
சன்னி அத்தனையும்
மஞ்சார் குழலாயடிதொழுது மாந்தம்
போகுங் கண்டீரே. (212)

மாய்ந்து வேப்பெண்ணெய் வேளைவருமூமத்தை கஞ்சா
சேர்ந்திடு முருங்கையோடு சித்தர மூலங்
காய்ந்துவெள்ளுள்ளி வசம்பு கம்பளி [1]மஞ்ஞை இறகுப்
போர்ந்து நீர்க்கோழியண்டம் புகைத்தாந்திரிகம்
[போமே. (213)

## [2]சுரத்திற்கு (மருந்து).

ஏலமதிமதுரம் பர்ப்படகம் ஏற்ற
சீந்திலறுகு காந்தம்
சாலவில்வப் பழத்துடனே சமமாம்
பிச்சம்(?) வேப்பீர்க்கு
கோலிருநாழி நீர்விட்டு கொதிக்கக்
காய்ச்சி யுழக்காக்கி
பாலர்பெரியோர் மாந்தருக்கு
வருந்திக் கொடுக்க தாகம் போம். (214)

## [3](பழஞ்சுரத்திற்கு மருந்து).

அரிய தூதுவளை சிறுகாஞ் சொறி
வேரான சீந்தில் பர்ப்படகம்
பெரிய நொச்சி பேராமுட்டி
பின்னுஞ் சிற்றாமுட்டியுடன்

---

1. மஞ்ஞை = மயில்.

2. "ஏலமதி மதுரம்" என்னும் முறை தாகம் தீர்க்கும் மருந்தாக இருக்கிறது. பாலவாகடத்திரட்டிலும் தாகத்திற்கே இம்முறை கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இங்கு "சுரத்திற்கு" என்று தலையங்கமிடப்பட்டுள்ளது.

3. பழஞ்சுரத்துக்கு இது மருந்தென்று கூறப்பட்டிருந்தும், அவ்விதம் ஏட்டுப்பிரதியில் தலையங்க மேதும் காணவில்லை; பாலவாகடத்திரட்டில் இது "பழஞ்சுரத்துக்குக் குடிநீர்" என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

[1]கரிய கடுக்காய்தான கூட்டிக் கஷாயந்
தான் வைத்து தாணிருத்து
உரிய திப்பிலி பொடி தூவி உகந்து
கொள்ள பழஞ்சுரம் போமே. (215)

ஆமசுரத்திற்கு.

[2]உத்தாமணியும் பாவட்டை யுகந்தசங்கு காவட்டை
சித்தமுருங்கை நுணு(யீர்க்குஞ் சேரக்கூட்டுப்
[பொடுதலையும்
ஒத்த ஓமந் திப்பிலியுமுற்ற வசம்பு துளியோடும்
சுத்தமாகக் கருஞ்சீரம் சுகமாய்முடிந்தே யட்டிடுமே).

[3](நீகேள் கரண்டிதானேராகக் கொள்ளவே
வாகாய்க் கரப்பான் வகைதீரும்—தோகாய் கேள்)
சூலைக்கும் தான்கொடுக்கச் சொன்னர் வகைஅறிந்து
பாலிக்கும் பத்தியம் செய்யப்பா. (233)

---

1. "சிறிய கடுக்காய்தான்" (பாலவாகடத்திரட்டு.)

2. இந்தப் பாட்டில் "யீர்க்கும்" என்கிற இரண்டாவது அடியி லிருந்து நான்காம் அடி முடிவுவரையில் பாலவாகடத்திலிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்டது. இந்தப் பாட்டு முதல் ஓலைச்சுவடியில் மூன்று ஏடுகள் (78 முதல் 80-வது வரையில்) காணவில்லை. ஆகவே சில விஷயம் இடையில் (216 முதல் 232-ம் பாட்டு வரையில்) இங்கு விட்டுப் போயிருப்பதாய் அறிக.

3. ஓலைச்சுவடியில் இழந்துள்ள ஏடுகளில் போனதுபோக 81-ம் ஏட்டில் 233-ம் பாட்டின் கடைசி இரண்டு அடிகள் இருக்கின்றன ; அதற்கு முந்திய இரண்டு அடிகளையும் பாலவாகடத்திரட்டிலிருந்து கண்டறிந்து இங்கு சேர்த்திருக்கிறோம். இப்பாட்டின் ஆரம்பம் "நீ கேள் கரண்டிதான்" என்பது. கரப்பானுக்கு "செருப்படை எண்ணெய்" என்பதைக் கூறும் ஒன்பது பாட்டுகளில் இது இறுதிப்பாட்டு. அவ்வொன்பது செய்யுட்களையும் இந்த டிப்பணியில் எடுத்தெழுத வியலவில்லை ; அதன் முதற்பாட்டை மாத்திரம் இங்கு எடுத்து எழுதுகிறோம் :—

"செருப்பினடி யிரண்டோடு சேர் கிரந்தி நாயகம்
வெருக்கில் கிலக்கிழங்கு நொச்சில்—நெடுக்கஞ்சங்
குப்பியிலை சங்கோடு கொட்டைக் கரந்தையும்
செப்புங் கழல் துளசி சேர்."

மற்ற எழுப்பாட்டுகளையும் அப்புஸ்தகத்தில் கரப்பான் பகுதியில் படித்துப் பார்க்க.

(இதில் கிடைத்துள்ள வரையில் கரப்பானுக்கு இது 2-வது பரிகார முறை.)

### [1]கரப்பானுக்கு.

கரிசாலைவேரும் கம்பத்திருய் வேரும்
 கனத்த கருடன் கொடியுடனே
பொரிச்சால் பொரியும் பொரிகாரம்
 பூதக்கரப்பான் படையுடன்
நரிச்சா[2]றன்ன வசம்புள்ளி யெனவே
 கெட்ட கரப்பான்கள்
[3]மதிச்சால் தொண்ணூற்றுறும்
 மாண்டோமென்று போயினரே. (234)

### எட்டுவகை கரப்பானுக்கு.

[4]எண்வகைக் கரப்பான் இழந்திட வகையுள்ளி
 நீருள்ளி கருஞ்சீரகமும்
இயம்பிய பூதகரப்பானும் வடக்கிலுகிலுப்பை
 வேர் காட்டினில் பாகல்

---

1. கரப்பானுஞ் இது 3-வது பரிகாரமுறை.

2. "எரிச்சாலெண்ணெய் வசம்புள்ளி" (பாலவாகடத்திரட்டு.)

3. "மறுத்தால் தொண்ணூற்றுறு கரப்பான்" (பாலவாகடத்திரட்டு)

4. முன்பு கரப்பான் பதினெட்டுக்குள்ளவிதமே (131-ம் பக்கம்) இச்செய்யுளிலும் எண்வகை கரப்பான் எவையென்று குறிப்பிடவில்லை. இது சம்பந்தமாய் பாலவாகடத்திரட்டிலுள்ள பாடம் வருமாறு :—

"எண்வகைக் கரப்பானிகழ்த்திடக் கேளாயீருள்ளி கரியசீரகமும்
 இயம்பிய பூதகரப்பானுமீ வட்டக்கிலுப்பைவேர் காட்டினிற்
 [பாகல்
ஒண்டிய மூலமுடன் சதகுப்பையுயர் வெள்ளைக் காக்கணுன்
 ஓதிய தேவதாரமும் வசம்பு முள்ளறுகுட
னன்புள சீனப்பட்டையுஞ்சுத்தி வின்றிடும் வகைவகைப்பலங் கால்
 நாடு நேர்வாள விதையிருபதுபின் நற்சங்கங்குப்பி நீர் நாழி
அண்டரைத்ததில் சிற்றாமணக்கெண்ணெ யதுவொரு நாழி விட்ட
 டுந்த ஆமொரு காசாயுடல்தனிற் பூசவவையெட்டு மகலுமா
 [மென்றே."

(கரப்பானுஞ் இது 4-வது பரிகாரமுறை.)

ஒன்றிய மூலமுடன் சதகுப்பை உயர்வெள்ளைக்
　　காக்கணமூலம் மோதிய
தேவதாரம் நேர்வசம்பு உயர் சங்கு
　　வெள்ளறுகுடனே
நன்னிய சீனிப்பட்டைப் பிச்சுத்தினவன்றிடும்
　　வகை வகைப் பலங்கால்
நாடுநேர் வாள
　　விதை இருபதும்
பின்னல்ல சங்கங்குப்பிச்சாறு நாழியொன்று
　　அரைத்து அதில்
சிற்றாமணக்கெண்ணெய் இவை யொரு நாழி
　　இட்டு அருந்தஆமிரு
காசிடை உடலிற்பூச அவதின்
　　மடரு முப்புகலுவாயே(?) (235)

## [1]தலை மாந்தத்திற்கு.

[2]வேலிப்பருத்தி குப்பைமேனி வேளை
　　இரண்டு முலையுடனே
ஆலித்துண்ணும் கத்தரி இலை அஞ்சு
　　வகைக்குச் சாறுகொண்டு

---

1. தலைமாந்த குறிகுணம் :—

"தலையுங் கனத்தே யுடலூதிச் சரீரந்தனிலே வலியுண்டாம்
குலையும் வலித்துத் துள்ளிவிழும் குளிருஞ்சுரமும் வேர்வைவிடும்
சிலையின் புருவத்தலைகிமிரா சேட்டை மிகவே செய்விக்கும்
மலையினுயர்ந்த தனத்தாளே வாதைப்படுத்துந் தலைமாந்தம்"
(பாலவாகடத் திரட்டு.)

2. இதனடியில் வரும் இரண்டு பாட்டுகளும் பொதுவாக மாந்த நோய்க்கு பாலவாகடத்தில் கூறப்பட்டுள்ளன.

"வேலிப்பருத்தி மேனியுடன் வேளையீண்டு பொடுதலையும்
ஆலித்தின்னு மகத்தியிலையாறும் வதக்கிச் சாறு கொடு
கோலவசம்பும் ஆமையோடுங் குலவுமோமஞ் சுட்டரைத்துக்
காலிற்கையிற் றுவளையிட்டுக் கடுகக் கொடு மாந்தம்போம்."
(பாலவாகடத்திரட்டுப் பாடம்.)

கோலவசம்பு மாமைமயோடு கொடி
ஓமம் சுட்டரைத்து
காலில் தலையும் துவளையிட்டு கடுகக்
கொடுக்க மாந்தம் போமே. (236)

உத்தாமணியும் போய்மருட்டி
உகந்த சாணுக்கிலையுடனே
வித்தாரமுள்ள வெதுப்படக்கி
வெண்ணொச்சி இவைஆறும்
ஒத்தே வதக்கி சாறுகொண்டு உகந்து
வசம்பு சிறுதேக்கு
சற்றே ஆமைஓடுசுட்டு [1]சத்திக்கொடுக்க(?)
மாந்தம் போமே. (237)

## [2]உப்பு மாந்தத்திற்கு.

குப்பமேனியும் உப்பும் கசக்கியே கொள்ளச்
சாரமே காசிடை தானுமே
செப்பாகுமே உப்பலு மாந்தமும்
சீக்கிரத்திலே துறத்திவிடும்
தப்பினல் முக்காவேளையும் சுக்குடன் தக்க
ஓமம் வறுத்துடங்கையிட
ஒப்பில்லாதொரு உப்பலுமாந்தமும் ஓதுவார்கள்
உயர் தொழிலாணியே(?) (238)

## செரியா மாந்தம்.

[3]ஓமமுடன் கோஷ்டமும் சிற்றரத்தை உயர் வசம்பும்
கருக்கிட்டுக் கிஷாயமாக்கிச்
சாமமுடன் அருந்திடவே செரியாமாந்தமும் கழிச்சலுமே
போமென்று கருதிச்சொன்னுமே

---

1. "சாற்றிற்கொடு மாந்தம்போமே." (பாலவாகடத்திரட்டு)

2. உப்பு மாந்தக் குறிகுணம் :—
"தெளிந்த தாகமுஞ் சுரமுடன் பிதற்றலுஞ் சேரு மிக்க
களங்கமாயிரைந்துப் பிறப்பிக் கழிந்துடனே
வளர்ந்த வாந்தியு மூலையை நந்தாமலு மயக்கந்
தளர்ந்தாலுப்பு மாந்தமென்றறியாய் நீதானே."
(பாலவாகடத்திரட்டு.)

3. "ஓமமுடன் கனகோஷ்டங் உயர்வசம்பும்" (பாலவாகடபாடம்.)

சாமமுடனுப்பலும் போம் வலியும் தீர்ந்து [1]சதிருடனே
சொன்னதெல்லாம் செருக்கும் பிள்ளை
நாமமுள்ள சொல் கேட்டு நாமுரைத்தோம் நலமாகும்
தரணியோருக்கு நன்மைதானே[2]. (239)

### [3]நீர்மாந்தத்துக்கு (மருந்து).

நொச்சி இலை வேளைஇலை குப்பமேனி நுணாஇலை
பேய்மிரட்டி தும்பையோடு
பச்சிலை எல்லாம் வெதுப்பியேதான் பதமாக சாறு
மிகப் பிழிந்து கொண்டு
உச்சிதமாம் வசம்புள்ளி மிளகோடு ஓமமுகந்து
வருமுதல் சாற்றில் அரைத்துக் காய்ச்சி
நிச்சயமாய் பாலகர்க்குக் கொடுக்கவேதான் [4]நீர்மாந்தம்
ஏகுமென்று நித்தன் சொன்னான். (240)

### [5]போர்மாந்தத்துக்கு (மருந்து).

உத்தாமணியை அனல் தாக்கி ரசம் வாங்கி
பெத்தோரப் பாலில் சீரகமும் கடுகுரோகணியும்
வித்தாரமாக உரைத்து அருந்தவே பொரமாந்த மயக்கம்
[போம்
தாமரைபோல முகமுண்டாய் நலமாகும் மாந்தம்
[நாடாதே. (241)

---

1. "சதிருடனே யுண்டதெல்லாம் செரிக்கும் பிள்ளை" (பாலவாகடத் திரட்டு.)

2. நீர்மாந்தக் குறிகுணம் 18, 109-ம் பக்கங்கள் பார்க்க.

3. செரியாமாந்தத்தின் குறிகுணம் முன்பு 19, 110-ம் பக்கங்கள் பார்க்க.

4. "நீர்மாந்தம் போகு நித்தமுனி சொன்னாரே." (பாலவாகடத் திரட்டு.

5. போர்மாந்தத்துக்கு இது 12-ம் மருந்து (155-ம் பக்கம் பார்க்க.)

